# கல்கி

ஸ்பீடா...ஸ்லைஸா...ஸ்மார்ட்டா...



தீபாவளி சிறப்பிதழ்

KALKI • 18.10.2009 • ரூ.15.00 • 164 பக்கங்கள்

புத்தம் புதிய பூக்களாய் 4 தொடர்கள்

அதிக பக்கங்களுடன்...

# அருள்வாக்கு

# ஆனந்தம்!

அந்த ஆனந்தம் சூரிய வெளிச்சம்போல சர்வ வியாபகமாகப் பரந்து இருப்பது. ஆனால் நமக்கு அது தெரியவில்லை. மரத்தடியில் சூரிய வெளிச்சம் தெரியாத மாதிரி, மாயையின் நிழலில் இருக்கிற நமக்கு இந்த ஆனந்தம் தெரியவில்லை. மரக்கிளை ஆடும்போது இடுக்கு வழியே துளித் துளி வெளிச்சம் வருகிற மாதிரி கோபம், காமம், வீரம், பயம், சோகம் இத்யாதி உணர்ச்சிகள் ஆட்டம் போடுகிறபோது, ஆனந்தத்தின் ஒளி துளித் துளி நம்மேல் படுகிறது. நல்ல உணர்ச்சி, கெட்ட உணர்ச்சி எதுவானாலும் நாம் ஒன்றை உணருகிறோம் என்றால் அதற்கு ஆத்மாதானே அடிப்படை? அதனால் எந்த ரஸத்தை அனுபவித்தாலும், ஆத்மாவின் ஸ்வபாவமான ஆனந்தம் அதற்குள் கொஞ்சம் 'டால்' அடித்துக் கொண்டுதான் இருக்கும். இப்படியில்லாமல் மரத்தை விட்டு வெளியிலே வந்துவிட்டால், முழு சூரிய வெளிச்சம். கிளைகள் பலவிதமாக ஆடுகிறபோது, பல தினுசாக விழுந்த துளித் துளி வெளிச்சமெல்லாம் ஒன்றாகச் சேர்ந்த முழு வெளிச்சம் அதுதான்.

சூரிய வெளிச்சத்தில் கலர் இல்லை. அந்த மாதிரி சாந்தத்தில் தனியாக ஒரு உணர்ச்சி, ஒரு ரஸம் இல்லை என்பது ஒரு அபிப்ராயம். ஆனாலும் சூரிய வெளிச்சத்திலிருந்துதான் இத்தனை கலர்களும் வந்திருக்கின்றன. ஸ்பெக்ட்ராஸ்கோப்பில் சூரிய வெளிச்சத்தைப் பிரித்துப் (split) பார்த்தால் அதிலிருந்தே ஏழு கலர்களும் வருவதைப் பார்க்கலாம். ஸயன்ஸ் நிபுணர்கள் சூரிய வெளிச்சத்தில் இன்னின்ன கலர்கள் இன்னின்ன விகிதத்தில் இருக்கின்றன என்று அளவிட்டிருக்கிறார்கள். அதே விகிதத்தில், இந்த ஏழு கலர்களைக் கலக்கிறபோதெல்லாம், அத்தனை கலர்களும் சேர்ந்து வெள்ளையாகி விடுகின்றன!

ஒவ்வொரு மூலப் பொருளை எலிமென்டை எரிக்கிறபோது அது ஒவ்வொரு விதமான கலரில் ஜொலிக்கிறது. இதே மாதிரி கெமிகல்களை எரிக்கிற போதும், ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு கலர் இருக்கிறது. சாதாரண நெருப்புக் குச்சியின் நெருப்பு மஞ்சளாயிருக்கிறது; ஆனால் பச்சை, சிவப்பு மத்தாப்புக் குச்சிகள் பச்சையாகவும் சிவப்பாகவும் எரிகின்றன. பெட்ரோல் காஸை எரித்தால் நீலமாக ஜ்வாலை வீசுகிறது. மயில் துத்தத்தை எரித்தால் பச்சைப் பசேல் என்றிருக்கிறது. எந்தெந்த எலிமென்டை எரித்தால் ஏழு வர்ணங்களில் ஒவ்வொன்றாக ஜ்வாலை வீசுமோ அந்த எலிமென்ட்கள் எல்லாம் சூரிய மண்டலத்தில் இருக்கின்றன; அவை எல்லாம் சேர்ந்து எரிவதால்தான் மொத்தத்தில் அது கலரே இல்லாத சுத்த வெளிச்சமாயிருக்கிறது என்று



ஸயன்ஸ் நிபுணர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். இந்த எலிமெண்ட் மட்டுமின்றிப் பூலோகத்தில் அதிகம் காண முடியாத ஹீலியம் (Helium) என்ற மூலப்பொருளும் சூரியனில் இருப்பதாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள். லாடின் பாஷையில் ஹேலியோஸ் என்றாலே சூரியன் என்று அர்த்தம். சூரியனை மையமாகக் கொண்டுள்ள நம்முடைய பிரபஞ்சத்தையே இதனால்தான் 'ஹீலியோ-ஸெண்ட்ரிக்' என்று சொல்கிறோம். கடைசியில் இந்த 'ஹீலியம்' என்ற வார்த்தை எங்கேயிருந்து வந்தது என்று பார்த்தால் சம்ஸ்கிருதத்திலிருந்துதான். சம்ஸ்கிருதத்தில் 'ஹேலி:' என்றால் சூரியன். இதிலே வேடிக்கை, இந்த ஹீலியம் எரியவே எரியாது - Non-inflammable என்பார்கள். அது ரொம்ப இலேசான வாயு.

**எந்த ரஸத்தை அனுபவித்தாலும், ஆத்மாவின் ஸ்வபாவமான ஆனந்தம் அதற்குள் கொஞ்சம் 'டால்' அடித்துக் கொண்டுதான் இருக்கும்.**

நவரஸத்தில் ஆரம்பித்து இந்த சூரியன் கதை எல்லாம் எதற்கு என்றால், விஷயத்துக்கு வருகிறேன். எப்படி ஒரு கலரும் இல்லாத சூரிய வெளிச்சத்தில்தான் அத்தனை கலர்களும் பிறக்கின்றனவோ, அத்தனை கலர்களையும் வெளிவிடுகிற மூலப் பொருள்கள் எல்லாம் இருக்கின்றனவோ, அப்படியே ஒரு உணர்ச்சியும் இல்லாத சாந்தத்தில்தான் அத்தனை உணர்ச்சிகளும் பிறந்திருக்கின்றன; மற்றதெல்லாம் எரியும்போது ஹீலியம் எரியாததுபோல, அது மட்டும் எந்த உணர்ச்சியாலும் பாதிக்கப்படாமல் பரம லேசாக இருக்கிறது.

சாந்தமாக இருக்கிறபோது எங்கு பார்த்தாலும் பரவியுள்ள ஒரே ஆனந்த ஸாகரம்தான். அந்த ஒன்றுதான் மற்ற ரஸங்களாக இருக்கிறபோது துளித் துளி ஆனந்தத்தைத் தாற்காலிகமாகக் கொடுக்கிறது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**
உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**
வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**
தொலைபேசி : **044 - 4343 8888**
தொலைநகல் : **044 - 4343 8899**

**ஆசிரியர் குழு :**
**044 - 4343 8822**
kalki@kalkiweekly.com

**விளம்பரப் பிரிவு :**
**044 - 4343 8811**
marketing@kalkiweekly.com

**சந்தா பிரிவு :**
**044 - 4343 8833**
subscription@kalkiweekly.com

**விற்பனை பிரிவு :**
**044 - 4343 8844**
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
**www.kalkionline.com**

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
**www.sangapalagai.com**

**சந்தா விவரம் (ஒரு வருடம்) :**
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

பளிச்சென்ற தோற்றம்; தெளிவான சிந்தனை; அழகான பேச்சு; இவற்றுக்கு டீன் ஏஜ் வடிவம் வரைந்தது போல இருக்கிறார் கமல்ஹாசனின் மூத்த மகள் ஸ்ருதி ஹாசன். அமெரிக்கா சென்று இசை பயின்று வந்தவர். ஒரு இசை ஆல்பம் வெளியிட்டிருக்கிறார்; ஒரு தமிழ்ப் படத்துக்கு இசை அமைத்திருக்கிறார்; ஹிந்தியில் ஒரு படம் நடித்துவிட்டார்; அடுத்து என்ன? எல்டாம்ஸ் ரோடு அலுவலகத்தில் சந்திக்கச் சென்றபோது, புறப்பட்டுக்கொண்டிருந்த கௌதமியை வழியனுப்பி வைத்துவிட்டு, உள்ளே நுழைந்த கமலிடம் கொஞ்ச நேரம் பேசிவிட்டு, ஜிலீர் புன்னகையோடு வந்தார் ஸ்ருதி...

**நடிப்பு உங்கள் ரத்தத்தோடு கலந்திருப்பதாக நினைக்கிறீர்களா?**

''அதிலெல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை; நான் வளர்ந்த சூழ்நிலை

# "நடிப்பு என் ரத்தத்தில் இல்லை!"

## - ஸ்ருதி ஹாசன்

கிரியேட்டிவிடியை ஊக்குவிப்பதாக இருந்தது. அப்பாவின் நடிப்புத் திறமை, ஜீனில் இருந்து வந்தது என்றா சொல்ல முடியும்? அவரது கிரியேட்டிவிடியை, திறமையை ஊக்குவிக்கும் சூழ்நிலை அமைந்ததால்தானே இந்த அளவுக்கு வர முடிந்தது? அப்பாவின் கூடப் பிறந்தவர்கள், அவர்களின் குழந்தைகள் எல்லோருமே கிரியேட்டிவாக இருப்பதற்கு வளர்ந்த சூழ்நிலைதான் காரணம்.''

**கமல் என்ற பன்முகப் பரிமாணம் கொண்ட மனிதரிடமிருந்து கற்றுக் கொண்டது?**

''அவருடைய முழுமையான டெடிகேஷன். ஒருவரது வாழ்க்கையில் எப்போதுமே சிகரத்திலேயே இருப்பது சாத்தியமில்லை. ஏற்றத்தாழ்வுகள் சகஜம். ஆனால் அதைப்பற்றி துளியும் கவலைப் படாமல், தான் செய்யும் வேலை எதுவானாலும் அதை முழுமையான டெடிகேஷனுடன் செய்வது அப்பாவின் பழக்கம். அந்தப் பழக்கம் என்னையும் தொற்றிக் கொண்டது.''

**அம்மாவாக, சரிகா உங்களுக்கு என்ன கற்றுக் கொடுத்தார்?**

''நடிப்பு அவருக்கு மிகவும் பிடித்த ஒரு விஷயம். நடிப்பதை விட்டுப் பல வருடங்களுக்குப் பிறகு மீண்டும் நடிக்க வந்தபோதும், தான் ஒரு மிகத் திறமையான நடிகை என்பதை நிரூபித்தார்.''

**அம்மா சரிகா?**

''ஐ லவ் மை மதர்; பட் ஐ டோன்'ட் மிஸ் ஹர். சொல்லப்போனால், வாழ்க்கையில் எனக்குக் கிடைக்காமல் போகிற விஷயங்களை நான் ஒரு இழப்பாக நினைப்பதில்லை.''

**ரோல் மாடல் யார்?**

''யாருமில்லை''

**அப்பா கமல்கூட உங்கள் ரோல் மாடல் இல்லையா?**

''இல்லை; அவர் எனக்குப் பல விஷயங்களைக் கற்றுக் கொடுத்த குரு.''

**வாழ்க்கையை எப்படிப் பார்க்கிறீர்**

கள்?

''வாழ்க்கை என்பது எனக்குக் கிடைத்துள்ள ஒரு வாய்ப்பு. அந்த வாய்ப்பைப் பயன் படுத்திக்கொண்டு, எனக்குப் பிடித்த விஷயங்களையெல்லாம் செய்யணும். கிரியேட்டிவிடி வாழ்க்கையின் அடிப்படையாக இருக்க வேண்டும்.''

**உங்கள் அப்பாவுக்கு நன்றாகத் தமிழ் தெரியும்; அம்மாவுக்கு நன்றாக ஹிந்தி தெரியும். உங்களுக்கு?**

''நான் ஸ்கூலில் தமிழ் படித்தேன். எனக்குத் தமிழ், ஹிந்தி இரண்டுமே எழுதப் படிக்கத் தெரியும். ஆனால் என்னுடைய தலைமுறையைச் சேர்ந்த எல்லோரையும் போல எனக்குச் சௌகரியமான மொழி இங்கிலீஷ்தான். இன்னும் நன்றாகத் தமிழ் கற்றுக்கொள்ளணும் என்பது என் ஆசை.''

**ஒரு இசை ஆல்பம் வெளியிட்டீர்கள்; திடீரென்று ஹிந்தியில் நடிப்பதற்குப் போய் விட்டீர்கள். அப்புறம் உன்னைப் போல் ஒருவனுக்கு இசை அமைக்கிறீர்கள். உங்கள் எதிர்கால லட்சியம் என்ன?**



"நான் என்னவாக வரவேண்டும் என்பதில் குழப்பம் எதுவுமில்லை. மக்களை என்டர்டெய்ன் செய்வதுதான் என் லட்சியம். அதை ஒன்றுக்கு மேற்பட்ட வழிகளில் செய்யலாம். எனினும் இசைக்கு நிறைய முக்கியத்துவம் கொடுப்பேன். அதே சமயம் சினிமாவின் பல்வேறு துறைகளிலும் என்னை ஈடுபடுத்திக் கொள்வேன்."

**காதல்?**

"வாழ்க்கையில் மிக முக்கியமான விஷயம் காதல். அது சக்திவாய்ந்த உணர்வு. நமக்கு நம் மீது, குடும்பத்தின் மீது, சமூகத்தின் மீது, நாட்டின் மீது, உலகத்தின் மீது காதல் இருக்கலாம்."

**கல்யாணத்துக்குக் காதல் அவசியமா?**

"ரொம்ப அவசியம்; காதலித்து விட்டுக் கல்யாணம் செய்து கொள்ளலாம்; அல்லது கல்யாணம் செய்துகொண்டு அப்புறம் காதலிக்கலாம்."



**"அவரது கல்யாணம்; அவரது அனுபவம்; அது பற்றி நான் ஏன் கருத்து சொல்ல வேண்டும்?"**

**கல்யாணம் என் வாழ்க்கையில் நடந்து விட்ட தவறு என்கிறாரே கமல்?**

"அவரது கல்யாணம்; அவரது அனுபவம்; அதன் அடிப்படையில் அவர் சொன்ன விஷயம் அது; அது பற்றி நான் ஏன் கருத்து சொல்ல வேண்டும்? என் கல்யாணம் பற்றி நான் இப்போது சிந்திக்கவில்லை. தட்ஸ் ஆல்."

**இந்த நாட்டின் குடிமகளாக தேர்தலில் வாக்களித்திருக்கிறீர்களா?**

"இல்லை; ஆனால் கண்டிப்பாக அடுத்த முறை வாக்குச் சாவடிக்குப் போவேன். யாருக்கும் வாக்களிக்க விரும்பவில்லை என்ற என் கருத்தைப் பதிவு செய்துவிட்டு வருவேன்."

**கடவுள் நம்பிக்கை உண்டா?**

"எனக்குக் கடவுள் நம்பிக்கை உண்டு. ஆனால் மதச்சார்பு நிலை கிடையாது. ஆன்மிக ஈடுபாடே அதிகம் என்று சொல்ல வேண்டும்.

**கமல் நடித்த படங்களிலேயே மிகவும் பிடித்தது?**

"மகா நதி. அதில் அவருடைய நடிப்பு நேர்மையாகவும், யதார்த்தமாகவும் இருக்கும். மகனாக, கணவனாக, தந்தையாக, தொழிலதிபராக நிறைவான பங்களிப்பைச் செய்திருப்பார்!

**- எஸ். சந்திரமௌலி**

படங்கள் : **ஸ்ரீஹரி**






Dove

# மெகா சீரியல் வெடி!

"சாதாரண வெடி மாதிரிதான் இருக்கு. இதுக்கு இவ்வளவு விலை சொல்றீங்க? அப்படி என்ன விசேஷம் இதிலே?"

"உங்க வீட்டு முன்னாலே வெடிச்சு குப்பையெல்லாம் பக்கத்து வீட்டு வாசலில் விழும்."

- தீபா

"ஹலோ... உங்களுக்கு என்ன வேணும்... கத்தி காட்றீங்க?"

"சத்தமா... தீபாவளி இனாம் கொடுய்யா!"

- பா.து.பிரகாஷ்



"இது மெகா சீரியல் வெடி... இப்போ பத்தவச்சா அடுத்த தீபாவளி வரை வெடிச்சுக்கிட்டே இருக்கும்."

தேனி முருகேசன்

"உங்க வீட்டுத் தீபாவளிப் பலகாரம் நல்லாயிருக்குன்னு சொன்னா எல்லாம் கடவுள் செயல்னு சொல்றியே ஏன்?"

"நான் சமையலைக் கடவுளா மதிக்கிறேன்."

- தேனி முருகேசன்



# Celebrate this festive season at home.

# Your own home.




**Presenting home loans with interest rates fixed for 3 years.** This festive season, surprise your loved ones with a house you can finally call home. With special festive home loans on reduced interest rates.

Offer valid until 31 October 2009.

| Amount | EMI per lakh |
|---|---|
| Up to Rs. 50 lakhs @ 8.50%* (fixed for 3 years) | 869/- |
| Above Rs. 50 lakhs @ 9.25%* (floating) | 916/- |

*For repayment period of 240 months. Conditions apply.

**Union Bank** of India

*Good people to bank with*

For information and details, call toll free on **1800222244** or log on to www.unionbankofindia.co.in

# ராஜா சந்திரசேகர் கவிதைகள்

## குழந்தை அருவி

தான் வரைந்ததைக் காட்டிக்
கேட்கிறாள் சிறுமி

அருவி என்கிறார் அப்பா

ஓவியத்தை மேல்கீழாக்கி
என்ன என்கிறாள்

இது தப்பு என்கிறார்

தலைகீழாய் யோகா
செய்யும் அருவி என்கிறாள்
சிரித்தபடி

தூக்கிக் கொஞ்சுகிறார் தந்தை
குழந்தை அருவியை

## ஒரு நடை பயணத்தில்...

ஒரு நடை பயணத்தில்
பேசிக் கொண்டு போனார்கள்
தந்தையும் மகனும்

வானத்தில் சிறகடிக்கும் பறவை
உனக்குத் தெரிகிறதா

இல்லை எனக்கு
வானம் ஒரு
பறவையின் சிறகாகத்
தெரிகிறது

## மலையின் கருணை

தற்கொலை உச்சிக்கு
வந்தவனை
இறங்கிப் போகச்
செய்கிறது
மலையின் கருணை

## அப்பாவின் ரெயின்கோட்

தந்தையின் ரெயின்கோட்டில்
போகும் மகன் உணர்கிறான்
அப்பா நனைவது போன்று

பரிசுத்தமான




# உங்கள் உலகில் எங்களை அறிமுகம் செய்யுங்கள்.

## உங்களை நாங்கள் உலகிற்கே அறிமுகம் செய்கிறோம்.

நீங்கள் புதிய பேர்ஸை முயற்சி செய்து பாருங்களேன். உங்கள் குழந்தையுடன் உங்களுக்கு இருக்கும் உறவு போலவே, உங்கள் சருமத்தையும் பரிசுத்தத்தில் புன்னகைக்க செய்தால், அதைப்பற்றி அறிய ஆவலாக இருக்கிறோம்.

பேர்ஸ் உடன் உங்களுடைய அனுபவத்தை எங்களுக்கு எழுதி அனுப்புங்கள். உங்கள் செல்லத்துடன் இருக்கும் உங்கள் ஃபோட்டோவுடன் ஒரு காலி பேக்கை அனுப்பி வையுங்கள். **எங்கள் அடுத்த பிரிண்ட் விளம்பரத்தில் அதை வெளியிடுவோம்.**

மேலும் விவரங்களுக்கு லாக் ஆன் செய்யுங்கள் www.masoompears.com.

உங்கள் நுழைவுகளை நவம்பர் 20, 2009 அன்று அல்லது அதற்கு முன் அனுப்பவும்:
Masoom Pears, C/o Alpha Data Centre, PO Box No. 3905, Girgaum HPO, Mumbai 400 004.



# கல்கி



2009 அக்டோபர் 18
விரோதி ஐப்பசி 1
மலர் : 68
இதழ் : 12

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## தன்னம்பிக்கை மலரட்டும்; சுயமரியாதை பெருகட்டும்!

ஒரே நாளில், சென்னை மாநகரின் பல்வேறு இடங்களில் மூன்று பள்ளி மாணவிகள் தற்கொலை செய்துகொண்டனர் என்கிற செய்தி பரிதாபகரமானது; நமது கல்வித்திட்டத்தின் அர்த்தமற்ற கொடுமையைப் பிரதிபலிப்பது. பெற்றோரும் சமூகமும் எதிர்பார்க்கும் அளவுக்கு மதிப்பெண்கள் பெற இயலாது என்ற அச்சத்தில் விளைந்தவையே இந்தத் தற்கொலைகள்! இதுபோன்ற அவலங்கள் தமிழகமெங்கும் அவ்வப்போது நிகழத்தான் செய்கின்றன.

பள்ளிப்படிப்பில் ஓர் ஆண்டு தோல்வி அடைவதை மானப் பிரச்னையாக்குவது நமது சமூகத்தின் முட்டாள்தனம் எனில், பாடத் திட்டத்தையும் பரீட்சையையும் பயமுறுத்தும் அனுபவங்களாக மாற்றியிருப்பது நமது கல்வித் திட்டத்தின் மடத்தனம். இந்தப் போக்கிலிருந்து சற்றே மாறி, ஆரம்பக் கல்வியில் செயல்முறை சார்ந்த கற்பித்தலும், அனைத்து வகுப்புகளுக்குமான சமச்சீர் கல்வித் திட்டமும் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது என்பது சற்றே ஆறுதல்தான்.

ஆனால், எந்தக் கல்வித் திட்டமுமே இரு விஷயங்களை முக்கியமாக கவனத்தில் கொண்டால்தான் வெற்றி பெற முடியும்:

முதலாவது, கல்வித் திட்டம் சமச்சீராக இருக்கலாமேயொழிய மாணவர்கள் சமச்சீராக - அச்சில் வார்த்தது போன்ற ஆற்றலுடன் - இருக்க மாட்டார்கள்; இருப்பது சாத்தியமில்லை. இரண்டாவதாக, தன்னம்பிக்கையூட்டி, தனது சொந்தக்காலில் ஒருவனை நிற்கச் செய்யாத கல்வியினால் எந்தப் பயனும் இல்லை!

மாணவர்களின் சிந்தனையும் திறனும் வேறுபடுவதற்கு ஏற்ப, ஆரம்ப நிலையிலேயே தங்களுக்குத் தகுந்த பாடங்களையும்




பயிற்சிகளையும் தேர்வு செய்து கொள்ளும் உரிமையும் வசதியும் கட்டாயம் அவர்களுக்கு வழங்கப்பட வேண்டும். ஆசிரியர்களும் இதை நன்கு உணர்ந்து செயல்படுத்தும் வகையில் பயிற்றுவிக்கப்பட வேண்டும். வகுப்பை ஒரு மாணவ மந்தையாக அணுகுவதற்குப் பதிலாக, ஒவ்வொரு மாணவனையும் தனி நபராகக் கண்டு, எடை போட்டு, அவன்/அவள் அறிவுப்பெருக்கத்துக்கு வழிசெய்து தருபவரே சிறந்த ஆசிரியர்.

பாடத் திட்டத்தின் ஓர் அம்சமாகவே கைத்தொழில் பயிற்சியையும் அளிக்கும்போது, அதில் திறமைபடைத்த மாணவர்கள் அத்துறையில் முன்னேறுவதற்கான அஸ்திவாரம் அமைக்கப்படுகிறது. ஏட்டுக் கல்வியில் நாட்டம் உள்ள மாணவர்கள் மட்டுமே தொடர்ந்து உயர்நிலைகளில் அதனை மேற்கொள்ளலாம். கைத்திறன் மேம்பாட்டில் ஆர்வம் உள்ள மாணவர்கள் அதிலேயே ஆழங்கால்பட்டு, அதற்கு அவசியமான ஏட்டறிவு மட்டும் புகட்டப் பெற்று, முழுமையுறலாம். இதன் மூலம் நாட்டில் பெருகிவரும் கைத்திறனாளிகளின் பற்றாக்குறையும் நீங்கும்; சுய வேலைவாய்ப்பும் பெருகும். உடலுழைப்பு கௌரவக் குறைவானதல்ல என்ற உண்மை புரியும். சுயமரியாதை பெருகும்; தன்னம்பிக்கை மலரும். தற்கொலை போன்ற விபரீதங்களும் தவிர்க்கப்படும்.

தன்னம்பிக்கை, சுயகௌரவம், தன்னிறைவு ஆகியன உண்டாகிறபோது, சமூகத்துக்கான பங்களிப்பு வெகு இயல்பாக ஆரம்பமாகும். இந்தச் சமூகப் பங்களிப்பை மேம்படுத்தத்தான் மாணவர்களுக்கு அறக் கல்வியும் ஆன்மிகக் கல்வியும் அவசியப்படுகின்றன. அவற்றை 'மதம் சார்ந்த பாடங்கள்' என முத்திரை குத்தி ஒதுக்குவதை நிறுத்திவிட்டு, அவை மானுடப் பாடங்கள் என்பதை உணர்ந்து பாடத்திட்டத்தில் அவற்றையும் சேர்க்க வேண்டும். வருங்காலத் தலைமுறை, பொருள் நலத்துடன் மன வளமும் பெற்று உயரட்டும்! ●




**மு**தல் தொகுப்பு வெளிவருவதற்குள்ளாக ஆங்கில வார ஏடான வீக் வார ஏட்டின் மூலம் சிறந்த எழுத்தாளராக அறியப்பட்ட அஜயன்பாலா இலக்கியச் சிந்தனை மற்றும் தமிழ்நாடு அரசின் சிறந்த நூலுக்கான பரிசு ஆகியவற்றைப் பெற்றவர். இவர் பைசைக்கிள்தீவ்ஸ் திரைக்கதை மற்றும் உலகப் புகழ் நடிகர் மார்லன் பிராண்டோவின் சுயசரிதம் போன்ற மொழிபெயர்ப்பு நூல்களையும் உலக சினிமாவின் வரலாறு மௌன யுகம் என்ற ஆய்வு நூலையும் எழுதியுள்ளார்.

# பகல் மீன்கள்

**தே**ன்மொழிக்குக் கோபம் சட்டென பொத்துக்கொண்டது.

''இல்லை... நீங்க என்னைச் சட்டுனு இப்படி தொட்டது தப்பு.''

''ஏய் இதுல என்ன தப்பு..?''

''நானும் உங்களை லவ் பண்றேன்னு சொல்லவேயில்லை. பிடிச்சிருக்குன்னுதான் சொன்னேன்... அதுக்குள்ள எப்படி நீங்க என் கையைத் தொடலாம்?''

''அதான் பிடிச்சிருக்குன்னு சொல்லிட்ட இல்லை? அதுக்கு மேல லவ் பண்றேன்னு வேற சொல்வாங்களா?''

''ஆமாம். பிடிச்சிருக்குன்னு சொல்றதுக்கும் லவ் பண்றதுக்கும் இடையில 300 மைல் டிஃப்ரன்ஸ் இருக்கு! இதுவே உங்களுக்குத் தெரியலன்னா அப்புறம் உங்களை எப்படி நான் லவ் பண்ணி குப்பையைக் கொட்டி... நான்சென்ஸ்!''

அவன் எழுந்து கொண்டான்...

''போடி இவளே!... நாலு மாசம் என் பின்னாடி பைக்குல சுத்தினப்ப எத்தனை தடவை என் மேல சாஞ்சிருப்ப! அப்பல்லாம் வராத இது இப்ப என்னடி வந்துடுச்சு...''

''அப்ப நாம ஃப்ரண்ட்ஸ்... அதுவேற. இப்ப நீங்க எங்கிட்ட ப்ரொபோஸ் பண்ணியிருக்கீங்க... இதுக்கும் அதுக்கும் நிறையவே டிஃப்ரன்ஸ் இருக்கு...''

''இங்க பார்றா... புதுக் கதையா இருக்கு! உலகம் முழுக்க ஃப்ரண்ட்ஸ்னாலே கொஞ்சம் நாகரிகமா டிஸ்டன்ஸ் கீப் பண்ணுவாங்க... பட் லவ்வர்ன்னா தொட்டுக்கலாம், பழகிக்கலாம்னு சொல்லுவாங்க. நீ என்னடான்னா அப்படியே உல்டாவா சொல்ற. நான் ஒண்ணும் கேனையன் கிடையாது!''

''இல்லை... இல்லை... எல்லாமே வேற வேற... அததுக்கு தனித்தனி லிமிட்டேஷன்ஸ் இருக்கு. ஃப்ரண்ட்ஷிப்ல கைகுலுக்குறதுக்கும், லவ்வரோட கைகோக்கறதுக்கும் இடையில ஆயிரத்தெட்டு எனர்ஜி டிஃப்ரன்ஸ் இருக்கு. இதெல்லாம் புரிஞ்சுக்க முடியாத உன்னை நான் எப்படி லவ் பண்ண முடியும்?''

**அ**வன் சட்டென எழுந்து கொண்டான். ''இங்க பாரும்மா சவுகார் ஜானகி, இப்பவே நீ ஆயிரத்தெட்டு ரூல்ஸ் பேசற... இதுக்கு மேல உன்னைக் காதலிச்சு கல்யாணம் பண்ணி குடும்பம் நடத்துறதுக்குள்ள.... ஸ்ஸ் ப்பா... ஆளை விடு சாமி தெரியாத்தனமா உங்கிட்ட ப்ரொபோஸ் பண்ணிட்டேன். மன்னிச்சுக்க தாயே.''

திரும்பி வேகமாக, ஆளே இல்லாத மேடான புல்வெளியில் அவன் ஓடிக்

கொண்டிருந்தான். அவன் பின்பக்கம் இத்தனை கவர்ச்சியாக இருக்கும் என்பதை அவன் எதிர்பார்க்கவில்லை. கச்சிதமான இடுப்பில் சரியாகப் பொருந்திய ஜீன்ஸும் வெள்ளை அரைக்கை ஷர்ட்டும் வசீகரமாக இருந்தன. அதற்கும் மேலாக அவன் பின்னந்தலையில் அசைந்து செல்லும் கருட்டை முடி.

இப்படி ஒருவன் தனக்குக் காதலனாக கிடைக்கமாட்டானா என்றுதானே இத்தனை நாளாக ஏங்கிக்கொண்டிருந்தோம். கடைசியில் இவனையும் இப்படி விட்டு விட்டோமே?

காதல் தொடர்கதை 1



தேன்மொழிக்குச் சட்டென நூலறுந்தது. உள் மனசு வலித்தது.

அவனைக் கூப்பிடவேண்டும் போல் தோன்றியது.

சட்டென எழுந்து கையை நீட்டி அழைத்தாள். வாய்வரைக்கும் வந்த அவன் பெயர் சட்டென மறந்து போனது.

எவ்வளவோ யோசித்துப் பார்த்து ஞாபகத்துக்குள் குடைந்தாள். மூன்று மாதம் பைக்கில் சுற்றியதாகச் சொன்னானே?

எப்படி அவன் பெயர் இவ்வளவு சீக்கிரம் மறந்து போகும்? கூப்பிடலாமா...

புல்வெளியின் மேட்டில் மறுபுறம் மெல்ல அவன் தலை கொஞ்சம் கொஞ்சமாக இறங்கிக்கொண்டிருந்தது.

இவள் கையை அசைத்துக் கொண்டிருந்தாள்.

அய்யோ இன்னும் சில நொடிகள் தான்.... அவன் பெயர்.... ம்ம்ஹூம்..

தேன்மொழிக்குக் கண்கள் கலங்கின.

அவன் பெயர் முன்பு ஒரு முறை இப்படி மறந்து போனபோது மீண்டும் ஞாபகம் வந்த நொடியில் அதனை கைப்பையில் ஒரு துண்டுச் சீட்டில் எழுதி வைத்த ஞாபகம். கைப்பையைத் துழாவிக் கொண்டே அவனைப் பார்த்தாள் தலை மறைந்துகொண்டே இருந்தது.

சட்டென துண்டுச் சீட்டு கிடைத்தது. பிரித்துப் படித்தாள். புரியாத இரண்டு ஆங்கில எழுத்துக்களாக இருந்தன.

என்ன எழுத்து அது? அவள் யோசிக்கும் போதே...

''கரம் சாயே... கரம் சாயே...'' குரல் மூளைக்குள் கடந்து போனது..



**யா**ரோ தோளை உசுப்ப கண் விழித்தவளுக்கு இப்போதுதான் தான் கண்டது வெறும் கனவு என்ற முழு நினைப்பும் வந்தது. ரயில் வேகமாக ஓடிக்கொண்டிருப்பதை உணர்ந்தாள். கனவுதான் என்றதும் ஒருவகையில் வலி நீங்கி மகிழ்ச்சி அலையாக மனத்தை நிரப்பினாலும் வெறுமை தன்னைச் சூழ்ந்திருப்பதை முழுமையாக தேன்மொழி உணர்ந்திருந்தாள். போர்வையை விலக்கி சற்றுக் குனிந்து ஜன்னல் வழியாகப் பார்த்தாள். நன்றாக விடிந்திருந்தது. விசாகப்பட்டினம் இன்னும் சில மணி நேரங்களில் அவளை வாரி அணைத்துக் கொள்ள நெருங்கிக் கொண்டிருப்பதை உணர்ந்தாள். ரயில் அப்போதுதான் ஏதோ ஒரு ஸ்டேஷனைக் கடந்திருக்கும் போல. புதிதாகச் சிலர் பெட்டி படுக்கையுடன் தடுமாறிக்கொண்டிருந்தனர். பேக்கில் இருந்து

**ஆல்பத்துல பார்க்கற பாப்பாக்கள் அழகா? ஆல்பம் பார்க்கிற பாப்பா அழகா? சொல்லுங்க பார்க்கலாம்!**

# ஸின்த்தால் சின்ன பேக்

# இப்போது ரூ.6-ல்







அம்மா சொல்றாங்க இது சருமத்துக்கு நல்லதுன்னு
மேலும் அப்பா சொன்னாங்க அற்புதமான
நறுமணமுள்ளதுன்னு டாக்டர் ஆன்ட்டி சொன்னாங்க
இதை எல்லோரும் உபயோகிக்கணும்னு. அதனாலதான்
ரூ.6/-ல் நான் பெறறேன் என்னோட சின்ன ஸிந்தால்.

தலைமுறை தலைமுறையாக உங்கள் ஸ்கின் ஸ்பெஷலிஸ்ட்

பிரஷ்ஷையும் பேஸ்டையும் ஃபேஸ் வாஷையும் எடுத்துக்கொண்டு, கம்பியில் கால்வைத்துக் கீழே இறங்கி, ஹீல்ஸைத் தேடினாள். அவளது முழங்கால் அளவான லெவிஸ்ட்ராஸ் ஜீன்ஸ், இறுக்கமான ரிபோக் ஸ்போர்ட்ஸ் டீஷர்ட், மற்றும் கலைந்த அடர்த்தியான கேசம், மனத்துக்குள் குட்டிமேகங்களை ஓடவைக்கும் அசத்தலான பெர்ஃப்யூம் இவையெல்லாம் கூபேயிலிருந்த பெரிசுகளின் அல்லது நடுத்தர வயது இளைஞர்களின் வெள்ளை முடிகளைச் சட்டெனக் கறுப்பாக்கி மனத்துக்குள் ஜாகிங் செய்யவைத்தன.




ஒரு விஷயம் அவளுக்குத் தெளிவாகத் தெரியும். எங்கே இருந்தாலும் தன்னைச் சுற்றி ஈக்களாக ஆண்கள் பார்வை மொய்க்கும். இல்லாவிட்டால் அப்படி மொய்க்கும்விதமாக ஏதாவது ஒன்றைச் செய்துவிட அவள் மனம் விழையும். இந்த நிமிடத்தில்... அவளுக்கு அதைப் பற்றியெல்லாம் கவலைப்பட்டுக் கொண்டிருக்க நேரமில்லை.

ஒரு ப்ரியமான காதலன் அருகிலிருந்து கவனிக்காத இந்தத் தேகத்தை யார் பார்த்து எக்கேடு கெட்டால்தான் என்ன? அந்த அளவுக்குக் காலையில் வந்த கனவு, அவளை மிகவும் பாதித்து விட்டிருந்தது. யார் அவன் தெரியவில்லை. ஓடியே போய்விட்டான்... அவனைப்போல ஒரு ஆணைத்தானே கற்பனையில் அடிக்கடி காதலனாக்கி வரைந்து பார்த்தோம். இனி அப்படியெல்லாம் எவனும் வரமாட்டானா? எண்ணங்கள் ஓடின. எழுந்து ரயிலின் அசைவுக்கு ஏற்ப நடந்து வந்து, பாத்ரூம் கதவைச் சாத்திக்கொண்டு ப்ரஷ்ஷை வாய்க்குள் திணித்தபடி அங்கிருந்த கண்ணாடியில் அசைந்துகொண்டிருந்த தனது முகத்தைப் பார்த்தாள்.

தேன்மொழி எனும் இந்த அழகான இளம் பெண்ணுக்குக் காதல் இதுவரை லபிக்கவில்லை. தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

தேன்மொழி அப்படி ஒன்றும் பேரழகி இல்லை. உடலில் ஏதோ ஒரு வசீகரம். அவளது சுபாவம், பேசும் விதம், தன்னை மறந்து சிரிக்கும்போது வெளிப்படும் தேஜஸ் இதெல்லாம் எப்பேர்ப்பட்டவரையும் அவள் அருகிலேயே வாழ்நாள் முழுக்க கழிக்கும் ஆசையைத் தூண்டிவிடும். லயோலாவில் விஸ்காம் முடித்துவிட்டு, கொஞ்சகாலம் தனியார்த் தொலைக்காட்சி ஒன்றில் நிகழ்ச்சித் தயாரிப்பாளினியாக வேலை செய்துவந்தாள். இரண்டு வாரங்களுக்கு முன்தான் வேலையிலிருந்து விடுவித்துக்கொண்டாள். காரணம் வாழ்வின் ஒரேமாதிரியான அசுவாரசியமான தன்மை. அதைவிட முக்கியமான இன்னொரு காரணம் இதுவரை அவளுக்குக் காதலன் கிட்டவில்லை. இத்தனைக்கும் இடையிடையில் சில காதல்கள் துளிர்விட்டுப் பாதியிலேயே கிள்ளி எறிந்துவிட்டாள். காரணம் இவள் தான். காதலனாக இருந்தால் இப்படித்தான் நடக்க வேண்டும், இப்படித்

# மிருதுவான நாப்கின்கள். ஏனெனில் மாதவிடாயை நாங்கள் மறைந்து போகச் செய்ய முடியாது.

Soft TECH உடன் கூடிய இந்தியாவின் முதல் நாப்கின்




She
Sanitary Pad
Knows me

• ஸாஃப்ட் ட்ரை-வீவ் டாப் ஷீட்: வெட்டுக்கள் இல்லை. அரிப்பில்லை அல்லது சினைப்பில்லை • ஸாஃப்ட் ஜெல் தொழில்நுட்பம்: நிரம்பட உறுஞ்சுகிறது • ஸாஃப்ட் விங்ஸ்: இதமாக இருப்பதோடு பக்க வாட்டில் கறை ஏற்படுவதிலிருந்தும் பாதுகாக்கிறது • தனித்தனியாகச் சுற்றி மூடப்பட்டுள்ளது: சுகாதாரமானது மற்றும் களைவது சுலபம்.

---

**ஷி கம்ஃபர்ட் சானிட்டரி பேட்கள் இங்கு கிடைக்கின்றன:** பிக் பஜார்/ஃபுட் பஜார், ஈ மார்ட், ஹைப்பர்சிட்டி, மோர் - ஆதித்ய பிர்லா ரீடெய்ல் லிமிடெட் (சூப்பர் மார்கெட்ஸ் - ஹைப்பர்), மெக்னட், மெட்ரோ (மும்பை / பெங்களூரு / ஹைதராபாத் / கொல்கட்டா) நீல்கிரீஸ் (பெங்களூரு & சென்னை), ரிலையன்ஸ் ஃப்ரெஷ், ஸ்பென்சர்ஸ், விஷால் மெகாமார்ட், ஈஸி டே, மேகா சேவ் (ஷாப்ரைட்) மற்றும் மற்ற அனைத்து முன்னணி ரீடெய்ல் ஸ்டோர்களில். வர்த்தக விசாரணைகளுக்காக www.shecomfort.com பார்க்கவும் அல்லது info@shecomfort.comக்கு மின் அஞ்சல் செய்யவும்.

தான் உட்காரவேண்டும் என்பது போல எல்லாவற்றுக்கும் ஒரு விதி வைத்துக் கொண்டிருப்பாள்

நண்பராக இருப்பது வரை செம கூத்தடிப்பாள்.

ஃப்ரெண்டாக பழகுபவன் பர்ஃபக்டாக சொன்ன டயத்துக்கு வராவிட்டால் தலையில் தட்டுவதோடு நிறுத்திக்கொள்வாள். அதே காதலிப்பவனாக இருந்தால் பத்து மணிக்கு ஒரிடத்தில் வருவதாகச் சொல்லிவிட்டு ஒருமணி நேரத்துக்கு முன்பாக அந்த இடத்தில் காத்திருப்பாள். பத்து மணிக்கு பத்து நிமிடம் முன்பாகவே அவன் வந்துவிட்டால் ஓகே. கரெக்டாக பத்து மணிக்கோ அல்லது அதற்குப் பின்னால் தாமதமாக வந்தாலோ கதை அவ்வளவு தான்... அந்த நிமிடத்தோடு முடிந்தது. இப்படியாக அவளைக் காதலித்த பலரை நோகடித்தது அதிகம்.



**பிடிச்சிருக்குன்னு சொல்றதுக்கும் லவ் பண்றதுக்கும் இடையில் 300மைல் டிஃப்ரன்ஸ் இருக்கு.**

ஆனால் கடந்த மூன்றுவாரங்களாக தேன்மொழிக்கு மனசே சரியில்லை. காரணம் அவளது நெருங்கிய தோழி கார்த்திகாவின் காதல் திருமணம். அவளது காதலன் பெயர் மகேஷ். அவனும் இவளுக்கு நன்கு அறிமுகமானவன்தான். மூவரும் விஸ்காம் ஒரே கல்லூரியில் குப்பை கொட்டியவர்கள். இவளால் நோகடிக்கப்பட்ட முதல் ஆத்மா. அதன் பிறகுதான் மகேஷ் கார்த்திகாவுக்கு அப்ளிகேஷன் போட்டு ஓகே வாகி நான்கைந்து வருடங்களாக இருவரும் இணைபிரியாமல் காதலித்துக் கலந்துருகினர். இருவருக்கும் காதல் பிறந்ததில் காரணம் ஒன்றும் இருக்கிறது; அது இருவரும் மனவாடு. மகேஷ் ஆந்திர நாயுடு. கார்த்திகா தமிழ்நாட்டு நாயுடு. இடம்தான் வேறு; மற்றபடி பாஷை ஒன்றுதான். மகேஷுக்கு விசாகப்பட்டினம் சொந்த ஊர். அங்குதான் நாளை காலை கல்யாணம். இப்போது இவள் அங்குதான் சென்று கொண்டிருக்கிறாள்.

உண்மையில் இந்தக் கல்யாணத்தில் கலந்துகொள்ள இவளுக்கே இஷ்டமில்லை. ஆனாலும் புறப்பட்டு வந்துவிட்டாள். முதல் காரணம் கார்த்திகாவின் நச்சரிப்பு. இரண்டாவது காரணம் வேலையை விட்டதால் அவளைச் சூழ்ந்திருந்த வெறுமை. எவ்வளவு நேரம்தான் ஐ பாடில் பாட்டு கேட்டுக்கொண்டும் உலக சினிமாக்களைப் பார்த்துக்கொண்டும் பொழுதைக் கழிப்பது!

தேன்மொழி பாத்ரூமை விட்டு வெளியே வந்தபோது ரயில் ஒரு அத்துவானக்காட்டில் தனியாக, அனாதைபோல நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தாள். பயணிகளில் சிலர் கீழே இறங்கி வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தனர். தேன்மொழி வழிந்த கேசத்தைக் கொண்டையாக முடிந்தபடி வாசலில் வந்து எட்டிப் பார்த்தாள். கீழே பலரும் இறங்கி கும்பல்கும்பலாக நின்று பேசிக்கொண்டிருந்தனர். இரண்டு கோச் தள்ளி பின்பக்கமாக ஒரு கும்பல் பாட்டு பாடிக் கொண்டிருந்திருந்தது.

அவளது வாழ்வின் மகத்தான மாற்றம் இன்னும் சில நொடிகளில் நிகழவிருப்பதை அறியாதவளாக தேன்மொழி படிக்கட்டின் வழி இறங்கிக்கொண்டிருந்தாள்.

***(மீன்கள் துள்ளும்)***





**கலைத்துறையில் கமல்ஹாசனின் 50 வருடப் பணியைப் பற்றி... கோலிவுட், சின்னத்திரை, இலக்கிய ஏரியா, காலேஜ் காலனி, வெகுஜனம் என ஐந்து விதமான தளங்களிலிருந்தும் பன்முகப் பார்வையில் பதிவான அபிப்ராயங்களின் தொகுப்பு ஆவணமாய்...**



**சத்யராஜ்** : சினிமா என்றால் இப்படித்தான் என்ற இலக்கணத்தையும் உதாரணங்களையும் தூக்கி எறிந்தவர் கமல்.



**மதன்பாப்** : கமலின் திறமைகளைப் பற்றி நான் தெரிந்து கொண்டது கையளவு, தெரிந்து கொள்ளாதது உலகளவு.



**சசிக்குமார்** : இன்றைய ஹீரோக்கள் கேரக்டருக்காக உடம்பைக் கூட்டியும், குறைத்தும் கொள்கிறார்கள். இதற்கெல்லாம் முன்னோடி கமல்.



**மமதி** : கமல், ஒரு கலைஞனாகத் தன்னுடைய தேடலுக்கு முடிவில்லை என்று தெரிந்தும் தேடக் கூடிய கலைஞன்.



**சமுத்திரக்கனி:** கமலும் நானும் பாலசந்தர் குருகுலத்தில் பயின்றவர்கள். இந்தக் குருகுலத்தின் சூப்பர் டூப்பர் ஸீனியர் கமல்.



**எம்.எஸ்.பாஸ்கர்** : உடன் நடிக்கும் நடிகர்களை நடிக்க வைக்கும் வாத்தியார் கமல்ஹாசன்.



**பா.விஜய்** : ஒரு கவிஞனாக அவர் எழுதிய கவிதைகளைப் புத்தகமாக வெளியிட வேண்டும் என எதிர்பார்க்கிறேன்.



**கலா** : கமல், தமிழ்நாட்டில் பிறக்காமல் வேறு எங்காவது பிறந்திருந்தால் இன்னும் அதிக உயரத்தை அடைந்திருப்பார்.



**சித்தார்த் :** படப்பிடிப்பு இடைவேளைகளில் கமலோடு கலந்துரையாடினாலே திரைப்படம் உருவாக்குவதற்குத் தேவையான அறிவைப் பெற்றுவிடலாம்.



**எஸ்.வி.சேகர் :** கமலின் நடிப்பைப் பற்றி நான் சொல்ல வேண்டாம். உலகமே பாராட்டுகிறதே!



**கோபிநாத் :** இருபது வாக்கியங்களில் சொல்ல வேண்டிய விஷயத்தை நான்கைந்து வாக்கியங்களில் புரிய வைத்திடுவார் கமல்.



**பேராசிரியர் ஞானசம்பந்தன் :** கமலிடம் ஒரு விஷயத்தை ஒரு முறை சொன்னால், பல வருடங்களுக்குப் பின்னும் அந்த விஷயத்தை நினைவு வைத்திருப்பார்.



**ஆனந்தக் கண்ணன் :** தொழிலில் கமல் காட்டும் முழுமையான ஆர்வம்தான் அவரது உயர்வுக்கு முதல் காரணம்.



**சாருப்ரபா சுந்தர் :** கலையுலகத் தந்தை சிவாஜிகணேசனின் மறைவுக்குப் பின்பு கலைப் புதல்வர் கமல்ஹாசன் அவரது இடத்தை நிரப்பியுள்ளார்.

## பன்முகப் பார்வையில்...



**பாஸ்கி :** கமல் மேக்கப்புக்கு முக்கியத்துவம் கொடுக்காமல், 'மகாநதி', 'அன்பே சிவம்' போன்று நடிப்பை முன்னிலைப்படுத்த வேண்டும்.



**சேத்தன் :** கமலின் அர்ப்பணிப்பு உணர்வு, வளரும் நடிகர்களான நாங்கள் கடைபிடிக்க ஒரு முன்னுதாரணம்!



**பத்மாவதி :** உயர உயர போனாலும் இன்னும் இன்னும் முயற்சிக்கிற உழைப்பின் இனிப்பு.



**பாஸ்கர் சக்தி :** சர்ச்சைக்குரிய விஷயங்களைப் படங்களில் கமல் கையாளும் போது கூடுதல் கவனத்துடன் இருக்க வேண்டும்.









**சுதாங்கன்:** கமலைச் சந்திக்கும்போதெல்லாம் ஒரு புது செய்தியை தரும் அவரின் விஷய ஞானம் அபாரமானது.



**மனுஷ்யபுத்ரன்:** தமிழ் சினிமாவுக்குக் கலைமுகம் இருக்க முடியும் என்று நிரூபித்துக் காட்டியவர்.



**பால் கனகராஜ்:** சுய சிந்தனை, சோதனை முயற்சி, இதுதான் கமல். அவர் அக்ரஹாரத்திலிருந்து பெரியார் திடலுக்கு வந்த குழந்தை.



**தமிழிசை சௌந்தர்ராஜன்:** 'களத்தூர் கண்ணம்மா' கமலின் நடிப்பைப் பார்த்த பின், எனக்கு அது தூங்கா இரவாகப் போய் விட்டது.



**ஈ.வி.கே.எஸ்.இளங்கோவன்:** தேசியப் பாரம்பரியத்தில் வந்த பகுத்தறிவுவாதியாக கமல் இருப்பதால் எனக்கு அவரை ரொம்பவும் பிடிக்கும்.



**சிவகாமி:** இந்தியத் திரைப் படத் துறையின் முதல் பத்து ரத்தினங்களை வரிசைப்படுத்தினால் அதில் கமலுக்கு இடமுண்டு.



**பரிதி இளம்வழுதி:** கல்லுக்குள் ஈரமாக அவருக்குள் இருக்கும் நகைச் சுவை-காமெடி படங்கள், பொது சினிமா இரண்டிலுமே...



**மா.சுப்பிரமணியன்:** நாட்டின் இறையாண்மையைப் பலப்படுத்த கமலைப் போன்று பலர் முன்வர வேண்டும்.



**ஏ.கே. மூர்த்தி:** சப்பாணி முதல், பல்ராம் நாயுடு வரை பார்க்கிறபோது தோன்றுவது: 'கமலுக்கு இன்னமும் ஏன் ஆஸ்கார் கிடைக்கவில்லை?'



**பாலபாரதி:** தனது சினிமாத் தொழிலின் வருமானத்தை சினிமாவிலேயே முதலீடு செய்யும் கமலின் துணிச்சல் பாராட்டத்தக்கது.



**திலகவதி:** தன்னைச் சுற்றி அடிவருடிக் கூட்டங்களை வைத்திருக்காமல், அறிவு சார்ந்த வல்லுநர்களோடு பழகுபவர் கமல்.



**டி.ராஜா:** ''இந்து - முஸ்லிம் மோதலில், இரண்டு சாமிகளைவிட 'ஆசாமி'தான் முக்கியம்'' என்ற அவர் கருத்து அன்புமயமானது.

**திலீப் :** வெறும் விசில் அடிச்சான்களாக ரசிகர்களை மாற்றாமல் சமூக சேவை யாளர்களாக மாற்றியவர் கமல்.

**ஆனந்தி :** கமலின் பார் வையைவிட அவரது கேமரா பார்வை அசாத்தியம்.

**குருத்து நிலா :** கமல் அனுபவமும் அறிவும் சேர்ந்த அதிசயம்.

**வசந்த்குமார்:** கமல்னா எதிலும் ஒரு தனி முத்திரை பதிப்பவர். அவரது உலக நாயகன் பட்டமே அதற்கு சாட்சி.

**தமிழ்மணவாளன் :**
தமிழ்த் திரைவரலாற்றின் தலைப்புச் செய்தி
தளராமல் தொடருகின்ற உழைப்புச் செய்தி
சூரியனே வியக்கின்ற வண்ணம் புதுமைச்
சுடரொளியாய் திரைஒளிரும் வெளிச்சச் செய்தி

**விஷ்ணுப்ரியா :** அவரது நடிப்பு வெறும் நடிப்பு அல்ல. அதில் இருப்பது உயிரோட்டமான இன்வால்வ்மெண்ட்!

**நடனக் கலைஞர் ஷெரீப் :** அவரொரு திரைக்கலை சமுத்திரம். மூழ்கினால் முத்தெடுக்கலாம்.

**ஷோயப் :** 100% டெடிகேஷன், 100% வெற்றி என்கிற கமலின் ஃபார்முலா ரொம்பப் பிடிக்கும்.

# தமிழ்த் திரையுலகின் தலைப்புச்செய்தி நீ!

**சுபாஷ் :** கடமை கண்ணியம் கட்டுப்பாடு மாதிரி கமலுக்கு சிம்ப்ளிசிட்டி, சின்சியாரிட்டி, கிரியேட்டிவிட்டி.

அதிக வட்டி அதிக வருமானம்

# Fixed Deposit

# 12.5%*

(வட்டி மாதந்தோறும்)

## திட்டம் - 1 டேர்ம் டெபாசிட்

| காலம் | டெபாசிட் தொகை (குறைந்த பட்சம்) | வட்டி விகிதம் (ஒரு ஆண்டுக்கு) | வட்டி தொகை |
|---|---|---|---|
| 1 வருடம் | 5000 | 10.00% | மாதாந்திரம் |
| 2 வருடங்கள் | 5000 | 11.00% | மாதாந்திரம் |
| 3 வருடங்கள் | 5000 | 12.50% | மாதாந்திரம் |

## திட்டம் - 2 குமிலேடிவ் டெபாசிட்

| காலம் | டெபாசிட் தொகை (குறைந்த பட்சம்) | முதிர்வு தொகையுடன் (கிடைக்கும் தொகை) | முதிர்வு தொகை ஒவ்வொரு 1000/- ரூபாய்க்கும் |
|---|---|---|---|
| 1 வருடம் | 5000 | 5525 | 1105 |
| 2 வருடங்கள் | 5000 | 6220 | 1244 |
| 3 வருடங்கள் | 5000 | 7260 | 1452 |

* 36மாத டெபாசிட்டுகளுக்கு

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்: திரு.சரவண்குமார் - போன்: 9626261515

## தங்கமயில் ஜ்வல்லரி லிமிடெட்

தங்கம் வாங்க, தங்கமயிலுக்கு வாங்க

| மதுரை | இராஜபாளையம் | காரைக்குடி | இராமநாதபுரம் |
|---|---|---|---|
| PH:0452 2345553 | PH:04563 225553 | PH:04565 400553 | PH:04567 225553 |

விரைவில் திண்டுக்கல்



**ஸ்வர்ணா:** மெஸேஜும் ரியலிசமும் கமலின் தனித்துவம்.



**அர்ச்சனா:** சினிமாத் துறையில் சிவன் போல 'சின்' முத்திரை காட்டுபவர்.



**சந்திரா :** கமலின் 'தேவர் மகன்' ஒரு படம் போதும். அவரின் ஸ்கிரிப்ட் அறிவைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு.



**அரங்கமல்லிகா:** நுகர்வுக் கலாசார சிந்தனைகளையும், நவீனச் சிந்தனைகளையும் சரிவிகிதத்தில் தரமாகத் தரக் கூடியவர் கமல்.



**உமாஷக்தி:** சிகரங்களில் இளைப்பாற விரும்பாத உயரங்களின் காதலர் கமல்!



**பார்த்தசாரதி:** கமலின் ஹோம்வொர்க், நேட்டிவிட்டி மாறாத நடிப்பு- நடிகர்கள் கற்க வேண்டியவை.



**கண்ணன் :** கமல் ஒரு சகலகலா வல்லவர். 'அவ்வை சண்முகி' 'தசாவதாரம்'ன்னு பாருங்க எவ்வளவு வெரைட்டி!



**கீதா :** ஒரு சின்ன மேக்கப் தானேன்னு நினைச்சுக்காம அந்த மேக்கப் சமாசாரத்துலகூட அவர் காட்ற புதுமை ரசனைக்குரியது.



**சந்திரா :** கமல் அழும்போது, நமக்குக் கண்ணுல தண்ணி வரும். அவர் சிரிக்கறச்ச தியேட்டரே குலுங்கிச் சிரிக்கும். இது தான் நடிகனோட வெற்றி!



**ஆர்.மங்களம்:** நடிப்பை தன் மூச்சு, உயிர்ன்னு நினைக்க அவர் நடிக்கறதாலதான் இந்தளவு அவர் உயர்ந்திருக்கார்.



**சதீஷ்:** ஒவ்வொரு ஸீன்லேயும் கமல் காட்டற அக்கறை அலாதியானது. 'உன்னைப்போல் ஒருவன்' படத்துலேயும் எல்லாமே புது டெக்னாலஜிதான்.



**தொகுப்பு:**
**கௌசி,**
**ராகவ்குமார்,**
**நளினி சம்பத்குமார்,**
**ஆர். பாலா.**

# மயிலைக் காளை

1

கிருஷ்ணக்கோனான் இருபது வயதுக் காளைப் பிராயத்தை அடைந்திருந்தான். ஒரு தவறு செய்தால், பின்னால் அதிலிருந்து பல தவறுகள் நேரிடுகின்றன என்பதற்கு இது ஓர் உதாரணமல்லவா? இருபது வருஷத்துக்கு முன்னால் கிருஷ்ணன் இந்தப் பூமியில் பிறந்தான். அதன் பிறகு அவனுடைய அனுமதியைக் கேளாமலே வயது ஆகிக்கொண்டு வந்தது. இருபது பிராயம் நிரம்பும் காலம் சமீபித்தது.

நேற்று அவனுடைய மயிலைக்காளை கெட்டுப்போய் இன்று அதை அவன் தேடி அலையும்படி நேரிட்டதற்குக் காரணம் என்னவென்று நினைக்கிறீர்கள்? என்னுடைய அபிப்பிராயம், அவனுடைய பிராயந்தான் அதற்குக் காரணம் என்பது. ஒரு வேளை நீங்கள் வித்தியாசமாய் நினைக்கக்கூடும். அவன் மாட்டைக் கவனிக்க வேண்டிய நேரத்தில் பூங்கொடியைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்ததுதான் அதற்குக் காரணம் என்று சொல்லக்கூடும். உண்மைதான். ஆனால், அதற்குக் காரணம் அவனுடைய பிராயந்தான் என்று நான் கருதுகிறேன்.

மாசி மாதம்; அறுவடை, போரடியெல்லாம் ஆகிவிட்டது. இந்நாட்களில் கிருஷ்ணன் மத்தியானம் சாப்பிட்ட பிறகு மாடுகளை ஓட்டிக் கொண்டு அவற்றை மேய விடுவதற்காகப் போவது வழக்கம். சாதாரணமாய் அறுவடையான வயல்களிலே மாடுகள் மேயும். லயன் கரை மேஸ்திரி எவனும் வரமாட்டானென்று தோன்றுகிற சமயத்தில், கிருஷ்ணன், மாடுகளை



இராஜன் வாய்க்காலுக்கு அப்பால் ஓட்டுவான். கொள்ளிடத்துக்கும் இராஜன் வாய்க்காலுக்கும் மத்தியிலுள்ள அடர்ந்த காட்டில் மாடுகள் மேயும். பொழுது சாய்வதற்குள் திரும்பி ஓட்டிக்கொண்டு வந்துவிடுவான். நன்றாக இருட்டுவதற்கு முன் வீட்டுக்கு வராவிட்டால் அவனுடைய தாயார் ரொம்பவும் கவலைப்படுவாள்.

நேற்று வழக்கம்போல் அவன் மாடுகளை வயல்களில் மேயவிட்டு இராஜன் வாய்க்காலின் கரையில் உட்கார்ந்திருந்தான். பூங்கொடியின்மேல் ஞாபகம் போயிற்று. அவளைப் பார்த்தே ஒரு மாதம் இருக்கும். நெருங்கிப் பேசி எத்தனையோ நாளாகிவிட்டது. இப்போதெல்லாம் அவள் வெளியிலேயே வருவது இல்லை. பாவம், நோயாளி மாமனுக்குப் பணிவிடை செய்து கொண்டு வீட்டுக்குள்ளேயே அடைந்து இருக்கிறாள்.

பெருமாள் கோனான் இன்னும் எத்தனை நாளைக்கு இப்படி செத்தும் சாகாமலும் கிடப்பான்? அவன் செத்துப் போனால் அப்புறம் பூங்கொடியின் கதி என்ன? அவள் பிறகு அந்த வீட்டில் இருக்க முடியுமா? பெருமாள் கோனான் பெண்டாட்டி பெரிய பிசாசு அல்லவா? அவளிடம் பூங்கொடி என்ன பாடுபடுவாள்? இப்போது - மாமன் இருக்கும் போதே - இந்தப் பாடு படுத்துகிறாளே?

என்னவெல்லாமோ யோசித்த பின்னர் கடைசியாக அவன் மனம் கல்யாணத்தில் வந்து நின்றது. ஏழைப்பெண்தான்; மாமன்



செத்துவிட்டால் நாதியற்றவளாகி விடுவாள்.

இக்காரணத்தினால் தன் தாயார் ஒரு வேளை தடை சொன்னாலும் சொல்லலாம். ஆனால், இந்த ஒரு விஷயத்தில் மட்டும் தாயார் மறுத்துச் சொன்னால் கூடக் கேட்கமுடியாது என்று அவனுக்குத் தோன்றிற்று...

இப்படி அவன் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில் மயிலைக் காளை இராஜன் வாய்க்காலில் இறங்கி அக்கரை போவதை அவன் கண்கள் பார்த்தன; மூளைக்குச் செய்தியும் அனுப்பின. ஆனால், அந்தச் சமயம் அவன் மூளை வேறு முக்கிய விஷயத்தில் ஈடுபட்டிருந்தபடியால் அச்செய்தியை ஏற்றுக் கொள்ளவில்லை. வேறொரு சமயமாயிருந்தால் 'பொழுது போகிற சமயம்; இப்போது மயிலைக் காளையை அக்கரை போகவிடக்கூடாது; காட்டில் புகுந்து விட்டால் தேடுவது கஷ்டம்' என்று சொல்லி உடனே ஓடிச் சென்று மறித்து ஓட்டியிருப்பான். 'த்தா! த்தா! ஏ மயிலை!' என்று இரண்டு அதட்டல் போட்டால் கூட அநேகமாய் அது திரும்பியிருக்கும். இப்போதோ பார்த்துக்கொண்டே சும்மா இருந்துவிட்டான்.

கடைசியில், மயிலைக்காளை இல்லாமலே இரவு வீடு திரும்ப வேண்டியதாயிற்று. அதன் பலனாகத்தான் கிருஷ்ணன் இன்று ஊரெல்லாம் மாசிமகத்துக்காக ஓமாம்புலியூருக்குப் போயிருக்க, தான் மாத்திரம் காட்டிலே அலைந்து கொண்டிருக்க நேர்ந்தது.




அன்று காலையில் எழுந்ததும், அவன் பச்சை மிளகாயும், உப்பும் கடித்துக் கொண்டு பழைய சோறு சாப்பிட்டு விட்டுக் கையில் புல்லாங்குழலுடன் கிளம்பினான். கிருஷ்ணன் புல்லாங்குழல் வாசித்தால் வெகு அபூர்வமாயிருக்கும். நல்ல சங்கீதம் கேட்டுப் பண்பட்ட காதுகளையுடையோரை அவனுடைய வேணுகானம் துரத்தித் துரத்தி அடிக்கும் வல்லமையுடையது. ஆனால், அவனுடைய மாடுகளை அழைப்பதற்கு அந்த அபூர்வ கானமே போதுமாயிருந்தது. (இதை உத்தேசிக்கும்போதுதான், பழைய பிருந்தாவனக் கிருஷ்ணனுடைய வேணுகான மகிமையிலும் எனக்குக் கொஞ்சம் சந்தேகம் உண்டாகிறது.)

இராஜன் வாய்க்காலைக் கடந்து அப்பாலுள்ள காட்டில் புகுந்தான். காடு என்றதும் வானமளாவிய விருக்ஷங்களையும், புலிகளையும், கரடிகளையும் எண்ணிக்கொள்ள வேண்டாம். நான் சொல்லும் கொள்ளிடக்கரைக் காட்டில் மூன்று ஆள் உயரத்துக்கு மேற்பட்ட மரம் ஒன்றுகூடக் கிடையாது. ஆனாலும் காடு காடுதான். முட்புதர்களும், மற்ற செடி கொடிகளும் அடர்ந்து மனிதன் பிரவேசிப்பது அசாத்தியமாயிருக்கும். அபூர்வமாய் அங்குமிங்குமுள்ள ஒற்றையடிப்பாதை

வழியாய் ஒருவன் உள்புகுந்துவிட்டால் அவனைத் தேடிக் கண்டுபிடிப்பது பிரம மப்பிரயத்தனம்தான். பாம்புகள், கிரிகள், நரிகள் ஆகியவைதான் இந்தக் காட்டில் உள்ள துஷ்டப் பிராணிகள்.

இப்படிப்பட்ட காட்டில் கிருஷ்ணன் காலை நேரமெல்லாம் சுற்றி அலைந்தான். மத்தியானம் வரையில் தேடியும் பயனில்லை. கடைசியாக மாடு போனது தான் என்று தீர்மானித்துக்கொண்டு வீட்டுக் குத் திரும்பினான். தண்ணீர் குடிப்ப தற்காகக் கொள்ளிடத்தின் கரையோர மடுவில் இறங்கி முதலைக்கு இரையானாலும் ஆகியிருக்கலாம். அவனுடைய நெஞ்சில் பாறாங் கல்லை வைத்தது போல் பாரமாயிருந் தது.

இவ்வளவும் பூங்கொடியினால் ஏற்பட்டது என்பதை நினைக்க அவனுக்கு அவள்மேல் கோபம் வந்தது. எதற்காக அவளைப் பற்றித் தான் நினைக்க வேண்டும்? இவ் வளவுக்கும் அவள் தன் னைப் பற்றி நினைப்ப தாகவே தெரியவில்லை. என்னதான் வீட்டிலே வேலையென் றாலும், மனத்திலே மட்டும் பிரியம் இருந் தால் இப்படி இருப்பாளா? அவள் வீட்டுப் பக்கம் தான் போகும்போது கூட வெளி யில் வந்து தலைகாட்டுவதில்லை. சே! அப் படிப்பட்டவளிடம் தான் ஏன் மனத்தைச் செலுத்த வேண்டும்? அருமையான மயிலைக் காளை நஷ்டமானதுதான் லாபம்! (ஓய் கிருஷ்ணக் கோனாரே! உம்முடைய மூளைக் குழப்பத்தில் எதை வேண்டுமானாலும் சொல்வீர் போலிருக் கிறது! நஷ்டம் எப்படி ஐயா லாபம் ஆகும்?)

இருக்கட்டும்; ஆயாளையாவது திருப்தி செய்யலாம். நல்ல பணக்கார வீட்டுப் பெண்ணாகப் பார்த்துக் கட்டிக் கொள்ள லாம். இந்த அநாதைப் பெண் யாருக்கு வேண்டும்? இவளை நினைக்காமல் விட்டுவிட வேண்டியதுதான். தள்ளு!



**பொழுது போகிற சமயம்; இப்போது மயிலைக் காளையை அக்கரை போகவிடக்கூடாது; காட்டில் புகுந்து விட்டால் தேடுவது கஷ்டம்**

**2**

**ச**லசலவென்று சப்தம் கேட்டது. கிருஷ்ணன் சப்தம் வந்த இடத்தை நோக்கினான். யாருடைய நினைவை ஒழிக்க வேண்டு மென்று தீவிரமாகத் தீர்மானம் செய்து கொண்டிருந்தானோ அந்தப் பெண்ணின் உருவம் புதர்களை நீக்கிக்கொண்டு வெளி வந்தது. கிருஷ்ணனைப் பார்த்ததும், திருதிரு வென்று விழித்தது.

கிருஷ்ணன் - வேக மாய் நடந்து கொண்டி ருந்த கிருஷ்ணன் - நின்று விட்டான்.

இரண்டு பேரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு கொஞ்சநேரம் நின்றார் கள். பிறகு சமீபத்தில் வந்தார்கள்.

அவர்களுடைய சம்பாஷணை சாதாரண மாய் இத்தகைய சந்தர்ப்பங்களில் காதலர் களின் சம்பாஷணை எப்படியிருக்குமோ அப்படியில்லையென்பதை வெட்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(என்னதான் பேசினார்கள்...? அடுத்த வாரம் பார்க்கலாம்)**

# Prosperity

Each project a classic example of dedicated architecture and engineering. Each home a standing ovation to your dreams and aspirations. Each sq.ft a testimony to world class quality and meticulous care. With the pioneers in building housing projects, expect nothing less.



## Sri Kaladara

Luxury Apartment
Commercial/Real.Project
9/12, Alexandria Road,
Cantonment, Trichy-1
2 BHK 1349 Sq.Ft - 1543 Sq.Ft , 3 BHK 1612 Sq.Ft



## Sri Guha

2 BHK Elegant Apartment
24/2,Railway Station Road,
Srirangam, Trichy- 6
2 BHK 1018 Sq.ft. - 1256 Sq.ft.



## shri JANANI garden

2 & 3 BHK Affordable Flats
5/41,Pannaiyar Chokkalingam Salai,
Bikshandarkoil Agraharam,
Trichy - 621 216.
3 Bed Room Flats of 1448 Sq.Ft 2 Nos Available.

## Shri Ganeshaya



Mangala Nagar
Bikshandar Koil
Trichy - 621 216
2 BHK 590 Sq.Ft - 733 Sq.Ft

## Sri Karthikeya



Double Bed Flats at
Door.17, Butterworth Road,
Trichirappalli - 6.

Very Near Chatram Bus Stand & Rockfort Temple.



## MANGHALAM PROMOTERS

Tel : 0431 -2433909 Fax : 2433876 Cell : 99944 42934,
24, Shri Vijaya Rengam, Royar Thope, Srirangam, Trichy - 6
manghalampromoters@gmail.com, www.manghalampromoters.com

மங்களம் உங்களுடையதாகட்டும்



An ISO 9001:2008 Certified Company



# திருமணம் மற்றும்

அனைத்து சுப காரியங்களுக்கும்



ஹோமங்கள், பூஜைகள், சிறந்த முறையில்

நடத்திக் கொடுக்கப்படும்.



விபரங்களுக்கு:

ஆதம்பாக்கம் S. மணிகண்டன் சாஸ்திரிகள்
S/o. தூத்துக்குடி (லேட்) அம்பிவாத்தியார்
போன்: 2253 1598
செல்: 98403 88087, 99405 64040

---

## 'பக்தி உலா' வழங்கும் யாத்திரைகள்

**07.11.09 to 16.11.09 : ஆந்திரா விஜயம்** - அஹோபிலம் - யாகண்டி - மகாநந்தி - ஸ்ரீசைலம் - விஜயவாடா - கனகதுர்கா - மங்களகிரி - மட்டப்பள்ளி - வாடப்பள்ளி - கேதாவரம் - வேதாத்திரி - திராட்சராமா - பீமாவரம் - அமராவதி - ராயலி - பத்ராச்சலம் - அன்னவரம் - ஸ்ரீகாகுளம் - ஸ்ரீகூர்மம் - சிம்மாச்சலம் - துவாரகா திருமலா.

**11.12.09 to 24.12.09 : சப்த ஜோதிர்லிங்கம் - பண்டரிபுரம் விஜயம்** - கோலாபூர் - ஷீரடி - நாசிக் - பஞ்சவடி - சனிசிங்கனாபூர் - அஷ்டகணபதிகளில் முக்கிய நான்கு - கிருஷ்ணேஷ்வர் - முக்திநாத் - நாகநாகம் - பரலி - மாவர் - நாகநாத் - பீமாசங்கர் - ஔரங்காபாத் - சப்தசிருங்கி - அம்பேஜோகை மற்றும் உஜ்ஜயின்.

**30.01.10 to 13.02.10 : பஞ்ச துவாரகை விஜயம்** - அகமதாபாத் - டாக்கூர் துவாரகா - பேட்டி துவாரகா - நாகேஸ்வரம் - சோமநாத் - ஹரிசித்திமாதா - போர்பந்தர் - மாத்ருகயா - அம்பாஜி - மவுண்ட் அபு - ஸ்ரீநாத்துவாரகா - காங்ரோலி - புஷ்கர் - அஜ்மீர்

**பிரதி வருடம் மாளயபக்ஷம் - மாளய அமாவாசையில்**
**பித்ருக்களின் ப்ரீத்திக்காக ஒரு பிரத்யேக பயணம்**
அலகாபாத் - காசி - கயா யாத்திரை **வைதீக முறைப்படி** நடைபெறும்

ரயில் முன்பதிவுக்கு முன்னதாக பதிவு செய்தல் அவசியம். யாத்திரை உணவு, தங்குதல் உட்பட ஏற்பாடு செய்யப்படுகிறது முன்பதிவு ஆரம்பம்.



விபரங்களுக்கு **ஆர். பட்டாபிராமன்** - உலா ஒருங்கிணைப்பாளர்
**"பக்தி உலா"** அசோக் மெடிக்கல்ஸ்
10, தண்டீஸ்வரம் மெயின் ரோடு, வேளச்சேரி, சென்னை - 42.
**போன் : 2243 4374 - 2243 0370 - செல் : 98407 53969**



★ சென்னஞ்சிறுகோபு, மயிலாடுதுறை

தாங்கள் பிறந்த அன்றே (16.10.1962) தீபாவளி, அதுவும் புரட்டாசி 31-ம் தேதியே வந்ததைப் பற்றி?

நான் அழுதால் தீபாவளி....!

★ரேவதிப்ரியன், ஈரோடு

பொன்னியின் செல்வனை சினிமாவாக எடுத்தால், நீங்கள் ஆழ்வார்க்கடியான் வேடத்தில் நடிக்க ஒத்துக் கொள்வீரா?

வந்தியத்தேவனின் குதிரையாகக்கூட நான் நடிக்கத் தயார். யாராவது எடுங்கப்பா அந்த மூன்றாவது இதிகாசத்தை; வெள்ளைக்காரன் முந்திக் கொள்வதற்குள்.

★ வாசுதேவன், அயிரோலி

ஒப்பிடுக கிருஷ்ண ஜெயந்தி, ஸ்ரீராம நவமி?

தர்மத்தைக் காக்கப் பிறந்தவன் கண்ணன். தர்மத்தைக் காட்டப் பிறந்தவன் ராமன்.

# ஐப்'பசி'க்கு 'அடை' மழை!




★ அ.ராஜா ரஹ்மான், கம்பம்

நான் வாடகை வீட்டிலும் இல்லை, சொந்த வீட்டிலும் இல்லை. அப்படியென்றால் எந்த வீட்டில் உள்ளேன்?

பாவம் ஸார் மாமனார்! இந்த தீபாவளிக்காவது அவர் வீட்டைக் காலி செய்யுங்கள்!

★ பா.அசோக், விருதுநகர்

உண்மை உறங்கும். அப்ப பொய் தூங்காதா?

தூங்கும். ஆனால் அது பொய்த் தூக்கம்!

★ என்.சண்முகம், திருவண்ணாமலை

ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது. சரியா?

யார் சொன்னது. சமையல் கலை புத்தகம் (செந்தமிழில் ஏடு) சுரைக்காய்க் கறி சமைக்க உதவுமே!

★ வரத.சண்முகம், வாழப்பாடி

நீங்கள் இலக்கியத்தில் குளமா,

குட்டையா, ஓடையா, ஆறா, நதியா, அருவியா, மழையா, கடலா?

கானல் நீரை விட்டுட்டீங்களே!

★ மயில்வீரன், தாமரை நகர்

'பெண்மணி' என்ற அடைமொழி பெண்ணுக்குப் பெருமை சேர்ப்பது போல் ஆணுக்கு எதுவும் இல்லையே?

அந்தப் 'பெண்மணியில்' உள்ள 'மணி' ஆணைக் குறிக்கும் பெயர்தானே....!

★ க.பாலாஜிகணேஷ், சிதம்பரம்

உங்களுக்கு நம்பிக்கை இல்லாத பழமொழி எது வாத்தியாரே?

'வாத்தியார் புள்ளை மக்கு!'

★ அமுதா, மதுராந்தகம்

மழை சரி... அது என்ன கிரேஸி அடை மழை?

ஐப்'பசி'க்கு 'அடை' மழை!

★ மாரிசாமி, வேலூர்

Back Pain குறைய என்ன வழி....?

Front Gain தொப்பையைக் குறையுங்க....!

★ எல்.எம்.மங்கை, திருவண்ணாமலை

நீங்க 'ஹி ஹி'ன்னு பதில் சொல்ல நான் என்ன கேள்வி கேட்க வேண்டும்?

'நீங்க She sheயா'ன்னு கேட்டா, 'இல்லை He he 'ன்னு பதில் சொல்வேன். ஹி ஹி!

★ சரஸ்வதி, சிங்கப்பெருமாள் கோயில்

தமிழ் நமக்குத் தாய்மொழி; ஆங்கிலம்?

தமிழ் Mother tongue. ஆங்கிலம் Someother tongue!

★ இ.டி.ஹேமமாலினி, சென்னை

புலி வாலைப் பிடித்து விட்டால் தப்ப வழியே இல்லையா?

சரணம் விளிங்க. புலி வால் பிடித்த நீங்கள் புலி மேல் சவாரி செய்யலாம்.

★ ஜி.ரெஜினா பாபு, பழனி

நண்பனின் நண்பன் நமக்கு நண்பன் என்றால்... நண்பனின் எதிரி?

நம் நண்பனின் எதிரி, நம் எதிரிக்கு எதிரியாக இருந்தால் நமக்கு நண்பனாவான். வோ நம் நண்பனுக்கும் நண்பனாவான்....!

★ பாபு, திருச்சி

B.P வராமல் இருக்க எது கூடாது?

ஸால்ட் விஷயத்தில் அஸால்ட்டாக இருக்கக் கூடாது!

★ வைதேகி, சென்னை

எந்த ஆங்கில எழுத்தாளருடைய நூல்களை விரும்பிப் படிப்பீர்கள்?

மார்க்-Twine நூல்கள்....!

★ எம்.மிக்கேல் ராஜ், சாத்தூர்

ஓல்டு இஸ் கோல்டு. நியூ இஸ்?

ரோல்டு கோல்டு. புதிதாக மின்னுவதெல்லாம் பொன்னல்ல!

★ அ.ராஜா ரஹ்மான், கம்பம்

நீங்கள் போஜனப் பிரியரா?

உங்கள் கேள்விகளுக்குப் பதிலை 'யோஜனப் பிரியன்'!

★ மு.மதிவாணன், அரூர்

ஒரு கல்யாணம் நடக்க ஆயிரம் பொய் சொல்லலாம் என்கிறார்களே?

அதெல்லாம் அந்தக் காலம்....இப்போ இருக்கற விலைவாசில லட்சம் பொய்கூட சொல்லலாம்!



Front gain-யைக் குறைக்க இந்த மாதிரி ஜாகிங்தான் main

# SRUSHTI

## The Handicrafts Emporium

## தீபாவளி நல் வாழ்த்துக்கள்



• பஞ்சலோக சிலைகள் • பித்தளை கலைப்பொருள்கள் • தஞ்சாவூர் ஓவியங்கள் • மரச்சிற்பங்கள் • நூக்க மர கலைப் பொருட்கள் • அனைத்து வகை கைவினைப் பொருட்கள் • தரமான ருத்ராக்ஷங்கள் (ஒரு முகம் முதல் 21 முகம் மற்றும் பல) • சாளகிராமம் – சாமரம் • நர்மதா பாணலிங்கம் & பாதரச சிலைகள் • ஸ்படிக மாலைகள் – சிற்பங்கள் • நவரத்தின மாலைகள் & கற்கள் • நவரத்தின & உபரத்தின மாலைகள், சிலைகள் • ஜியோடு • பூஜை சங்குகள் & வலம்புரி சங்குகள் • அனைத்து வகை ருத்ராக்ஷ மாலைகள் • அனைத்து வகை ஜப மாலைகள் • தஞ்சாவூர் ஓவியம் • பட்டு ஓவியம், • கண்ணாடி ஓவியம் • நவரத்தின கல் ஓவியம் • இன்னும் பல்வேறு பிரத்யேகமான ஓவியங்களும், பல்வேறு மாநிலங்களிலிருந்து பெறப்பட்டு பார்வைக்கும், விற்பனைக்கும் உள்ளன.

**All Major Cards Accepted... All are Welcome...**

## Tamil Nadu Handicrafts Artisans Welfare Association

**Srushti Handicrafts Emporium, Sudarsan Building Ground Floor,**
**Opp. To Adyar Gate / Park Sheraton Hotel.**
**# 86, Chamiers Road, Chennai 600 018. INDIA Ph: 91 44-4206 0730.**



# டாக்டர் ஏ.வி. ஸ்ரீனிவாசன்

"என்ன இது நான் ஒண்ணு சொன்னா, நீ ஒண்ணு செஞ்சுகிட்டு வந்திருக்கே. உனக்கென்ன மேல் மாடி காலியா?"னு சாதாரணமாகக் கேட்பது வழக்கம்.

என்ன அது மேல் மாடி? நம் மூளையின் செல்லப் பெயர்களில் அதுவும் ஒன்று.

மூளையின் புஜபல பராக்கிரமத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டே போகலாம்.

அதற்கு முன், சரி இது எல்லோருக்கும் ஒரே போல் தான் இருக்குமா? முதல் மார்க் வாங்குபவனுக்கும் கோட் அடிப்பவனுக்கும் ஒரே போலிருக்குமா? ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரே மாதிரிதான் இருக்குமா? அப்படியென்றால் ஏன் அவர்களுக்குள் சின்னச் சின்னச் சண்டை, சச்சரவுகள்? பிறகு, ஒருவரை ஒருவர் பார்த்தாலே பிடிக்கவில்லை என்று, தொட்டதற்கெல்லாம் இருவரும் குற்றம் கண்டுபிடித்து, கடைசியில் அது விவாகரத்து வரை போய்... இவை எல்லாவற்றுக்குமே அடிப்படை நம் 'மேல் மாடி'யில் இருக்கும் மூளைதான்!

ஸ்ட்ரெஸ், டென்ஷன், நேரமின்மை என்று பல்வேறு காரணங்களால் கணவன் மனைவி இருவரும் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளாமல் போகின்றனர். கணவனும் மனைவியும் புரிந்துகொள்ள வேண்டும் என்பதைக் காட்டிலும், புரிந்து கொள்ளுதல் என்றால் என்ன? ஆண், பெண்ணையும் பெண், ஆணையும் புரிந்து கொள்ளவேண்டும். ஒரு நபரின் தனிப்பட்ட குண இயல்புகள் என்பவை இருந்தாலும் அவர் ஆணா, பெண்ணா, என்பதைப் பொறுத்து அந்த இயல்புகள் வெளிப்படுகின்ற விதமும் தருணங்களும் மாறுபடும். 'ஆண் இப்படித்தான்'; 'பெண் இப்படித்தான்' என்கிற இயல்புத்தன்மைகளை ஏற்றுக்கொள்ள கொஞ்சம் புரிதல் தேவை.

'எங்க வீட்லயும்தான் அண்ணன், தம்பி,



அப்பானு ஆம்பிளைங்க நிறைய இருந் தாங்க. அவங்களோடல்லாம் ஒத்துப் போகலையா? இந்த மனுஷனோட மட்டும் ஒத்துப் போகவே மாட்டேங்குது' என்று மனைவி தலையிலடித்துக் என்று வேதனைப்படுவான் கணவன்.

திருமண பந்தம் என்பதைச் சற்று மறந்துவிட்டு கணவன் அல்லது மனைவியை ஒரு தனி நபர் என்று பார்க்கிறபோது உண்மை உறைக்கும்.

# மிஸ்டர் & மிஸ் மேல்மாடி!

**- சீக்ரெட் ஆஃப் ப்ரெய்ன்**

கொள்வாள்.

'நானும் அக்கா தங்கச்சி யோடதான் பொறந்தேன். இவனை மட்டும் புரிஞ் சுக்கவே முடியலையே'




அதற்கு அவள் அல்லது அவனை வழிநடத்திச் செல்வது சிந்தனை.

அச்சிந்தனை உதிக்கும் மூளையை ஆராய்ந்ததில் கிடைத்த அரிய தகவல்களை நம் வாழ்க்கை முறை எடுத்துக்காட்டு களைக் கொண்டே அலச முற்படுகிறது இத்தொடர். மருத்துவ ரீதியாக ஆண், பெண் மூளையை ஆராயும் இத்தொடர், உங்கள் கேள்வி களின் உதவியோடு வளரக் காத்திருக்கிறது.

ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானம் என்றெல் லாம் சொல்லலாம். அறிவி யல் ரீதியாக, மருத்துவ ரீதி யாக ஆராயும்போது ஆண் மூளையும் பெண் மூளையும் வேறுபடுகின்றன. இதன் தாக் கம் செயல்களில் எப்படி பிரதிபலிக்கிறது என்று தெரியவரும்போது நிஜமா கவே ஆச்சர்யம் மட்டுமே மிஞ்சும். நம் வீடுகளிலேயே பார்க் கிறோம்... பெண் குழந்தை சீக்கிரமே பேச ஆரம்பித்துவிடும். ஆண் குழந்தை 'அம்மா' என்று சொல்வதற்கே மூன்று

# கம்ப்யூட்டர் Vs மூளை

உலகில் உள்ள எல்லா கம்ப்யூட்டர்களையும்விட நம் மூளை புத்திசாலியானது. எவ்வளவுதான் கற்றுக் கொண்டாலும், இன்னும் தா இன்னும் தா என்று பகாசுரனைப் கேட்டுக் கொண்டே இருக்கும். அடுத்தடுத்து கற்றுக் கொள்ளவும், ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவும் மூளை சில பகுதிகளை வெற்றிடமாக வைத்துக்கொள்ளும் ஆற்றல் படைத்தது.



வயது ஆகும்! மூன்று வயதுப் பெண் குழந்தை, அதே வயது ஆண் குழந்தையைக் காட்டிலும் இருமடங்கு அதிகமாகவும் அர்த்தத்துடனும் பேசும். மூளையிலுள்ள இடது பகுதியின் (பேச்சுக்கு அதிபதி இது!) மிகச் சிறிய பகுதியை மட்டுமே ஆண் உபயோகிக்கிறான் என்பது தான். என்ன கேட்டாலும் காலை பேப்பரிலிருந்து முகத்தைத் திருப்பாமல் மணிரத்ன வசனம் பேசும் கணவனை வசைபாடிப் பயனில்லை! பாவம் அவர்கள் என்ன செய்வார்கள்! அவர்கள் மூளையின் அமைப்பு அப்படி!

'எதற்காக இப்படிப் பேசிப் பேசிக் களைத்துப் போக வேண்டும்?' என்று மனைவிக்காக கணவன் அனுதாபப்படுவதும் நோ யூஸ்! அவள் (பிரெய்ன்) அப்படித்தான்!

(அலசுவோம்...)

தொகுப்பு : லக்ஷ்மி மோகன்

இண்டக்ஷன் குக்கிங் ஸ்பெஷல்

SELECTED Superbrand INDIA 2009-10 CONSUMER VALIDATED

# Prestige™

Issue 8 • 2009

## நெருப்பில்லா சமையல் புரட்சியில் இணைந்திடுங்கள்

## பாதுகாப்பானது செயல்திறன் மிக்கது சிறப்பம்சங்கள் நிறைந்தது

### அற்புதமான சிறப்பம்சங்கள்



இண்டக்ஷன் குக்-டாப்புகள் மீது அதிகபட்ச பயன்களை அளிப்பது பிரெஸ்டீஜ் மட்டுமே



இண்டக்ஷன் சமையலுக்கான முழுமையான பலன்களை அளிப்பது பிரெஸ்டீஜ் மட்டுமே.





## நீங்கள் ஸ்மார்ட்டான கிச்சனுக்குத் தயாரா?



Prestige

Prestige SMART KITCHEN

Available at all exclusive Prestige Smart Kitchen outlets and Prestige outlets

# கோமாதா கோயிலில் பாத்திமா!

ஒன்றல்ல; இரண்டல்ல... 185 பசுக்களைக் கழுவி குளிப்பாட்டி, மின்விசிறி காற்றில் ஈரம் உலர்த்தி ஆரோக்கியமான உணவு கொடுத்து, மூன்று வேளை பசுக்களைப் பூஜித்து வருவது பண்ணையில் அல்ல - ஒரு கோசாலையில்.

நெல்லையில் அருகன்குளம் கிராமத்தில் பசுக்களுக்கான ஆலயமாய் நடத்தி வருகிறார்கள் சாமி. ஏ.வரதராஜனும் அன்னை ராமலக்ஷ்மியும். கோகுலத்தில் பசுக்களோடு கொஞ்சி விளையாடிய பாலகிருஷ்ணனை நேரில் நிஜமாக்க நினைத்தவர், பசுவதைத் தடுப்பு மையம் தொடங்கி ஒரு பசுவைப் பராமரிக்கத் தொடங்கினார். இப்போது சன்னிதியைச் சுற்றி பசுக்களின் மங்கல சப்தம்தான்.

''2004-ல் சுப்புலெட்சுமி வந்தாள். அதற்குப் பின் ஒவ்வொருத்தரா வர ஆரம்பிச்சாங்க. எல்லோருக்கும் இங்க வந்தவுடன் ஒரு புதுப் பெயர் வைப்போம். அஸ்மா, பாத்திமாகூட இருக்காங்க. ஆமாம் ஸார் முஸ்லிம்கள் கொடுத்த பசுக்களுக்குத்தான் அந்தப் பேரு. ஒரு தாயைப் போலப் பாத்துக்கிறோம். பொங்கலுக்கு வந்து பாருங்க... ஊரே திரண்டு வந்து பூஜை பண்ணும். வயதாகி இறந்தால் மனுஷனைப் போல நல்லடக்கம் செய்றோம். பசு நம் மதத்தின் பாரம்பரியப் படிமம்தானே தம்பி!'' என்று நம்மைக் கேட்கிறார் சாமி ஏ.வரதராஜன்.





**"2004-ல் சுப்புலெட்சுமி வந்தாள். அதற்குப் பின் ஒவ்வொருத்தரா வர ஆரம்பிச்சாங்க!"**

ஆமாம் என்பதுபோல ...ம்மா... என்று கோரஸாக எழுந்தன கோமாதா குரல்கள்.

**செய்தி, சித்திரம்: நாஞ்சில் ஏ.சினிலோக்**



# மனத்தை மயக்கும்

இருள் பிரியும் அதிகாலை மணி நாலரை.

மங்கள ஆரத்தி, குரு அஷ்டகம் பாடலுடன் பிரார்த்தனையாகத் தொடங்கு கிறது.

பகவான் கிருஷ்ணரும் ராதையும் அலங்காரத்தில் ஜொலிக்க, வலப்புறமும் இடப்புறமும் நான்கு நான்கு பேராக ஸ்ரீ துங்க வித்யா, ஸ்ரீ சித்ரா, ஸ்ரீ சம்பகலதா, ஸ்ரீ லலிதா, ஸ்ரீ விசாகா, ஸ்ரீ இந்துலேகா, ஸ்ரீ ரங்கதேவி, ஸ்ரீ ஷுத் தேவி என்று தோழிகள். இவர்களை கிருஷ்ணரின் அந்தரங்க சக்தி என்கிறார்கள்.

டோலக்கின் ஒலியும் ஜால்ராவின் ஓசையும் சேர, ஹரே ராமா - ஹரே கிருஷ்ணா என்ற துதி இசையாக ஒலிக்க, அத்தனை பக்தர்களும் ஆனந்தமாக ஆடியும் ஓடியும் பாடும் பஜனைப் பாடல்கள் அந்த இடத்தின் புனிதத்துக்கு ஒரு தனி அழகு சேர்க்கின்றன.

பின்னர் துளசி மாதாவுக்கு பூஜை. துளசி மாதாவை 'பக்திராணி' என்கிறார்கள். துளசி ஏற்றுக் கொண்டதைத்தான் கிருஷ்ணர் ஏற்பாராம்.

ராதா-கிருஷ்ணர் சன்னிதியிலேயே இடப் புறம் வெள்ளிக் கவசம் அணிந்த நரசிம்மர் சன்னிதி. சிலை தமிழ்நாட்டில் கும்ப கோணத்தில் செய்யப்பட்டது. ஸ்தபதி சிலையை வடிக்குமுன் காஞ்சிப் பெரிய வரைச் சந்தித்து, சிலையைப் பற்றிச் சொல்ல, ''உக்ர நரசிம்மர் வேண்டாம். ஸ்தாணு நரசிம்மர் செய்து அனுப்பு!'' என்றாராம்.

சாருகேசி
படங்கள் : யோகா

அடுத்துள்ள இன்னொரு பெரிய மண்டபத்தில், சைதன்ய மகாபிரபுவும் அவர் சீடர்கள் நித்யானந்த பிரபு, அத்வைதாசார்யா, கதாதார் பண்டிட், ஸ்ரீவாஸ் தாக்குர் ஆகிய ஐவர் உள்ள சன்னிதி. இவர்களை ஐந்து தத்துவங்கள் என்கிறார்கள்.

இங்கும் பஜனையும் தீப ஆராதனையும் உண்டு.

மாலை ஏழரை மணிக்கு நடக்கும் தரிசன ஆரத்தியில் பிரம்ம சம்ஹிதையிலிருந்து பாடல் ஒலிக்கிறது.

இவையெல்லாம் எங்கே நடக்கின்றன?

மாயாபுரியில் உள்ள இஸ்கான் இண்டர் நேஷனல் சென்டர் எனப்படும் சர்வதேச கிருஷ்ண உணர்வு மையத்தில்.

**கொ**ல்கத்தாவிலிருந்து சுமார் 150 கி.மீ. தூரப் பயணத்தில், நவத்வீப்தாம் என்ற சின்ன ஊரில் ரயிலிலிருந்து இறங்கி, சைக்கிள் ரிக்ஷா ஏறி கங்கைக் கரை அடைந்து, நதியைப் படகில் கடந்து, இன்னொரு ரிக்ஷா பயணத்தில் பிரும்மாண்டமான இந்த 'இஸ்கான்' வளாகத்துக்குப் போகலாம்.

சுதா பவன் விடுதியில் அறை ஒதுக்கி, மறுநாள் காலை வந்து சந்தித்தார் கோபி ஜனவல்லபதாஸ். தமிழர். மனைவி - மகளுடன் இங்கே பணிபுரிகிறார். (இவர் இல்லாவிட்டால் இங்கே வந்திருக்க முடியாது!)

'இஸ்கான்' இயக்கத்தின் தலைவர் பக்தி வேதாந்த சுவாமி பிரபுபாதர். இவருடைய குரு ஸ்ரீல பக்தி சித்தாந்த சரசுவதி தாக்குர்.

1966ல், தம்முடைய 69ஆவது வயதில் அமெரிக்க நகரம் நியூயார்க்குக்குச் சென்றார் பிரபுபாதர். அங்கே டாம்கின் ஸ்கொயரில் ஹரே கிருஷ்ண மகா மந்திரத்தை எல்லா இளைஞர்களுக்கும் சொல்லிக் கொடுத்தார். ஆறே வருடங்களில் உலகின் பல நாடுகளில்



தொடர்ந்து பயணம் செய்து 'இஸ்கான்' ஒரு சர்வதேச இயக்கமாக உருவாக உழைத்தார். ஆன்மிக, வேதாந்த விஷயங்கள் அத்தனையையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். நவம்பர் 14, 1977 மாலை ஏழரை மணிக்குத் தம் பூதவுடலை நீத்தார்.

இவருடைய புஷ்ப சமாதியைத்தான் இங்கே மாயாப்பூரில், சந்திரோதய மந்திர் என்று பிரும்மாண்டமாகக் கட்டி, அவருடைய வாழ்வில் நடந்த முக்கிய சம்பவங்களை தத்ரூபமாகப் பொம்மைகள் வடிவில் காட்சிக்கு வைத்திருக்கிறார்கள்.

தலைமை பூஜாரி பிரிட்டனைச் சேர்ந்தவர். இப்போதைய பெயர் : ஜனநிவாஸ் பிரபு. இந்திய வேதாந்தங்களிலும், பாகவதத்திலும், கீதையிலும் ஊறியவர். சுபாங்கி மாதாஜி என்ற ஜெர்மன் பெண்மணியும் சுமார் நாற்பது ஆண்டுகளாக இங்கேதான் இருக்கிறார்.

இன்னும் எழுபது நாடுகளைச் சேர்ந்தவர்கள், இந்து தர்மத்தை ஏற்று, மகிழ்ச்சியாக வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள்.

**மா**யாப்பூர் பார்க்கச் சிறிய ஊராக இருந் தாலும், இந்த வளாகத்துக்குள் காலை மாலை என எப்போது பார்த்தாலும் ஆயிரக் கணக்கான பக்தர்கள்.







இங்கேதான் கிருஷ்ணரின் அவதாரம் எனக் கருதப்படும் மகான் சைதன்ய மகாபிரபு பிறந்தார் என்பது இத்தலத்தின் மிகப் பெரிய மகிமை. இவர் ஸ்ரீமத் பாகவதத்தைப் பரப்பி நாம சங்கீர்த்தனத்தை வித்திட்டு வளர்த்தவர். பிப்ரவரி 1486ஆம் ஆண்டு பிறந்து, 48 வருடங்களே வாழ்ந்து பூரியில் மறைந்தார் சைதன்யர்.

அப்போது வங்காளம் பத்தான்களால் ஆட்சி செய்யப்பட்டது. ஹரியின் நாமத்தை யாரும் உரக்கச் சொல்லக்கூடாது என்று ஆளுனர் நவாப் ஹுசைன் ஷா எச்சரித்திருந்தார். கலியுகத்தில் நாம சங்கீர்த்தனத்தின் மூலமே நற்பயன் அடைய முடியும் என்று சைதன்யர் கூறி, அதைத் தடுக்கக் கூடாது என்று மன்னர் சாந்த் காஜியிடம் கேட்டுக் கொண்டார். சாந்த் காஜி அதை ஏற்று, யாரும் நாம சங்கீர்த்தனத்தைத் தடுக்கக் கூடாது என்று தம் உயிலில் குறிப்பிட்டிருக்கிறார்!

சைதன்ய மகாபிரபு நாடு முழுதும் சுற்றி பிரசாரம் செய்தார். மகாராஷ்டிர ஞானி துக்காராம் பிரபுவால் ஈர்க்கப்பட்டு சங்கீர்த்தன இயக்கத்தை மகாராஷ்டிரா முழுதும் பரப்ப உதவினார்.

சைதன்யரின் பிறந்த இடத்துக்கு நம்மை அழைத்துச் சென்றார் சுவாமி விரஜ நாத் தாஸ். வேலூரைச் சேர்ந்த தமிழர்.

சைதன்ய மகா பிரபு பிறந்த வீட்டைச் செப்பனிட்டு, கோயிலாகவே பராமரித்து வருகிறார்கள். எங்கே பார்த்தாலும் கருந்துளசிச் செடி. சைதன்யரின் வீட்டருகேயே அத்வைத பவன். அத்வைத ஆசார்யா அமர்ந்திருக்க, சைதன்யர் ஆசி கூறும் சிற்பங்கள் இங்கே இருக்கின்றன. அடுத்து கதாதார் பவன். இங்கே சைதன்யருடன் கிருஷ்ணர்.

பூரியிலுள்ள ஜகன்னாதருக்கு இங்கே ஒரு கோயில் இருக்கிறது. பூரியில் 12 வருடங்களுக்கு ஒரு முறை விக்கிரகத்தை மாற்றுவார்களாம். இங்கே நூற்றாண்டு காலமாக ஒரே மூல விக்கிரகம் இருந்து வருகிறது.

படகேறி கங்கையைக் கடந்து ஆட்டோ பிடித்தால் ஸ்வரூப்கஞ்சிலிருந்து 10 நிமிடப் பயணத்தில் நரசிம்மபள்ளியை அடையலாம். மந்தாகினி நதிக்கரையில் அமைந்திருக்கிறது நரசிம்மர் ஆலயம். ஹிரண்ய கசிபுவைக் குடல் கிழித்த பிறகு ரத்தக் கறையை மந்தாகினி நதியில் கழுவிக் கொண்டாராம். ''இது சுயம்பு நரசிம்மர்!'' என்றார் பூஜாரி.

மாலை, இஸ்கான் தலைமைப் பீடத்தைச் சேர்ந்த உமாபதி சுவாமிஜியுடன் உரையாட நேரம் தரப்பட்டிருந்தது.

இவர் அமெரிக்கர். 1966ல் நியூயார்க்கில் இயக்கம் தொடங்கப்பட்டபோதே அதில் சேர்ந்தவர். சவுண்ட் ரெக்கார்டிங் எஞ்ஜினீயராக இருந்தவர். ''கிருஷ்ண பக்தி என்பது மிக உயர்ந்த யோகம் என்று பகவத் கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. பிற நூல்களிலும் படித்து இதைத் தெரிந்துகொண்டேன். ஹரே ராம ஹரே கிருஷ்ண மந்திரத்தை இளைஞர்களும் சொல்வதில் ஆர்வமாக இருந்தார்கள். 'இஸ்கா'னில் ஒரு சந்நியாசியாக இருந்துகொண்டே கிருஷ்ண உணர்வை அனுபவிக்கலாம்! பழக்கத்தால்தான் நம்பிக்கை வரும். நீங்கள் செய்ய வேண்டியது முயற்சி மட்டுமே. காலம் காலமாக இருந்துவரும் ஆன்மிகப் படைப்புகளிலும், சாத்திரங்களிலும், ஞானிகளிடமும் நம்பிக்கை வைக்க வேண்டும்... பெரிய மனிதர்கள், சாதுக்கள்

பகவத் கீதையை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். ஏன், ஆதி சங்கரரே பஜகோவிந்தம், பஜகோவிந்தம் என்று கோவிந்தனைப் பாடவில்லையா?'' என்றார் இந்த அமெரிக்க சுவாமிஜி.

மறுநாள் சுவாமி கௌரங் என்ற இன்னோர் அறிஞர் நம்மோடு உரையாடினார். (இவரும் சென்னையைச் சேர்ந்தவர்தான்!)

''நம்முடைய முக்கியப் பிரச்னை ஜனனம்-ம்ருத்யு-ஜரா-வியாதி என்ற நான்கு பந்தங்களிலிருந்து விடுபடுவது. நீங்கள் பகவானுடைய பணியாளனாக இருக்க வேண்டும். அதற்குக் கிருஷ்ணரின் நாமத்தைச் சொல்லிச் சொல்லித்தான் பணியாளனாக முடியும். அதைத்தான் சைதன்ய மகா பிரபு எளிதாகச் சொன்னார். இதைத்தான் பக்தி யோகம் என்கிறோம்!'' என்றார்.

**வ**ளாகத்துக்கு வெளியே, அழகான வனம் சூழ்ந்த பகுதியில் ஒதுக்கமாக இருக்கிறது குருகுலம். ரஷ்யாவிலிருந்து வந்திருக்கும் 17 வயது மாணவர் - இங்கே வந்த பிறகு அவர் பெயர் தானேஷ்வர் - சொன்னார் :

''நான் இங்கு வந்து இரண்டு வருடங்களாகின்றன. வேதங்கள், உபநிஷத்துகள் எல்லாவற்றையும் ஆங்கிலத்தில் படிக்கிறோம். இவை தவிர, வேத முறை கணிதம், ஆங்கிலம், சம்ஸ்கிருதம், யோகா பயிற்சிகள், மந்திரங்கள் கற்பிக்கிறார்கள். நல்ல குணங்களைக் கற்கவும், ஒரு சிறந்த வைஷ்ணவனாக இருப்பதற்கும் இந்த இடம் ஏற்றது!''

குருகுலத்தின் தலைமை ஆசிரியர், செக்கோஸ்லவேக்யா நாட்டைச் சேர்ந்தவர். இங்கே வந்த பிறகு அவர் பெயர், ப்ரீத்தி வர்தன் தாஸ்.

''இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் தவிர, அமெரிக்க ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் மாணவ - மாணவிகள் இங்கே வந்து கல்வி கற்கிறார்கள். நான் 1993ல் இங்கு வந்தேன். இங்கு வந்த பிறகுதான் வாழ்க்கையின் அர்த்தத்தைப் புரிந்து கொண்டேன். செக்கோஸ்லவேக்யாவில் சில பக்தர்களைச் சந்தித்ததால் பகவத் கீதையைப் படித்துத் தெரிந்து கொண்டேன். அதற்குப் பிறகு இந்தியாவுக்கு வந்தேன். பிருந்தாவனத்துக்குப் போன போது அங்குள்ள பக்தர்கள் இந்த மாயாப்பூர் பற்றிச் சொன்னார்கள். வந்து விட்டேன்!''



குருகுலத்திலும் தனியே ஓர் அறை நரசிம்மருக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது.

## கிருஷ்ண பக்தி என்பது மிக உயர்ந்த யோகம்!

இங்கேயுள்ள சிறிய நரசிம்மர் சிலை, தென்னாட்டில் பக்தி வித்யாபூர்ண சைதன்யர் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருந்த போது ஒரு கிணற்றிலிருந்து கிடைத்ததாம். தூணைப் பிளந்துகொண்டு நரசிம்மர் வெளிப்படும் அபூர்வ சிலை; 800 ஆண்டுகளுக்கு முந்தையதாம். இன்னொரு விக்கிரகம் சிவலிங்கத்தோடு இணைந்த விஷ்ணு!

**அ**ழகான சூழல், எப்போதும் பக்தி மயமான பஜனைப் பாடல்கள், எங்கேயும் 'ஹரே கிருஷ்ணா' ஓசை.

மாயாப்பூர் உண்மையிலேயே ஒரு மாயாபுரிதான்.

ஒரு கேமராமேன் என்ற வகையில் ரஜினியை எந்த ஒரு காட்சியிலும் இடுப்புவரை ஃப்ரேமில் கொண்டுவரத் தயங்கமாட்டேன். அவருக்குத் துளியும் தொப்பை கிடையாது. உடம்பு அவ்வளவு டிரிம். ஒரு நாள் நாங்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது, ''துளிக்கூட தொப்பையே இல்லாமல் இருக்கீங்களே? அது எப்படி ஸார்?'' என்று நேரடியாகவே அவரைக் கேட்டு விட்டேன். பலமாக ஒரு சிரிப்பு சிரித்து விட்டு, ''அது ஒண்ணும் பெரிய விஷயமில்ல; நாக்கைக் கட்டினா, தொப்பை இருக்காது'' என்று பட்டென்று டிரிம் ரகசியத்தைப் போட்டு உடைத்தார்.

ஒரு நாள் காலை ஒன்பது மணிக்கு ஆரம்பித்த ஷூட்டிங், இரண்டு லொகேஷன்கள் மாறி திருப்போரூரில் கடைசியாக ஒரு பப்ளிக் டெலிபோனில் காயின் போட்டுப் பேசுவது போல ஒரு காட்சி எடுத்து முடிக்கும்போது, இரவு இரண்டு மணியாகி விட்டது.

ஆனாலும், டெலிஃபோனுக்குள் காசு போடுவது போல கையின் சில க்ளோஸ்-அப் ஷாட்கள் எடுக்க வேண்டியிருந்தது. அது பற்றி ரஜினி சாரிடம் சொன்னதும், ''காயின் போடுவதை க்ளோஸ் அப்பில் தானே எடுக்கப் போறீங்க? அதற்கு எந்தக் கையானாலும் பரவாயில்லையா? இல்லை இந்தக் கைதான் வேண்டுமா?'' என்று தன் கைகளைக் காட்டிக் கேட்டார். டைரக்டர் ஷங்கர், ''எந்தக் கையையாவது வைத்து இந்த ஸீனை எடுக்கறதும், சூப்பர் ஸ்டாரின் கையை வைத்து எடுக்கறதும் ஒண்ணாயிடுமா ஸார்? உங்க கையால காயின் போடும் போது விரலை ஸ்டைலா ஒரு சுண்டு சுண்டுவீங்க! அதுக்கு தியேட்டர்ல ரியாக்ஷன் எப்படி இருக்கும்! உங்க கைதான் எனக்கு வேண்டும். நீங்க காலையிலிருந்து ஷூட்டிங்ல இருக்கீங்க! டயர்டா இருந்தா சொல்லுங்க. ஷாட்டை நாளைக்கு எடுத்துக்கலாம்!'' என்றதும், உடனே, ''ஓகே... நோ ப்ராப்ளம். இப்பவே முடிச்சிடலாம்'' என்று சொல்லிவிட்டு இன்னும் ஒரு மணிநேரம் கூடுதலாக இருந்து, அந்தக் காட்சியை எடுக்க ஒத்துழைத்தார்.

சிவாஜி படத்தின் கதையை முடிவு செய்தபிறகு, ஷங்கர் கவனம் செலுத்தியதெல்லாம் ரஜினி ஸாரின் ரசிகர்களை என்ன புதுமைகள் செய்து திருப்திப்படுத்தலாம் என்பதில்தான். 'ரஜினியை இளமையாகக் காட்டுவது எப்படி? பாடல் காட்சிகளில் சண்டைக் காட்சிகளில், செட்களில், என்னென்ன செய்யலாம்?' என்று யோசித்தார். கறுப்பு வைரமாக இருக்கும் ரஜினியை, ஒரு வெள்ளைக்காரர் போலக் காட்டினால் எப்படி இருக்கும் என்ற




## ஸ்டார்ட்... கேமரா... ஆனந்த்!



**கே.வி.ஆனந்த்**

மிகவும் புதுமையான ஐடியா ஷங்கருக்குத் தோன்றியது. பிளாஸ்டிக் சர்ஜரி செய்வது போல ஒரு மனிதருடைய உருவத்தில் எந்தவிதமான மாற்றத்தையும் ஏற்படுத்தாமல், கறுப்பு நிறத் தோலின் மீது ஐரோப்பியர்களின் வெள்ளை நிறத் தோலை ஒட்ட முடியும் என்று நான் ஐடியா சொன்னேன்.

இந்தியன் ஆர்ட்டிஸ்ட் என்ற கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸ் நிறுவனத்துடன் பேசினோம். அவர்கள் கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸில் அதைச் செய்துதரச் சம்மதித்தார்கள். லண்டனிலிருந்து வந்த ஐரோப்பிய மாடல் அழகிகளை வைத்து



# பத்தொன்பதில் பக்குவம்!

ஸ்பெயினில் எடுக்கப்பட்ட அந்தக் காட்சியில் ரஜினியுடன் நடனமாடிய ஒரு அழகியையே ரஜினியின் வெள்ளைத் தோலில் தோற்றமளிக்கச் செய்யவும் பயன்படுத்திக் கொண்டோம். அதாவது ரஜினியையும், மற்ற அழகிகளையும் வைத்து ஒரு ஷாட் எடுத்தவுடன், அதே இடத்தில் ரஜினிக்குப் பதிலாக அந்த அழகியை ரஜினியின் மூவ்மெண்ட்களைச் செய்யச் சொல்லி மீண்டும் ஒரு ஷாட் எடுத்துக் கொண்டோம். கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸ் மூலம் இரண்டையும் இணைத்து ரஜினியை வெள்ளைக்காரராக மாற்றினோம். இந்த ஸ்பெஷல் எஃபெக்ட்டுக்காகத்தான் சிவாஜி படத்துக்குத் தேசிய விருது கிடைத்தது.

ஒரு சமயத்தில் ஒரு படத்துக்கு மட்டுமே ஒப்புக்கொள்வது என்பது என் கொள்கை. அதனாலேயே எனக்கு மிகவும் பிடித்த பாலசந்தர், பாரதிராஜா, சேரன், கௌதம் மேனன், முருகதாஸ், செல்வராகவன், மலையாளத்தில் பரதன், ஹரிஹரன், ஜெயராஜ், ஹிந்தியில் ராம்கோபால் வர்மா,

அசுதோஷ் கௌரிகர், நாகேஷ் குகுனூர் போன்றவர்களின் படங்களில் பணியாற்றும் வாய்ப்புகள் வந்தபோதும், ஏற்க முடியாமல் வருத்தப்பட்டிருக்கிறேன்.

**எ**ன் கனவுகளில் ஏதோ சில படிகளாவது ஏறியிருப்பது என் சாதனை என்று மார்தட்டிக் கொள்ளும் அளவுக்கு மடையன் அல்ல நான். என்னைச் சுதந்திரம் கொடுத்து வளர்த்த பெற்றோர், 19 வயதிலேயே என்னைப் பக்குவப்படுத்திய கல்கி, எனக்கு சினிமாவை அறிமுகப்படுத்திய பி.சி.ஸ்ரீராம், என்னைப் பொறுத்துக் கொள்ளும் மனைவி சசி, எழுத்தாளர்கள் சுபா



**அடுத்த அடியை எடுத்து வைத்துவிட்டேன் ஏமாற்றங்கள், வலிகள், வெற்றிகளுக்காக...**

போன்ற நண்பர்கள், என் அற்புதமான டைரக்டர்கள் - அத்தனை பேரையும் கொழு கொம்பாகப் பற்றிக்கொண்டு வளர்ந்து வரும் கொடி நான். விருந்தாளிக்கு வீட்டைச் சுற்றிக்காட்டும்போது, விரிசலான சுவர், ஈரம் கசியும் மூலைகளை அவர்கள் கண்ணில் பட விடமாட்டோம். அதுபோல நான் ஏறிய படிகளுக்குப் பின்னால் ஏற்பட்ட ஏமாற்றக் காயங்களும், அவமானப்பட்ட ரகசியக் கண்ணீரும் உண்டு.

**க**னாக்கண்டேன் படத்தை ஏ.எம்.ரத்னத்தின் சூரியா மூவிஸ் தயாரிக்க முடிவாகி இருந்தது. ஷூட்டிங் ஆரம்பிக்க இன்னும் இரண்டே நாட்கள் என்பதால், அலுவலகத்தில் என் அசிஸ்டன்ட்களுக்குப் படப்பிடிப்பு சம்பந்தமாக படபடவென்று இன்ஸ்டிரக்ஷன்ஸ் கொடுத்துக் கொண்டிருந்தேன். திடீரென்றுதான் யாரிடமும் உற்சாகமில்லாததைக் கவனித்தேன். விசாரித்தபோது, தயாரிப்பாளருக்கும், ஹீரோவுக்கும் சம்பள விஷயத்தில் மன வேறுபாடு என்பதால் படம் டிராப் ஆகி விட்டதை என் கண்களைப் பார்க்காமலேயே சொன்னார்கள். எல்லோரையும் கலைந்து போகச் சொல்லிவிட்டு, என் உடைமைகளை அள்ளிப்போட்டுக் கொண்டு அங்கிருந்து அகன்றேன்.

வீட்டுக்குச் சென்றபோது, ''ஹை! அப்பா சீக்கிரமே வீட்டுக்கு வந்திட்டாங்க! எல்லோரும் டின்னருக்குக் கிளம்பலாம்'' என்று குழந்தைகள் உற்சாகமாகக் குரல் கொடுத்தார்கள். ஆமாம்! அன்று என் பிறந்த நாள்! எனக்குத் தெரியாமலே டின்னருக்கு நட்சத்திர ஹோட்டலில் டேபிள் ரிசர்வ் செய்திருந்தார் என் மனைவி சசி. அவர்களோடு ஹோட்டலுக்குச் சென்றேன். அவர்கள் சிரித்தபோது நானும் சிரித்தேன். இரவு படுத்தபோது என் கண்கள் நனைந்திருந்ததை உணர்ந்தேன். என்னைச் செல்லமாக கல்லுளி மங்கன் என்று திட்டும் சசி, எதுவுமே தெரியாமல் தூங்கிக் கொண்டிருந்தார். எனக்கு நினைவு தெரிந்து நான் கண் கலங்கிய தருணம் அதுதான்.

அதன்பிறகு தயாரிப்பாளர் தேனப்பன் கனாக்கண்டேன் படத்தைத் தயாரிக்க முன் வந்தார். படம் வெளியாகி அனைவருடைய பாராட்டுகளையும் எனக்கு அள்ளித் தந்தது. என் இயக்கத்தில் வெளியான அயனின் பெரும் வெற்றிக்குப் பின், அடுத்த அடியை எடுத்து வைத்துவிட்டேன்; ஏமாற்றங்கள், வலிகள், வெற்றிகளுக்காக...

(முற்றும்)

எழுத்து வடிவம் : **எஸ்.சந்திரமௌலி**

---



# கம்பன் விரித்த கடை!

கம்பனுக்கு ஒரே அங்கலாய்ப்பு! ''இந்த உலகத்து மக்களுக்கு எப்போது மனமுதிர்ச்சி வரும்? அறிவிலே இன்னும் ஏழைகளாகவே இருக்கிறார்களே! இந்த அறியாமை இருட்டிலிருந்து விடிவே கிடையாதா?'' என்று ஏக்கப் பெருமூச்சு விடுகிறான்! ஏன்? ''கல்யாணத்துக்குத் தயாராக சீதைக்கு அலங்காரம் செய்யப் புறப்பட்டு விட்டார்கள் அவளுடைய தோழிமார்கள்! இயற்கையிலேயே சுவையுடைய அமுதத்துக்கு சர்க்கரை கற்கண்டு சேர்ப்பதனால் என்ன பயன்? செயற்கையான அணிகலன்களைக் கொண்டு செய்யும் அலங்காரம் சீதையின் இயற்கை அழகை மறைக்குமேயன்றி, மேலும் மெருகூட்டக் கூடுமோ! ஏன் இந்த வீண் வேலை?''

ஒரு கவிஞன் என்ற வகையில் அவனது கற்பனையையும் கைவண்ணத்தையும் காட்ட வாய்ப்பாக அமைந்த கட்டம் இது.

திருமணத்தில் மணப்பெண் அணிந்திருக்கும் நகைகளின் பேரில் ஊர் மக்களுக்கு ஒரு தனி சுவாரஸ்யம் - Talk of the Town! கம்பனும் தன் நகைக் கடையை விரிக்கிறான். நெற்றியில் சுட்டி, காதில் குழைகள், கழுத்தணிகள் (நெக்லஸ்), மார்பில் தவழும் ஆரங்கள், தோளணிகள், கைகளில் கடகங்கள், இடையில் மேகலை, பாதங்களில் சிலம்பு, நூபுரம், பாத ஜாலம் என்று பட்டியல் நீள்கிறது. இதுவரை நாம் கண்டு கேட்டு அறியாத புதிய புதிய அணி வகைகளையும் எடுத்து வந்து காட்டுகிறான் கம்பன். தலையில் அணியும் 'பூட்டு', இடையில் மேகலையை அடுத்து அணியும் 'தாரகைச் சும்மை' என்னும் அணி வகைகளை நாம் இதுவரை கேட்டதில்லை. முன்னுச்சியில் முடிக்கற்றைகளுக்கு அணிவிக்கும் ஒரு அணி பூட்டு! 'தாரகைச் சும்மை' என்னும் அணிகலனுக்கு 'மணிவடத் தொகுதி' என்றும் பெயர் உள்ளதாகத் தெரிகிறது. பல்வகை மணிகளைக் கோத்து வடமாகச் செய்து, அப்படிக் கோத்த பல வடங்களை இணைத்து செய்யப் பெற்றது மணிவடத் தொகுதி!



அழகுத் தொடர் 2

சரி! மணப்பெண்ணுக்குத்தான் இத்தனை அலங்காரமா? மாப்பிள்ளைக்கு ஒன்றும் கிடையாதா என்று கேட்க வேண்டாம்! மணமகனின் அலங்காரமும் தடபுடல்தான்! 'சுழியம்' என்னும் ஒரு வகைத் தலையணி (இது கருங்கடலில் பூத்த செந்தாமரை போல் இராமனது கருங்குழற் கற்றையை அலங்கரித்ததாம்!), செம்பொன்னால் ஆகிய மாலை; காதுகளில் ஒளி வீசும் குண்டலங்கள்; நெற்றியில் 'வீரபட்டம்' என்னும் பொன் தகடு; வெண்முத்து மாலைகள் (கருநீல வண்ண மார்பில் எடுப்பாகத்

• த.கி.நீலகண்டன் •



தோன்றும் contrast!) கேயூரம் என்னும் தோள் வளைகள்; முத்துக் குஞ்சங்கள் அமைந்த வாகுவலயங்கள்; கைகளில் கடகங்கள்; மார்பில் நவரத்தினங்கள் இழைத்த மாலை; அரையாடையின் மீது அழுந்தக் கட்டிய உதரபந்தனம் (Belt?) என்னும் அணி; முத்தும் நீலமணியும் பதித்த பொன்னால் ஆன இடையணியில் கட்டிய உடைவாள்; முத்து வரிசைகளால் ஆன அரைப் பட்டிகை; அதிலிருந்து தொங்கும் நவரத்தினத் தொங்கல்; துடையை அழகு செய்யும் 'குரங்குசெறி' (கிம்புரி என்று இதற்கு வட



மொழிப் பெயர் என்றும், பிறைச் சந்திரனும் மகர மீனின் திறந்த வாயைப் போலவும் விசித்ரமான அமைப்புடைய வேலைப்பாடு மிக்க அணிகலன் இது என்றும் தெரிகிறது), கால்களில் சிலம்பும் வீரக் கழலும் என்று இத்தனை அணிமணி ஆபரணங்களைப் புனைந்து திருமணக் கோலத்தில் காட்சி தருகிறான் கல்யாண ராமன்!

இந்த வர்ணனைகள் எல்லாம் கம்பன் என்ற ஒரு கவிச்சக்ரவர்த்திக்கு சர்வ சாதாரணம்; இவற்றைப் பாடுவது எல்லாம் ஒரு ஜனரஞ்சகத்துக்காகவே! கம்பனின் முத்திரை விழுவது வேறு சில இடங்களில். அவற்

றைப் பார்ப்போம்!

சீதை அணிந்திருந்த கைவளையல் களுக்கு ஒரு தனி உபயோகம் இருந்ததாம்! எப்படி?

முனிவர் ஒருவரின் பின்னே, இரு ஆடவர்கள் கைகளில் வில்லை ஏந்தி நடந்து செல்வதைக் கன்னிமாடத்தில் நின்று கொண்டிருந்த சீதை காண்கிறாள். அவர்களுள் மேக வண்ண மேனியனான ஒருவனும் சீதையைக் காண்கிறான். ஒருவரை ஒருவர் இன்னார் என்று அறியாத நிலையில் இருவரும் காதல் வயப்பட்டதாகக் கம்பன் ஒரு தனி ஓவியம் தீட்டுகிறான். மூல நூலான வான்மீகி இராமாயணத்தில் இல்லாத நிகழ்ச்சி இது! ''அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்'' என்ற வரி, கம்பனுடையது என்று தெரியாதவர்களிடத்திலும் பிரபலமான வரி! இப்படி ஒரு கட்டம் உருவான பிறகு ''வில்லை எடுப்பவனுக்கே சீதை'' என்ற நிபந்தனை வேறு என்றால் சிக்கல் இல்லையோ? ஒருவேளை வேறு யாராவது வில்லை வளைத்து விட்டால் சீதையின் காதல் என்னாவது? நிபந்தனைக்குட்பட்ட மணமகள் வேறு ஒருத்தியாக இருந்துவிட்டால் இராமன் காதல் என்னாவது? இந்தச் சிக்கலே ஒரு சுவையான நாடகக் காட்சிக்கும் சாதனமாகிறது!

சீதை மண்டபத்துக்குள் வரும்போதே இராமன் சந்தேகம் தீர்ந்து போய்விடுகிறது. ஆனால், மணப்பெண்ணான சீதை அத்தனை பேர் முன்னிலையிலும் அருகில் நிற்கும் ஆண்மகனை எப்படி கண்ணெடுத்துப் பார்ப்பது? சீதைக்குக் கூச்சமாக இருந்தாலும் ஆர்வமும் படபடப்பும் விடவில்லை! அன்று கன்னிமாடத்தில் இருந்து தான் கண்ட ஒருவனே இவன் என்று எப்படித் தெரிந்துகொள்வது? அவள் கைகளில் அணிந்திருக்கும் வளையல்கள் அந்த நேரத்தில் கை கொடுக்கின்றன! சரிந்து விழும் வளையல்களைச் சரி செய்து கொள்வது போன்ற பாவனையில், ஒரு கணம், ஒரே ஒரு கணம்தான், கடைக்கண்ணால் இராமனைப் பார்த்துத் தன் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்கிறாளாம்.

'கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள்'

ஒப்பற்ற ஒரு ஒளிப் பதிவுக் கலைஞனாக (cameraman) நின்று இந்த உன்னதமான காட்சியைப் படம்பிடித்து விடுகிறான் கம்பன். இந்த ஒரு கணத்துக்காகவேதான் அத்தனை கதைக் கட்டுமானமும்!



'சூடாமணி'யை இராமன் கைகளில் தொட்டு வாங்கிய போது, சீதையின் கைகளைப் பற்றுவது போலத் தோன்றியதாம்!

இராம காவியத்தின் இன்னும் இரு முக்கியமான பாத்திரங்கள் கணையாழியும் சூடாமணியும். இன்றைய தொலைத் தொடர்புச் சாதனங்கள் சாதிப்பதை இந்த இரு சிறு அணிகலன்களும் சாதித்து விடுகின்றன!

இப்படி அணிகலன்களில் அதிசயமான உணர்வுகளையும் சேர்த்து கம்பன் இழைத்திருக்கும் வரிகள் அநேகம். அவை அணிகலன்களுக்கே ஒரு தனி அழகு கூட்டுபவை அல்லவோ!

(அடுத்த இதழில் நிறையும்)

வண்ணப்படங்கள்: கோபுலு



# தீபாவளி பரிசு

**சாயம் வெ.ராஜாராமன்**

மருத்துவமனையை விட்டு வந்த கேசவன் சோகத்தின் பிடியில். பத்து நாட்கள் முன்பு அவருக்குத் திடீரென்று மார் வலி ஏற்பட, அவர் மனைவி அலறிச் சென்று ஆட்டோ பிடித்து வர, ஒரு வாரம் மருத்துவமனை வாசியாகி, ஓரளவு உடல் தேறி, இப்போது வீட்டில் ஓய்வெடுத்தபடி.

உறவினர்கள் மருத்துவமனைக்கு வந்து அவரைப் பார்த்தாலும் அவருக்கு ஒரு வருத்தம். அவர் தெருவில் பக்கத்து வீட்டுக்காரர் சுந்தரத்தைத் தவிர யாரும் அவரை வந்து பார்க்கவில்லை. சுந்தரம் முப்பது வருடங்களாக அங்கு இருக்கிறார். மற்றவர்களில் பாதி புதியவர்கள் என்றாலும், பார்க்கும்போது புன்னகைத்ததுண்டு. பழக்கம் இல்லையென்றாலும், முகம் பரிச்சயம். பொதுவான வேலைக்காரி மூலம் விஷயம் தெரிந்திருக்கும். மார் வலியோடு ஒருவர் மருத்துவமனையில் இருந்திருக்கிறார் என்று தெரிந்தும் ஒருவருக்கும் வந்து நலம் விசாரிக்கத் தோன்றவில்லையா? நினைக்கையில் அவர் மனது வேதனை கொண்டது.

''கேசவன்... உடம்பு தேவலையா?'' கேட்டுக்கொண்டே சுந்தரம் வந்த அன்று தீபாவளி.

''ரெஸ்ட் எடுக்கறேன். தேவலை. தீபாவளி நல்லா கொண்டாடினீங்களா...? தெருவுல யாருமே இந்த வருஷம் கோலாகலமா தீபாவளி கொண்டாடலையா என்ன? வெடிச் சத்தமே காணோமே. தீபாவளி அதுவுமா எல்லாரும் டீ.வி. முன்னாடி உட்கார்ந்துடறாங்க போலிருக்கே'' கேட்ட கேசவனைப் பார்த்தார் சுந்தரம்.

''விஷயமே தெரியாதா கேசவன்... உங்களுக்கு ஹார்ட் அட்டாக் வந்த விஷயம் நம்ம தெருவுல நிறைய பேருக்குத் தெரிய வந்திருக்கு. அதனால, யாரும் அணுகுண்டு மாதிரி பெரிய வெடிகளை வெடிக்க வேணாம்னு முடிவெடுத்திருக்காங்க. எல்லாரிடமும் வற்புறுத்திக் கேட்டுக்கிட்டு இருக்காங்க'' சுந்தரம் சொல்லும்போதே கேசவன் கண்களில் தீபாவளி பரிசு பெற்றது போல் ஆனந்தக் கண்ணீர்.

# தீபாவளிக்கு

## மெருகூட்டுங்கள்



THE DIWALI OFFER

- ரூ. 25000/-* மதிப்புள்ள நகைகள் வாங்கும் பொழுது ஒரு சேலை இலவசமாக பெறுங்கள்.
- ரூ. 5000/-*க்கு மேல் நகைகள் வாங்குபவர்களுக்கு இலவச பரிசுகள் நிச்சயம்.
- இந்த சலுகை அக்டோபர் 18, 2009 வரை மட்டுமே.

OKJ

SINCE 1933

THE JEWELLERY STORE

Sundays Open | Valet Parking

74, Usman Road, **T.Nagar**, Ph: 044-2434002/5809 | 1st Avenue, **Annanagar**, Ph: 044-26265000/8000

# மாமியார் பஜ்ஜி நாத்தனார் சட்னி!

ஜோக்ஸ்: வெ.சீதாராமன்



''உன் மாமியாரும் நாத்தனாரும், சேர்ந்து உன் வீட்ல வந்து தங்கப்போறாங்களாமே, பாவம் உனக்கு எப்படி இருக்கும்?''

''ம்... மிளகாய் பஜ்ஜிக்கு, மிளகாய் சட்னி தொட்டுக்கற மாதிரி இருக்கும்!''



''உனக்கு ஏன் 'லெண்டிங் லைப்ரரி' ஆரம்பிக்கணும்னு தோணிச்சு?''

''என் சலூன்ல முடி வெட்டிக்க வர்றவங்களைவிட, ஓ.சி.ல பத்திரிகை படிக்க வர்றவங்க அதிகமாயிட்டதாலதான்!''



''தலைவருக்கு கௌரவ டாக்டர் பட்டம் கொடுத்ததுல அவருக்கு ஒரு சந்தேகமா, என்னவாம்?''

'''கௌரவ'ன்னு சொன்னப்பறம் பேஷண்டுங்ககிட்டே ஃபீஸ் வாங்க முடியுமான்னு கேக்கறார்!''



''ஊர்வலம் போன மன்னரை காவலர்கள் 'திருடன்'னு நினைச்சு சிறைல அடைச்சிட்டாங்க!''

''தான் மன்னர்னு அவர் சொல்லி இருக்கக் கூடாதா?''

''ஏற்கெனவே அப்படி சொன்ன நாலு திருடர்களை, அவங்க சிறைல தள்ளியிருக்காங்களே!''

படங்கள்: மாயவன்







# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE

(FREE HOME FOR THE BLIND, ORPHAN AND AGED)

TIRUCHANOOR, TIRUPATI-517503.PH:0877-2239992, 9908537528[Mob]

E.mail : navajeevan @sancharnet.in website: www. navajeevan.org

## DEEPAVALI GREETINGS - 2009

## 30 YEARS OF SERVICE TO HUMANITY 1979 - 2009

| | | |
|---|---|---|
| 1. | Navajeevan School & Hostel for Blind Children | - Tirupati & Orissa |
| 2. | Navajeevan Free Eye Hospital | - Tirupati |
| 3. | Navajeevan Free Home for Aged | - Tirupati & Rishikesh |
| 4. | Navajeevan Hari jan Sewa Ashram | - Kothapeta |
| 5. | Navajeevan Sharanagati Vridhashram | - Tirupati |
| 6. | Navajeevan Orphanage | - Patapatnam/Parlaki Mudi [Orissa] |
| 7. | Navajeevan Rural Medical Centres | - Berhampur [Orissa] |
| 8. | Navajeevan Eye Care Centres | - Serango [Orissa] |

A Humble Request for Donation

| | | |
|---|---|---|
| 1. | Sponsor one day Annadan to Blind Children and aged | - Rs. 5000/- |
| 2. | Sponsor 5 IOL Cataract Eye Operations | - Rs. 7000/- |
| 3. | Sponsor one blind child or Orphan child for one year | - Rs. 6000/- |
| 4. | Sponsor one poor aged person for one year | - Rs. 5000/- |
| 5. | Sponsor one free eye camp at Rural/Tribal area | - Rs. 50000/- |
| 6. | Vidyadan – Educational aid for one Child | - Rs. 2000 |

Donor devotees can send their contributions by cheque/DD/M.O to the above address on the occasion of birthday, Wedding day or any other special occasions and receive prasadam of Lord Balaji Venkateswara of Tirupati as blessings.

Contributions to NAVAJEEVAN BLIND RELIEF CENTRE, Tirupati are eligible for Tax Relief U/S 80G of Income Tax Act.

We can attain salvation through Social Work –Swami Vivekananda

K.Sridhar Acharya
Founder/President



ராஜேஸ்வரி வைரவன்

# பறவைகளின் தீபாவளி!

''தீபாவளின்னா பட்டாசு வெடிச்சு, ராக்கெட் விட்டு, பறவைகளைப் பதறடிக்கிற சூழல்ல... எங்க ஊர்ல ஒரு அம்மா, பறவைங்க எல்லாம் வந்து தின்னுட்டுப் போகட்டும்னு தங்களோட நிலத்துல பயிர் செய்யறாங்க. பறவைகளைப் பொறுத்தவரைக்கும், அவங்க காட்டுல தினந்தோறும் தீபாவளி!'' எனச் சொன்னார் சிவகங்கை மாவட்டத்தின் அலவாக்கோட்டை கிராமவாசி. என்னடா இது புது நியூஸா இருக்கேன்னு போய்ப் பார்த்தோம்.

''மனுஷ வயிற்றுப் பசிக்கு நெல்லு விளைவிச்சுத் தர்றோம். இந்தப் பறவைகளுக்கு...?' அப்படின்னு ஒரு கேள்வி எங்க (கணவன் - மனைவி) மனசுக்குள்ளே ரொம்ப காலமா ஓடிட்டு இருந்திச்சு. அவுகளோட அம்மா (என் மாமியார்) சொல்லிக்கிட்டே இருப்பாங்க, 'வெள்ளாமை வெளைஞ்ச பூமியில, பறவைகள் வந்து தின்னுக்கிட்டு இருந்தா, அதுகளைப் பத்தாதே. விரட்டியும் விடாதே'-ன்னு.

பறவைகளுக்குன்னு தனியா, ஒரு காட்டுல பயிர்களை வளர்த்து விட்டா எப்படியிருக்கும்னு யோசிச்சேன். அதனோட விளைச்சல்தான் இது. மனசுக்கே ரொம்ப சந்தோஷமா இருந்திச்சு. வருஷம் பூரா தொடர்ந்து பறவைகளுக்குக் கதிர்கள் கெடைக்கணும்னு, ஆறு ஏக்கர்ல பல பகுதிகளாகப் பிரிச்சுக்கிட்டு பட்டம் மாத்தி மாத்தி விதைச்சிட்டு இருப்போம். அதனால, ஏதேனும் ஒரு பகுதியிலன்னு தொடர்ந்து பறவைகளுக்குத் தின்ன கதிர் கெடைச்சிக்கிட்டே இருக்கும். எங்க பண்ணைய நோக்கிப் பறந்து வர்ற பறவைங்க, என்னைக்கும் ஏமாந்து போனது கிடையாது. பறவைகள் தின்னு முடிச்சுட்டுப் போனதுக்கப்புறம் அதனோட தட்டைகளை வெட்டி (சோளத் தட்டை, கம்பந்தட்டை) கால்நடைகளுக்குத் தீவனமாப் போட்டுடுவோம். மொத்தத்துல எங்க பண்ணையின் அந்த ஆறு ஏக்கர் தானியத் தோட்டம் பட்சிகளுக்கு இலவச ஹோட்டல்தான்'' எனக் கூறுகிறார் அலவாக்கோட்டை கே.வி.ஆர். விவசாயப் பண்ணை நடத்தும் ராஜேஸ்வரி வைரவன்.

செய்திச் சித்திரம்: **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# நட்சத்திர சிறுகதை-1



# பொன்னிற இரவு!

உமா மகேஸ்வரி

வருணா வட்டக் குஷன்களை ஸோபா விலிருந்து ஹாலின் நான்கு மூலைகளுக்கும் எறிந்தாள். நடுவில் குட்டி ஃப்ராக் பறக்க, கூந்தல் விரிய, விரல் கள் புத்தம் புதிதான எதையோ கைப்பற்றிய பாவனையில் இருக் கச் சுழன்றாள். அடுத்து அவள் எடுத்து எறியக் குறி வைத்திருப்பது ஸோபாக்களின் சாய்மானத்தில் இருக்கும் பூச்சித்திரத் துணிகளை. அதற்குள் உள்ளிருந்து பாட்டியின் குரல்.

''குட்டிம்மா, எதையும் எடுத்து எறியாதே. சமர்த்துப் பிள்ளைதானே நீ?''

''ஏன் எறியாத?''

வருணா மழையாகவே இன்னும் சுழன்றாள்.

''எறியாத ஏன்?'' வார்த் தைகளையும் சுழற்றுவதும், எறிவதும் அவளுக்கு இந்த மூன்று வயதில் பிடித்தமான பழக்கம். பாட்டி அடுப்பில் எதையோ கிண்டிக் கொண்டே, ''நம்ம வீட்டுக்கு இன்னிக்கு யாரோ வராங்க'' என்றார்.

''யாது வதாங்க?'' - அவ ளுக்கு 'ர' ஒரு சமயம் வரும். நிறைய நேரம் வராது.

''யாரோ?''

''யாது யாதோ?''

பாட்டிக்குப் பதில் சொல்ல முடியாத எரிச்சல். அடுப்பை அணைத்து விட்டு, ''யாரோ வராங்கன்னா கேட்டுட்டு வாயை மூடிக்கிட்டு இரேன். சும்மா நைநைனு கொடைஞ்சுக்கிட்டு...''

அவ்வளவுதான். குழந்தையின் கண்

களில் மழை பொத்துக் கொண்டு ஊற்றியது.

''ம்மா'' - என்று இரு பிஞ்சுக் கைகளாலும் கண்களைக் கசக்கியபடியே படுக்கையறைக்கு ஓடினாள்.

''ம்மா, நிஷாம்மா பாத்தி என்னைத் தித்துதா.'' 'ட'வும் கொஞ்சம் தகராறுதான்.

''பாத்தி தித்துதா!''

அழுகையின் சத்தம் அதிகமாகியது. மெத்தையில் குப்புறப் படுத்திருந்த நிஷா புரண்டு திரும்பிக் குழந்தையை நோக்கிக் கைகளை நீட்டினாள். அம்மாவுக்குள் அடைக்கலமானாள் பிள்ளை.



''அம்மா, யாது வீத்துக்கு வதானு கேத்தா பாத்தி என்னைத் திட்டுறா. யாது அது? நீ ஏன் இப்பவே 'ஜோஜோ' தூங்குற?'' கேள்விகள், கேள்விகள், கேள்விகள். ஒரு கேள்வி உதிர்ந்ததுமே பெரிய நீளமான பதிலால் அதை அடைத்து விடுவதுதான் அடுத்த கேள்விக்குறியைத் தடுக்கும் வழி. எப்போதும் அதையே பின்பற்றும் நிஷாவுக்கு இன்று வாயடைத்திருந்தது. ஏனோ சிறு பெருமூச்சுக்கள்.

குழந்தையை இறுக அணைத்தாள்; அந்த இதமே பதிலென்றாகுமென.

''ஏன் நீ சொல்லல?'' குட்டி உதடுகள் கழுத்தில் பதிந்து குறுகுறுப்பூட்டின.

''எனக்குத் தெரியல பட்டுக்குட்டி.''

''எதுக்கு உனக்கே தெரியல?''

''ஏனோ தெரியலை?''

''ஏன் ஏனோ?''

கலங்கி விடத் தயாரான கண்களோடு...

''பார், அம்மா உனக்கு நேத்து ஒரு புது சாக்ரா சோளி வாங்கி இருக்கேன். கண்ணாடியெல்லாம் கலர் கலரா வச்சு... இன்னிக்குப் போட்டுக்கறியா?''

''ஏன் இன்னிக்கு? இன்னிக்கு தீவாலியா? யாது வதா? அதச் சொல்லு.''

குழந்தை கவனமாக கவனத் திருப்பலைத் திருப்பினாள்.

நிஷாவின் முகம் தவிர்க்கவியலாமல் சோர்வுற்றது.

''Rosy cheeks சொல்லலாமா?'' வேறு வழியில் முயற்சித்தாள்.

'ரோஜாக் கன்னங்கள்' என்று இரு சுட்டு விரல்களால் அவள் கன்னங்களைத் தொட வேண்டும். போனால் போகிறது என இலேசாகப் புன்னகைப்பாள்.

**''நான் எம்.எல்.ஏ. ஆனால், என்ன செய்வேன்னு கட்டுரை எழுதச் சொன்னா, எங்கடா வகுப்பை விட்டுப் போயிட்டே?''**
**''வெளிநடப்பு செஞ்சுட்டேன் டீச்சர்.''**
**- சாயம் ராஜராமன்**

'Dimple Chin' - என்று தாடைக் குழியில் சுண்டுவிரல் படும்போது புன்னகை சிரிப்பாக விரியும்.

'ரொம்ப நீலக் கண்கள்' என அவள் கண்களை முத்தமிட்டால், அம்மாவைக் கட்டிக் கொள்வாள்.

'அம்மா செல்லம், அது நீதான்'- என்று முடிக்கும்போது கலகலப்பைக் கொட்டும் சிரிப்பு.

''ம்ஹ்ஹ்ம்ம், யாது வதா? சொல்லு.''

அழுத்தம் திருத்தமாக அதே கேள்வி.

''தாத்தாவைக் கேளு... போ.''

நிஷா அலுப்போடு சுவர்ப் பக்கமாகத் திரும்பிப் படுத்தாள்.

''தாத்தா'' - இங்கிருந்தே அலறல்.

வராண்டாவில் செய்தித் தாளுக்குள்

## நட்சத்திர சிறுகதை...

தம்மை மறைத்துக் கொண்டிருந்தவர், என்னவோ, ஏதோ என்று எழுந்து ஓடி வந்தார். கட்டிலில் திரும்பிப் படுத்திருக்கும் மகள். தரையில் குட்டி மகாராணி போல் நின்றிருக்கும் பேத்தி. இடுப்பில் இரண்டு கைகளையும் ஊன்றியபடி, நிமிர்ந்த முகத்தோடு ஆணையிடும் குரலில்,

''நான் ஒண்ணு கேத்தா நீ சொல்வியா, மாத்தியா?''

தாத்தா அவள் காலடியில் மண்டியிட்டு, ''கேளுங்கள் மகாராணி'' எனவும் ஒரு பெரிய அலட்சியச் சிரிப்போடு,

''தாத்தா, யாது வதா?''

''யாது வதா?'' - தாத்தாவுக்கு மழலைக் குழறல் புரியவில்லை.

''அய்யோ, உனக்கு ஒண்ணுமே புரியல. நம்ப வீத்துக்கு யாது வதா?''

''ஓ, யாரு வரா?'' தாத்தா குழந்தையைத் தூக்கிக் கொண்டார். அவள் அனிச்சையாக அவர் தோளில் சாய்ந்துகொண்டாள்.




அப்படியே தூங்கிவிட்டால் தேவலை என்றிருந்தது, நிஷாவுக்கு.

''யாது வதா? யாது வதா?'' மந்திரப் பிதற்றல் நிற்கவேயில்லை.

''அன்னிக்கு பார்க் போனப்ப உனக்கு நிறைய சாக்லேட் வாங்கித் தந்தாரே அந்த அங்கிள்.''

''ஓ. அந்த அங்கிளா? ஏன் வதா?''

''ம்ம்... சும்மா!''

''சும்மா?''

''ஆமாண்டா, சும்மா''

''தாத்தா, அம்மா அன்னிக்கு அந்த அங்கிளோடவே பேசினாங்க!''

''அதான் சொன்னியேம்மா அப்பவே. அவங்க ரெண்டு பேரும் ஃப்ரெண்ட்ஸ். நீயும், ஹரியும் போல'' என்றதும் குழந்தை தன் சொப்பு சாமான்களிடம் உட்கார்ந்து கொண்டாள்.

''தாத்தா, நான் உனக்கு என்ன கொளம்பு வக்க?''

''எதன்னாலும் வை தாயி. சந்தோஷமாச் சாப்பிடுவேன்'' - அவள் குட்டி மர அடுப்பில் சின்ன விரல் நுனியளவேயுள்ள சிவப்புப் பானையை ஏற்றினாள்.

**அ**ன்று குழந்தைகளின் கூச்சல் நிறைந்த பூங்காவில் வருணாவை யானைச் சறுக்கலில் ஏற்றிவிட்டு நின்றிருந்தாள் நிஷா. அந்த மஞ்சள் மரங்களின் மெல்லிய காற்று. ஒரு பார்வை தன்னைத் தொடுவதை உணர்ந்து நிமிர்ந்தாள். மிகவும் பரிச்சயமான, ஏன், அந்தரங்கமான அந்தப் பார்வை. அந்தக் கண்கள். சிறிய சோம்பலும், இதமும் கூடிய விழிகள். அவன். ஆம் அவனேதான். கௌதம். அவன் துளியும் தடுமாறாத, தயக்கமற்ற நடையுடன் அவளை நெருங்கினான். மௌனம் ஒரு அழுத்தமான மலர் போல் இருவருக்குமிடையில் விரிந்து கிடந்தது. அவளுடைய நீல நிறச் சேலை காற்றில் படபடத்தது. அவனுக்கு மிகவும் பிரியமான அந்த

# நட்சத்திர சிறுகதை...

மோனக் கண்கள். மிகவும் யோசித்த பிறகே மலரும் இதழ்கள். யோசித்தலின் நிழலே படராத குரலில்,

''நிஷா?'' - என்றான்.

''ம்'' - என்றாள்.

அவன் புன்னகைத்து, ''நல்லாயிருக்கியா?'' என்று விட்டு, பதிலுக்குக் காத்திராமல் ஊஞ்சலில் இருந்த குழந்தையின் அருகில் போய்,

''குட்டி நிஷாவா?'' எனக் கேட்க, அவள் அம்மாவின் பின் ஒளிந்துகொண்டாள். உள்ளே விட்டால் தானாகவே புகுந்து வளைந்து ஏறி இறங்கி வெளியே வரக்



கூடிய விளையாட்டுக் கம்பிக் கட்டத்துக்குள் அவளை இறக்கிவிட்டு அவனோடு நடந்தாள்.

''இவள் அப்பா வரலையா?''

''இல்லை'' - அவள் முகம் உணர்ச்சிகளின் சமன்நிலை குலையாமல் இருந்தது.

''ஏன்? வேலையில் மும்முரமாய் இருக்காரா?''

''இல்லை.''

''பிறகு?''

''அவரே இல்லை.''

''நிஷா, நீ என்ன சொல்ற?''

''ஆமாம்'' - என்றாள்.

''எப்படி?''

''எப்படியோ... அதைப் பத்திப் பேச வேணாமே'' - என்றாள் ஆயாசமாக.

''சரி, நீ இன்னும் அதே நிஷாதான். இரவின் இருண்மையும், பூடகத் தன்மையும், நட்சத்திர ஜொலிப்பும், அதனால் பொன்னிறமும்...'' என்றான் பேச்சை மாற்றும் விதமாக.

'என் பொன்னிற இரவு, என் தங்க நிசி' என்று அவன் முன்னாளில் கொஞ்சியதை நினைத்தாள். சாதி வேறுபாட்டைச் சொல்லி அவள் வீட்டில் அவர்களுடைய திருமணம் மறுக்கப்பட்டபோது,

'என்னால் அம்மா, அப்பாவை விட்டுட்டு உன்னோட வர முடியாது கௌதம். உன்னைப் பிரியவும் மனமில்லை' என்று

> ''அந்த நடிகையின் நாய் ரொம்ப புத்திசாலி. வேற்று மனிதர்களைப் பார்த்தா குரைக்கும்...''
>
> ''இது எல்லா நாய்களும்தானே செய்யறது?''
>
> ''அவங்க தன் கணவரை விவாகரத்து செஞ்ச அடுத்த நிமிஷம் அவரைப் பார்த்துக் குரைக்குதே.''
>
> - சாயம் ராஜாராமன்

மடியில் விழுந்து கதறியவளைத் தேற்றி, அவளுக்கு எது நிம்மதி தருமோ அதைச் செய்யச் சொல்லி, அவள் முடிவு எதுவானாலும் உடன்படுவதாகச் சொன்னான்.

அழுது, முத்தங்களைப் பரிமாறித் திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே அவள் போனாள் இதே பூங்காவில்தான். பெற்றோர் தேர்ந்தெடுத்தவனை மணந்தாள்.

''கௌதம், நீங்ககூட அப்படியேதானிருக்கிங்க. முகம்தான் இலேசாகச் சோர்ந்திருக்கு.''

''நீ அன்று பார்த்தது போலவேதான் இன்னிக்கும்.''

''உங்க மனைவி?''

''இல்லை'' என்றான் புன்னகைத்தபடி.

''என்னது, அவங்களுமா?'' அதிர்ந்தாள்.

# சிறுநீர் கசிவு பிரச்னையா?

இன்னும் ஏன் தயக்கம்?

"நீங்கள் அணுக வேண்டிய சிறப்பு மருத்துவர்

## UROGYNECOLOGIST

இருமினாலோ,
தும்மினாலோ

சிறுநீர் கசிவு
ஏற்படுகிறதா?

## "சிலிங் சிகிச்சை"

"வலியில்லாமல், இரத்தக் கசிவில்லாமல் ஒரே நாளில் வீடு திரும்புங்கள்". அமெரிக்காவில் UROGYNECOLOGY FELLOWSHIP பட்டம் முடித்த மருத்துவர்கள் உள்ள இந்தியாவில் முதல் ISO 9001:2000 Certified சிறப்பு மையம்

**இப்போது கோவையில்**

**பாலா மெடிக்கல் சென்டர் அண்டு ஆஸ்பிட்டல்,**

**901, திருச்சி ரோடு,**
**இராமநாதபுரம்,**
**கோயம்புத்தூர் 641 045.**
**0422-2323456, 2323333**

தங்கள் பிரச்னையை மேற்படி மையத்திலுள்ள முறையான பயிற்சி பெற்ற நபரிடம் தொலைபேசியில் தெரிவித்து கவுன்சலிங் அல்லது ஆலோசனை பெறலாம்.
ஆலோசனைக்குக் கட்டணம் எதுவும் கிடையாது!




## GUNA ASSOCIATES IN UROGYNECOLOGY & RESEARCH FOR INCONTINENCE (GAURI)

1, Crescent Park Street, T.Nagar, Chennai - 600 017. Ph : 24341055, 24322591
E-mail : gunasek@gmail.com Web : www.urogynecology.in

# நட்சத்திர சிறுகதை...

''இல்லை, மனைவியே இல்லை.''

அவள் முகம் இன்னும் அதிர்ந்து உறைந்தது.

''என்ன கௌதம் சொல்றீங்க?''

''ஆமா...நிஷா. என் பொன்னிற இரவை, என் தங்க நிசியை மறந்து வேற யாரையும் கல்யாணம் செய்ய எனக்குப் பிடிக்கல. தோணல.''

''உனக்கென்ன பைத்தியமா பிடிச் சிருக்கு?''

அவள் முகமும், கண்ணும் கலங்கிச் சிவந்தன.

அவன் பதில் சொல்லவில்லை. குழந் தைக்கு நீளநீளமான சாக்லேட்களை வாங்கி நீட்டினான்.



வருணா அம்மாவைப் பார்த்தாள். அவ ளுடைய அனுமதித் தலையசைப்புக்குப் பின் சாக்லேட்களை வாங்கிக் கொண்டு,

''தேங்க்ஸ்'' என்று விட்டு கன்னத்தைத் தொட வந்த அவன் கையைத் தள்ளி அம் மாவை ஒட்டியபடி, ''அம்மா போலாம்மா'' என்று அனத்தத் தொடங்கினாள்.

''இவள் அப்படித்தான்... அவ்வளவு சீக்கிரம் யாரிடமும் ஒட்டிக் கொள்ள மாட் டாள்.''

''உன்னைப் போலவேவா? அதனா லென்ன, குழந்தைதானே?'' - அவன் புன்ன கைத்துக் கையசைத்துத் திரும்பி நடந்தான்.

பரபரத்துப் படுக்கையிலிருந்து எழுந் தாள் நிஷா. இவ்வளவு வருடத்துக்குப் பின் னும் நினைவிருக்கிறது. கௌதமுக்குப் பச்சை நிறம் பிடிக்கும். இளம் தளிர்ப் பச்சை. அவள் கை அனிச்சையாக அந்த நிறச் சேலையைத் தேடியது அலமாரி அடுக் கில். முகம் கழுவிப் பொட்டிட்டு சேலை மாற்றி, வழக்கம் போல் கணவனின் புகைப் படத்தின் முன் கை குவித்து வணங்கினாள்.

கார் சத்தம் கேட்டது. கௌதம் வந்தா யிற்று; கையில் ஒரு மிகப் பெரிய பாலிதீன் கவரோடு. வருணா அடுப்படியில் பாட் டியை ஒண்டி நின்றாள். பாட்டியும் தன் னைத் தனியே விட்டுவிட்டு, வாயெல்லாம் பல்லாக,

''வாங்க, வாங்க...'' என்று வெளியே ஓடியது அவளுக்குப் பிடிக்கவில்லை.

கௌதம் சோபாவில் உட்கார்ந்தவாறே, ''வருணா எங்கே?'' என்றான்.

''பாப்பா'' நிஷா அடுப்படியை நோக்கிக் குரல் கொடுத்தாள்.

> ''யானைகள் எல்லாம் ஊருக் குள்ள வருதே... ஏன்?''
> ''காட்டு நடப்பு' சரியில்லையாம்!''
> - அம்பை தேவா

''பேசிக்கிட்டிருங்க. காஃபி கொண்டு வரேன்.''

அம்மா அவசரமாக உள்ளே போனாள்.

அவன் 'வா' என்று புன்னகையோடு அழைத்தபோதும், குழந்தை அம்மாவின் சேலையால் பாதி முகத்தை மறைத்து நின்றாள்.

''வருணாக் குட்டிக்காக, சாக்லேட்ஸ், கேம்ஸ், பொம்மை'' என்று அவன் பரிசுப் பொட்டலத்தைக் காட்டிச் சொன்னான். வருணா அம்மாவின் முகத்தைப் பார்த்தாள்.

''வாங்கிக்க'' - நிஷா சொன்னதும் வாங் கிக்கொண்டு, ''தாங்க்ஸ் அங்கிள், நீங்க எப்ப போவீங்க?'' என்றாள் வருணா.

எல்லோரும் சிரித்து விட்டார்கள்.

''தப்பா நினைச்சுக்காதீங்க. வாழ்க்கை யில் ஏதேதோ நடந்து போச்சு. உங்க

## நட்சத்திர சிறுகதை...

மனசை நாங்க புரிஞ்சுக்கல. மன்னிக்கணும்.''

''பெரியவங்க நீங்க இப்படி பேசக்கூடாது.''

''இல்லை, ஆனா நீங்க இன்னும் நிஷாவையே நினைச்சுக்கிட்டு இப்படி...''

அப்பாவின் குரல் தழுதழுத்தது. ''உங்க விருப்பப்படி இனியாவது நடக்கட்டும். உங்களைப் பெத்தவங்க...''

''அம்மாவும், அப்பாவும், எப்ப நிஷா கழுத்தில் தாலி கட்டப் போறேங்கிறாங்க. அடுத்த வாரம் இங்க வராங்க.''

''அப்படியா, கடவுள் சித்தம். அப்பனே, முருகா'' - அப்பா மேல் நோக்கிக் கரம் குவித்தார்.



''இதுதான் என் அப்பா... சாமிகிட்டயிருந்து வந்துருவாரு. என்னைக்காவது...''

''எங்க காலமும் இனி எவ்வளவு நாளோ? இவளையும், குழந்தையையும் உங்ககிட்ட ஒப்படைச்சிட்டு நிம்மதியா...''

- கண்கள் கலங்கின அப்பாவுக்கு.

உள்ளிருந்து ஓடி வந்தாள் வருணா. அவள் கையில் மேஜையில் வைக்கக்கூடிய லேமினேட் செய்த புகைப்படம்.

''அங்கிள், அங்கிள், இதான் என் அப்பா. எவ்ளோ அழகா சிரிக்குதாங்க. சாமி கிட்ட போனாங்க. சீக்கிரம் வந்துருவாங்க. பாத்தி சொன்னாங்க.'' கனவில் உருளும் கண்களோடு சொன்னாள் குழந்தை.

செருமிக் கொண்ட அப்பா, ''வருணாக் குட்டி, பாட்டி தெரியாம சொல்லிட்டாங்க. அப்பா எப்ப வருவாரோ. வரவே மாட்டாருன்னு நினைக்கிறேன்... இந்த அங்கிள் நம்மகூடவே இருக்கட்டுமா?''

அம்மா குறுக்கிட்டு, ''உனக்கு அப்பாவாக'' - என்றாள்.

''அப்பாவா?'' வருணா சிரித்தாள். கௌதமின் தோளில் ஒரு விரலால் அழுத்தி,

''இது அங்கிள்'' புகைப்படத்தை அணைத்து, ''இதுதான் என் அப்பா... சாமி கிட்டயிருந்து வந்துருவாரு. என்னைக்காவது...'' அவள் குரலில் உறுதியும், அடமும்.

'அங்கிள் எப்படி அப்பாவாவாரு? ஏன் அப்பாவாகணும்' என்பதாய் அவளுக்குச் சிரிப்புப் பொத்துக்கொண்டு வந்தது போலும். கலகலத்துச் சிரித்தாள்.

நிஷாவின் முகம் பனிச் சிற்பம் போலிருந்தது. அனைவரும் அதிர்ந்து உட்கார்ந்திருந்தார்கள்.

கௌதம் முகத்தில் அதே புன்னகையோடு எழுந்தான்.

''இல்ல, அவ குழந்தை நீங்க...''

அப்பாவுக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை.

''கொஞ்ச நாளாகட்டும். அவளுக்குப் புரியட்டும். நான் காத்திருக்கிறேன்.''

கௌதம் வாசலை நோக்கி நடந்தான்.

தடைகள் உடைந்தவளாய் ஓடினாள் நிஷா.

நிலைப்படியில் இருவரும் நின்றார்கள்.

''ஸாரி'' - அவள் குரல் கீறி உடைந்தது.

''அப்படிச் சொல்லாதே'' - அவன் அவளுடைய உள்ளங்கையை ஒருமுறை அழுத்தினான். வெளியேறி நடந்தான். இந்த நொடியிலேயே ஓடி அவன் தோளில் சாய்ந்து கொள்ள வேண்டும் போலிருந்தது நிஷாவுக்கு.

பாதத்தைப் பிடித்துக்கொண்ட படிகளும், உள்ளிருந்து கேட்ட, ''அம்மா, நிஷாம்மா'' எனும் மழலைக் குரலும் அவளை நிலைதாண்டாமல் நிற்க வைத்தன, திடமாக, வேறு வழியேயற்று! ○

இல்லங்களில்
வளம் பெருக
உள்ளங்களில்
நலம் பெருக
CUB யின்
தீபாவளி
நல்வாழ்த்துக்கள்.

உள்ளங்கள் கூடிக் கொண்டாடும் தீபாவளித் திருநாள்.
நலமெல்லாம் பெருகும் இன்பப் பெருநாள்.
இந்நன்னாளில் உங்களுக்கு தீபாவளி நல்வாழ்த்துக்களை
மகிழ்வுடன் தெரிவிக்கிறது CUB.

DISCLAIMER : "City Union Bank Limited proposes, subject to receipt of requisite approvals, market conditions and other considerations, to issue equity shares on a rights basis to its existing equity shareholders and has filed a draft letter of offer ("DLOF") with the Securities and Exchange Board of India ("SEBI"). The DLOF is available on the website of the SEBI at www.sebi.gov.in as well as on the websites of the lead manager at www.pdicap.com. Investors should note that an investment in equity shares involves a high degree of risk and for details relating to the same, please refer to the section titled 'Risk Factors' of the DLOF."

105 ஆண்டுகளுக்கு மேல்

நல்லுறவு, நம்பிக்கை, நாணயம், உங்கள் சிட்டி யூனியன் பாங்க்



CUB
TRUST AND EXCELLENCE
SINCE 1904

**சிட்டி யூனியன் பாங்க் லிட்.**

பதிவு அலுவலகம் : கும்பகோணம் - 612 001, தமிழ்நாடு
போன் : 0435-2402322 ஃபேக்ஸ் : 0435-2431746 E-mail : rpm@cityunionbank.com
Website : http://www.cityunionbank.com SMS : "CUBDEPOSIT" to 9900654321

எங்களது அனைத்து வங்கிக் கிளைகளும் ஒருங்கிணைக்கப்பட்டுள்ளன.

# மழலை

திருப்பூர் கிருஷ்ணன்

வெண்ணில வொன்றிந்த மண்ணில் இறங்கித்தான்
தத்தி நடக்கிறது - அது
வீணையைப் போல் மெல்லக் கொஞ்சம் சிணுங்கினால்
நெஞ்சம் துடிக்கிறது - அதன்
வண்ண மலர்மேனி பிஞ்சுக் கையும் காலும்
கண்ணை நிறைக்கிறது - சொல்லும்
வார்த்தைகள் ஒவ்வொன்றும் புல்லாங் குழல்போலக்
காதைக் கரைக்கிறது! - அதன்

மாதுளைப் பூப்போலச் செக்கச் சிவந்துள்ள
பஞ்சு உதடுகளும் - உள்ளே
மல்லிகை மொட்டுப்போல் வெள்ளை வெளேரென்ற
ஓரிரு பல்லழகும் - என்
ஆதரவைக் கேட்டுக் கையிரண்டை நீட்டித்
தாவி வரும் எழிலும் - உடன்
'அப்பா!'என் றென்னைத்தான் அள்ளி அணைத்திட
ஆணையிடும் ஒலியும் - அட!

தேரில் வருகின்ற தெய்வங்கள் பேசாது,
பேசிடும் தெய்வமிது - குட்டி
தேவதை போல் ஒரு பூவினைப்போல் தோளில்
தூங்கிடும் தென்றலிது - நான்
வாரி அணைக்கையில் நேரும் பெருமிதம்
சொல்லில் வருவதில்லை - என்
வண்ண மலர்க்கொத்தின் அண்மை தரும் இன்பம்
யாரும் தருவதில்லை!

# பிரைடல் செவன்

நிச்சயதார்த்தம் | மெஹந்தி
ஊஞ்சல் | முகூர்த்தம் | நலுங்கு
ரிசப்ஷன் | கிருஹப்பிரவேசம்

## "என் நிச்சயதார்த்தம்... புது வாழ்வின் ஆரம்பம்"

ஆரெம்கேவி பிரைடல் செவன், கைதேர்ந்த நெசவாளர்களால் நெசவு மற்றும் எம்பிராய்டரி செய்யப்பட்ட, ப்ரத்யேகப் பட்டுப்புடவைகள். கல்யாணத்தின் ஏழு விசேஷங்களுக்கும் ஒரு உன்னதமான கலெக்ஷன்.

85

RmKV
Wedding Silks

**இறையும் இசையும்**

# ஞான ஈசுவரனின் நாத உபாஸனை

**ஜான்னவி**



**ஞா**னத்தின் உச்சகட்டம் மௌனம். ஆனந்தத்தின் உச்சநிலையோ நாட்டியம். ஞானமும் ஆனந்தமும் பிரிக்கமுடியாத நிலைகள். ஒன்று இருந்தால் மற்றது தானாக வந்துவிடும். அதேபோல்தான் மௌனமும் நாட்டியமும்.

"இந்த இரண்டும் நானே" என்று பறைசாற்றும் வகையில் பரமேஸ்வரன் தன்னைக் காட்டிக் கொள்கிறார் - மோனத்தில் மௌனமாக அமர்ந்த நிலையில் தக்ஷிணாமூர்த்தியாகவும் நடமாடித் திரியும் பிறை சூடிய ஆடல் அரசனாகவும் அவரே திகழ்கிறார்.

மௌனம் காக்கும்போது பேசக் கூடாது; ஆனால், பகவான் நாமாவைப் பாடலாம். அதுவும் ஓர் எல்லை வரை சென்று, மௌனத்தில்தான் முடிந்தாக வேண்டும். குரலை எழுப்பாமல் இசையை அனுபவிக்க வேண்டும் என்றால் ஒரே வழி மாசில் வீணையை வாசித்து மகிழ்வது தான். இதற்காக ஏற்பட்டதுதான் வீணாதார தக்ஷிணாமூர்த்தி கோலம். இது ஓர் அபூர்வ திருக்கோலம். சென்னை அருங்காட்சியகத்திலும், தஞ்சை மாவட்டம் வடவரங்கம் கோயிலிலும் இந்த உருவம் காணக் கிடைக்கிறது. லால்குடி சப்தரிஷீஸ்வரர் கோயிலின் தெற்கு கோஷ்ட தக்ஷிணா மூர்த்தி வீணையும் கையுமாக, நின்ற கோலத்தில் இருக்கிறார்.

வீணை வாசிப்பது சிவ குடும்பத்துக்கே உரிய சொத்து. வீணா புஸ்தக தாரிணியான சரஸ்வதி, சிவனின் தங்கை. அவளை "சிவானுஜாயை நம:" என்று அர்ச்சித்து வருகிறோம். பரமேஸ்வர பக்தனான ராவணன், பரமேசுவர அம்சமாகவே விளங்கிய ஆஞ்சநேயன், இன்னும் ஈசுவரனுடன் சம்பந்தப்பட்ட பலர் வீணை வாசித்தார்கள். அப்பர் சுவாமிகள், 'மாசில் வீணை போன்றது ஈசன் எந்தை இணையடி நிழல்' என்றே கொண்டாடினார்!

**சி**வனுக்கும் விஷ்ணுவுக்கும் ஒரே

இருப்பிடம் - சிவ ஸ்வரூபமான தக்ஷிணா மூர்த்தி கல் ஆலமர நிழலில் அமர்பவர். கண்ணனோ ஆலிலை மேல் துயிலும் பாலகன். அந்தக் கண்ணன் குழலை அழகாய் கையில் எடுத்ததுபோல் இந்த தக்ஷிணாமூர்த்தி வீணையை எடுத்துக் கொண்டார் போலும்.

**பே**னத்யுதி என்ற அபூர்வ ராகத்தில் முத்துஸ்வாமி தீக்ஷிதர் 'ஸ்ரீ தக்ஷிணா மூர்த்திம்' என்று ஒரு கீர்த்தனையை இயற்றியுள்ளார். அதிலே 'வல்லகி நாதானுபவ மோதம்' என்ற பிரயோகம் அமைந்திருக்கிறது. வல்லகி என்றால் வீணை. வல்லகியின் நாதத்தை அனுபவித்தபடியிருக்கிறாராம் தக்ஷிணா மூர்த்தி. ஆனால், யார் வீணை வாசிக்க இவர் மோதத்தில் (அனுபவத்தில்) இருக்கிறார் என்கிற கேள்வி வரும் அல்லவா? இதற்கும் தீக்ஷிதரே அனுபல்லவியில் விடை தருகிறார்:

வேதாந்த வேத்யம் (வேதத்தை நன்கு அறிந்தவர்); ந்யக்ரோத வ்ருக்ஷ மூலவாஸிநம் (ஆல மரத்தின் கீழ் வாசம் செய்பவர்)... இவர் நாதானுபவ மோதத்தில் இருக்கிறார் என்பதாக. மேலும் சொல்கிறார்: அம்ருத பேனத்யுதி மந்தஸ்மித முகாம்புஜம் (பொங்கும் அம்ருதக் கடல்போல புன்சிரிப்பு மிளிரும் தாமரை முகம் படைத்தவர்).

- இவ்வளவு தீர்மானமாக தீக்ஷிதர் சொல்கிறபோது, 'வல்லகி' இசையை தக்ஷிணாமூர்த்திதான் அனுபவித்தவாறு மோனத்தில் இருக்கிறார் என்பது தெளிவாகிறது.

ஒருவேளை தக்ஷிணாமூர்த்தியின் திருவடிகள் அருகே அமர்ந்துள்ள ரிஷிகள் இந்த வீணை இசையை அனுபவிக்கிறார்களோ என்கிற கேள்வி எழலாம். ஆனால், அவர்களைப் பற்றியெல்லாம் கூற தீக்ஷிதர் தமது கீர்த்தனையின் சரணத்தைத் தான் தேர்ந்தெடுக்கிறார். அனுபல்லவி விவரணை தக்ஷிணாமூர்த்தி பற்றி மட்டுமே!

**தி**யாகராஜரோ, தமது (நாததனும் அனிசம்) கீர்த்தனையில் சிவனின் சரீரமே இடையறாது வளர்ந்து பெருகும் நாதத்தால் ஆனது (நாததனும்) என்றும் நாத உபாஸனையினால்தான் அவர் ஒளி பெறுகிறார் என்றும் (நாதோபாஸனா க்ருதி) கருத்துகளை முன் வைக்கிறார். உபாஸனை என்பது அவரவரும் தனியே செய்ய வேண்டிய காரியம் என்பதைக் காட்டத்தான் பரமேசுவரன் தக்ஷிணாமூர்த்தி கோலம் ஏற்று, அந்த உபாஸனையில் நாதத்தை இணைக்க கையில் வீணையையும் எடுத்துக் கொண்டான் போலும்!

முனி சீடர்களுக்கு ஞான - யோக குருவாக விளங்கும் தக்ஷிணா மூர்த்தி, வீணையைத் தாங்கி நின்றதன் மூலம் சங்கீதமே ஒரு யோகம் என்பதையும் பறைசாற்றுகிறார். நம்மை வியப்பிலும் சிந்தனையிலும் ஆழ்த்துபவை இந்த இறை வடிவங்கள் மட்டுமல்ல; இறைவனின் திருவிளையாடலும் அவற்றை எழிலுருவாக விவரிக்கும் மஹான்களின் வாக்குகளும் ஓவியர்கள், சிற்பிகளின் கைவண்ணமும் கூடத்தான்!

**முனி சீடர்களுக்கு ஞான-யோக குருவாக விளங்கும் தக்ஷிணாமூர்த்தி. வீணையைத் தாங்கி நின்றதன் மூலம் சங்கீதமே ஒரு யோகம் என்பதையும் பறைசாற்றுகிறார்**

**ஓவியம் : ப.இராமசந்திரன்**

அன்பார்ந்த வாடிக்கையாளர்களுக்கு

# சம்பாவின்

## இனிய தீபாவளி நல்வாழ்த்துக்கள்!



★ பட்டுப்புடைவைகளில் கோர்த்து வாங்கிய புடைவை, தாழம்பூ கோபுரம், பிள்ளையார் முக்கு ஆகிய பார்டர்கள் மிகப்பிரபலம். இன்றைய காலகட்டத்தில் அந்த வகைப்புடைவைகளை நாங்கள் காட்டன் வகைகளில் அறிமுகப் படுத்தியிருக்கிறோம். வேல்தாரி, புட்டா போன்ற டிசைன்களும் உண்டு. தூரத்திலிருந்து பார்த்தால் பட்டு போலவே இருக்கும். இவற்றுக்கு கஞ்சி போட வேண்டாம். காட்டன் அல்லாத புடைவைகளைத் துவைப்பதுபோலவே இவற்றையும் துவைக்கலாம். டு பை டு எனும் ஸ்பெஷல் நூலில் செய்யப்படுவதால் இது சாத்தியமாகிறது. (விலை : 1500 ரூபாயில் இருந்து 2500 ரூபாய் அளவில் வாங்க முடியும்.)

★ காட்டனும் சில்க்கும் கலந்த புடைவைகளின்

பிரேமா, இந்திரா, ராதா - மூன்று சகோதரிகளால் 1989ல் துவக்கப்பட்டது 'சம்பா', காட்டன் புடவைகள் இவர்களது ஸ்பெஷாலிட்டி.



# "கூல் காட்டன்ஸ் எங்க ஸ்பெஷாலிட்டி!"



"பட்டின் விலை மிக அதிகம். ஒரு வயதுக்கு மேல் நைலான் புடைவைகள் அணிந்தால் கௌரவம் கிடைப்பதில்லை. எனவே கல்லூரிப் பேராசிரியைகள், அலுவலகம் செல்லும் பெண்கள் ஆகியோர் பருத்திப்புடைவைகளை வாங்கவே விரும்புகிறார்கள். எங்கள் இலக்கு நடுத்தர வர்க்கப் பெண்கள்தான். கொடுக்கும் காசுக்கேற்ற பொருள் கிடைக்க வேண்டும் என்ற அவர்களின் விருப்பத்தை நாங்கள் பூர்த்தி செய்கிறோம்.

இங்கு விற்கும் புடைவைகளை வெறும் 'காட்டன் புடைவைகள்' என்று பொதுப்படையாகப் பேசிவிட முடியாது. இவற்றில் பல வித்தியாசமான, புதுமையான அம்சங்களும் உள்ளன.





விலை 2000லிருந்து 3000 ரூபாய் வரை. ஜரிகை கிடையாது. தனித்துவம் கொண்ட இப்புடைவைகள், பெண் அதிகாரிகளுக்கு ஒரு 'க்ளாஸிக் லுக்' அளிக்கும்.

★ 'ரிச் லுக் வேண்டாம். தினமும் கல்லூரிக்கோ, அலுவலகத்துக்கோ கட்டிச் செல்லும்படியான புடைவைகளை நாங்களே டிசைன் செய்கிறோம். தலைப்பு எளிமையாக இருந்தாலும் பளிச்சென்று இருக்கும்.



★ சென்னையில் நாங்கள்தான் அறிமுகப்படுத்தினோம் என்று கூறும்படியான புடைவையும் உண்டு. வாழைநார் (பூக்தொடுக்கும் அதே வாழைநார் தான்), கத்தாழை மற்றும் காட்டன் ஆகியவற்றின் கலவையில் உருவாகும் இந்தப் புடைவையில் 'வெஜிடபிள் சாயங்கள்' பயன்படுத்தப்படுகின்றன. மற்ற புடைவைகள் போலவே இவற்றையும் துவைக்கலாம்.

★ ராஜஸ்தானிலிருந்து ஒரிஜினலாக வரவழைக்கும் கோட்டாப் புடைவைகள் மிகவும் எடை குறைந்தவை. கொஞ்சம் மெல்லிசாக இருப்பதால் குறைந்த வயது கொண்டவர்களுக்கு அதிகம் பொருந்தும்.

★ காட்டன்களில் பலவித டிசைன்களை நாங்களே எம்பிராய்டரி செய்து தருகிறோம். 3000 ரூபாயிலிருந்து இவற்றை வாங்கிக் கொள்ளலாம்.

★ ரெடிமேடாக கை மற்றும் முதுகுப் பகுதிகளில் எம்பிராய்டரி செய்த ரவிக்கைத் துணிகளையும் விற்பனை செய்கிறோம். இதன் விலை 350 ரூபாய். ரெடிமேட் பிளவுஸ்க்கான ஆர்டர் எடுப்பதில்லை.

★ இந்த தீபாவளிக்கு எங்கள் அறிமுகம் embroidery and patch work செய்த Churidar Sets மற்றும் embroidery செய்த tussar / Mudhka புடைவைகளும், பட்டில் brocade weave புடைவைகளும் உள்ளன.



## பாரதியின் கணிப்பு



**ம**காகவி பாரதியார் தான் சிறிது காலம் நடத்தி வந்த 'இந்தியா' என்ற இதழுக்கு நான்கு விதமான மாதச் சந்தா நிர்ணயம் செய்திருந்தார்.

சாதாரண மக்களுக்கு - ரூ.3; மாதச் சம்பளம் ரூ.200 வாங்குவோருக்கு- ரூ. 15; ஜமீன்தார்கள் மற்றும் பணக்காரர்களுக்கு - ரூ.30; மற்ற அரசாங்க ஊழியர்களுக்கு - ரூ.50 .

- தேனி முருகேசன்

# வாசகர் ஏரியா

## கவிஞரின் சமயோசிதம்!

**ஆ**யிரம் பாடல்களுக்கு மேல் திரைப்படங்களுக்குப் பாடல்கள் எழுதிய கவியரசு கண்ணதாசன், மதுரை கல்லூரியில் உரையாற்றும்போது மேடைக்கு ஒரு சீட்டு வந்தது. "கண்ணதாசனே! மாமரத்தில் மாடப்புறா கூடு கட்டும் என்று பாடியிருக்கிறீர்கள். மாமரத்தில் மாடப்புறா கூடு கட்டாது என்று உமக்குத் தெரியாதா?''

கண்ணதாசன் பதில் சொல்கின்ற பொழுது, ''இந்த மாடப்புறா மாமரத்தில் தவறாகக் கட்டிய கூடு அது'' என்று குறிப்பிட்டார்.

- ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்



# அது தப்பான கூடு!

## காலை வாரிய டெக்னிக்!

**தெ**ருவில் ஒரு கார் விபத்து; பெருங்கூட்டம்! செய்தி சேகரிக்கும் நிருபர் ஒருவர் கூட்டத்துக்குள் புகுந்து என்ன நடந்தது என்பதை அறிய முற்பட்டார். கும்பல் வழிவிடுவதாக இல்லை. உடனே ஒரு தந்திரம் செய்தார் நிருபர்!

'வழி விடுங்கள்... வழி விடுங்கள்... அடிபட்டவருடைய பிள்ளை நான்!' என்று குய்யோ முறையோவெனக் கதறி அழுதார். கூட்டம் வழி விட்டது.

காரில் அடிபட்டுக் கிடந்தது ஒரு கழுதை!

- 'இனாம்' ச.ஆ.கேசவன்



## பிரமோஷன் சான்ஸ்!

**அ**மெரிக்க ஜனாதிபதியாக இருந்த கூலிட்ஜ் மீண்டும் ஜனாதிபதித் தேர்தலில் போட்டியிடப் போவதில்லை என்று அறிவித்திருந்தார்.

ஒரு பத்திரிகை நிருபர் அவரிடம் ''நீங்கள் ஏன் மறுபடி ஜனாதிபதியாக விரும்பவில்லை?'' என்று கேட்டார்.

''அதிலே பிரமோஷன் பெற சான்ஸே இல்லை!'' என்றாராம் கூலிட்ஜ்.

- இரா.பாலகிருஷ்ணன், வரக்கால்பட்டு

"அப்பா மாதிரி ஒரு கெட்டிக்காரரை, கைராசிக்காரரைப் பார்த்ததில்லை. அவருக்குப் போய் இப்படி ஒரு பிள்ளையாய்ப் பிறந்தியே!" மைதிலி திட்ட, தலை குனிந்து நின்றான் சுரேஷ்.

"உங்கப்பா ஜவுளிக்கடை வைச்சார், இன்னைக்கு இந்த மாவட்டத்திலேயே பெரிய கடை நம்மளோடதுதான்! தேடி வந்து வாங்குவாங்க. சின்ன பெட்டிக் கடை ஆரம்பிச்சு, ஸ்டேஷனரியா, சூப்பர் மார்க்கெட்டா மாத்தி, இப்ப டிபார்ட்மென்டல் ஸ்டோர், ஹோட்டல், ஜவுளி, நகை என்று எந்தத் தொழிலையும் விடலை! பிஸினஸில் உங்கப்பா கொடிகட்டிப் பறக்கிறார்! காரணம் - புத்திசாலித்தனம்... உழைப்பு" - கணவனின் பெருமையைப் புராணமாய்ப் படித்தாள் மைதிலி.

"நான் என்னம்மா செய்வேன்! படிப்பு வரலை! பசங்களோட சேர்ந்து வியாபாரம் செஞ்சேன். ஏமாத்திட்டானுக!

## மாதவி

தனியா தொழில் செய்யப் பணம் கேட்டேன்... அப்பா தரலை! கேஸ் போட்டு, என் பங்கைப் பிரிச்சுக்கிட்டேன். தனியாப் போனேன். கல்யாணம் - அது ஒரு விபத்து! அப்புறம் பல பிஸினஸ். எல்லாம் தோத்து மனமுடைஞ்சு வேறு வழியில்லாம ரொம்ப நாள் கழிச்சு வந்திருக்கேன். இப்போ போய் குத்திக்காட்டிக்கிட்டு..."

"இத்தனை வருடம் பணம் கையிலிருந்தவரை எங்க ஞாபகம் வரலை. இப்ப தோல்வி, நஷ்டம், பயம், துக்கம், சறுக்கல்னா... அப்பா, அம்மா, தங்கச்சி முகமும், ஆறுதலும் தேடி வர்றே இல்லே?

உங்கப்பா ரெண்டு ஹார்ட் அட்டாக் வந்து பிழைச்சாரே... அப்ப வந்தியா? இல்லை நான் மஞ்சள்காமாலையில் கிடந்த



போது வந்து பாத்தியா?'' மௌனத்தோடு உப்பு நீரும் கலந்து கண்கள் வழியாக வழிந்தது அவனுக்கு.

''எல்லாத்தையும் தோத்துட்டு வந்திருக்கேன்! கடன், வட்டி, இதெல்லாம் மூச்சு விட முடியலை! பணம்தான் தேவை! ஆறுதலோ, ஆசியோ தேவை இல்லை! எப்படியாவது அப்பாவிடம் சொல்லி ஏற்பாடு பண்ணு! அவரைப் பாக்கவே ரொம்ப சங்கடமா இருக்கு.''

பேசிக்கொண்டிருக்கும்போதே படகுக் காரில் வந்திறங்கிய அப்பா தனசீலன், கையில் ஒரு ப்ரீஃப்கேஸ், ஸ்டைலாய் வாக்கிங் ஸ்டிக், கூலிங் க்ளாஸுடன் மகனைப் பார்த்து ஆச்சரியப்படாமல், ''வா சுரேஷ்! நல்லாயிருக்கியா? எப்ப வந்தே? எல்லாரும் சௌக்யமா? குழந்தைகள், மருமகள்...'' என்றவர் நேரே மாடிக்குச் சென்றார்.

''சரிடா... அப்பாவிடம் கொஞ்சம் இறங்கிப் பேசு. பிடிவாதம், கோபம் எல்லாம் தூக்கி எறிஞ்சிடு!'' என்றாள் மைதிலி.

''வா சாப்பிடலாம்'' என்றார்.

''என்ன பேசாமல் வேடிக்கை பாக்கறே! டைனிங் டேபிளில் என்ன சிந்தனை! உனக்குப் பிடிச்ச பால் பாயசம், முந்திரி பக்கோடா, கேசரி... சாப்பிடு!'' என்று பரிவாய்ப் பரிமாறினார்.

சுரேஷ் அழ ஆரம்பித்தான்.

''நான் உங்களைத் திட்டி, சண்டை போட்டு, கோர்ட்டுக்கு இழுத்து... மானத்தை வாங்கிட்டேன். ஒண்ணுமே நடக்காதது போல், இப்பதான் புள்ளையைப் பெத்த மாதிரி பரிஞ்சு பரிஞ்சு பாசமா சாப்பாடு போடறீங்களேப்பா...'' நா தழுதழுத்தது.

''மை குட்னஸ்! பல் தேய்க்கறச்சே பாட்டு கேட்கறது, சாப்பிடறச்சே பிரச்னையைப் பேசறது... இதெல்லாம் பைத்தியக்காரத்தனம். தோல்வியில் சரித்திடும் மனிதனை! எதை எப்ப செஞ்சாலும் அதில்தான் கவனம் வேணும்! சாப்பிட்டுக்கிட்டே தண்ணீர் குடிக்க முடியுமா? கண்ணைத் திறந்துக்கிட்டே தூங்குவியா? முதல்ல சாப்பிடு...'' என்றவர் தன் சாப்பாட்டு வேலையில் இறங்கினார்.

ஐந்தே நிமிடம். சாப்பிட்டுக் கை கழுவியவர், ''என்ன இன்னும் சாம்பார் சாதத்திலே இருக்கே! சரி... சாப்பிட்டுட்டு மேலே வா'' என்று மாடிக்குச் சென்றார்.




சுரேஷுக்குப் பிரமிப்பாய் இருந்தது! எப்படி இந்த மனிதரால் இப்படி நடந்து கொள்ள முடிகிறது! குழந்தை மாதிரி... வேகம்! அலட்டல் இல்லாத சுபாவம்! கனிவு, கண்களில் நேசம்! சாப்பிட்டு ஒரு வழியாய்க் கை கழுவினான் சுரேஷ்.

''அம்மா நீயும் மாடிக்கு வா! என்னால்

அப்பாவிடம் சரியாக்கூட பேச முடியல'' என்றான்.

**த**னசீலன் டீ.வி. பார்த்துக் கொண்டிருந்தார். மெல்ல தாயாருடன் அமைதியாய் அப்பாவின் முன் நின்று... கரகரத்த குரலில், ''அப்பா'' என்றான்.

''வா... உட்கார்! டீ.வி. பார்! டோனி என்னமா சிக்ஸர் அடிக்கிறான்! யுவராஜூம் பின்றான். மேட்ச் பிரமாதம்டா!'' கைதட்டி குழந்தை போல் ரசித்தார்.

''அப்பா உங்களை மாதிரி சிரிச்சுக்கிட்டு என்னால் மேட்ச் பாக்க முடியல. உங்களோடு கொஞ்சம் பேசணும்'' என்றான்.

''ஓ! தாராளமா... ஒன் அட் எ டைம்!'' டீ.வியை அணைத்தார். ''அப்பா சொத்தைப் பிரிச்சுக்கிட்டுப் போய் பிஸினஸ் செஞ்சேன்! ஏமாற்றம், தோல்வி, நஷ்டம், கடன், வட்டி, வறுமை, வேற வார்த்தையே வாழ்வில் தென்படலை! நீங்க பெரிய அதிர்ஷ்டக்காரர்... கைராசிக்காரர்... வெற்றிச் செல்வர்னு பேர் எடுத்தவர். உங்களை மாதிரி என்னால் வர முடியலை''- அழுதான்.

''அழாதே! முதலில் என்னை கம்பேர் பண்ணினது தப்பு! என்னை கைராசிக்காரன்... அதிர்ஷ்டக்காரன்... வெற்றிச் செல்வர்னு யாரு சொன்னா?''

''ஊரே சொல்லுது. பிஸினஸில் உங்க போட்டியாளர்களே புகழறாங்க!''

''உம்... உனக்கு என்னோட வெற்றி முகம்தான் தெரியும்! ஏழாவதில் மூணு வருஷம் ஃபெயில்! காலேஜ் படிக்கறச்சே ரெண்டு காதல் தோல்வி. அப்பாவோட பிஸினஸ் கோவிந்தா. கடன், திவால், வீடு அடமானம் எல்லாம் சந்திச்சவன்டா உங்கப்பன். நடுத்தெருவில் வெறும் கையா நின்னேன். தோற்கவே என்னிடம் ஒன்றுமில்லாமல் கொஞ்சங் கொஞ்சமா ஜெயிச்சவன். தோல்வி என்பது பூச்சாண்டி அல்ல - கைட்! ஒவ்வொரு பிஸினஸும் நாலு வருடம் நடத்தி 'பிக்கப்' ஆகி, தொழில் ரகசியம் தெரியறபோது அந்தத் தொழிலை மூடிடறே! மனசு உடைஞ்சு போயிடறே... பலாப் பழம் முள்ளில்லா சுளையாவே காய்க்கணும்னா எப்படி?''

''அறிவுரை, ஆசி, இது மட்டும் போதாது... இப்ப எனக்கு ஏழரைலட்சம் கடன்! மூணு லட்சம் வட்டி! அப்புறம் புதுசா பிஸினஸுக்கு கொஞ்சம் மூலதனம் வேணும். நீங்க கடனா தந்தா போதும். வட்டியில்லாம தாணும்! பிழைச்சுக்குவேன். ஒரு மகனா கேட்கலை. ஒரு மனுஷனா கேட்கறேன். கொஞ்சம் இரக்கப்படுங்க'' காலில் விழுந்தான்.




''எழுந்திருடா... தோல்வியைவிட, தோல்வியைக் கண்ட பயம் கொடிது! நீ கேட்டதை உனக்கு 'கிஃப்டா' தரேன்டா.''

''ரொம்ப தேங்க்ஸ் அப்பா! மறக்க மாட்டேன் இந்த உதவியை!''

''என்னங்க... சுரேஷும் நானும் ரொம்ப பயந்தோம். அரை நொடியில் எல்லாத்தையும் மறந்துட்டீங்களே...'' மகன் சென்றதும் மைதிலி கேட்க...

''மறக்கலை... மாத்திட்டேன்! பாசம், பணம் இரண்டும் கொடுத்து அவனை வாங்கிட்டேன். இனிமே அவனும் ஜெயிச்சுடுவான்'' என்றபடி டீ.வியை ஆன் செய்து மீண்டும் மேட்சைப் பார்க்க ஆரம்பித்து விட்டார். ●

யா! யாருக்கு எதையெதைத் தர வேண்டுமோ அதனைப் பார்த்துப் பார்த்துத் தாய் போல் அருள்கிறாள் ஸ்ரீ லலிதாம்பிகை. இவ்வுலக வாழ்வின் அனுபவங்களைத் தருகிறாள். ஸாலோக்ய, ஸாரூப்ய, ஸாமீப்யம் என்ற நிலைகளைத் தந்து அவளை நாம் படிப்படியாக முழுமையாக உணரச் செய்கிறாள். இறுதியில் ஸாயுஜ்யம் என்கிற கைவல்ய பதத்தையும் தருகிறாள். அவளுடைய அருளால் பரமாத்ம ஸ்வரூபத்தை நம்முள்ளே முழுக்க முழுக்க உணர்ந்து அனுபவிக்கிற நிலைதான் ஸாயுஜ்யம். இதனை நாம் மூன்றாம் பாகத்தின் இறுதியிலே பார்த்தோம். **கைவல்யபததாயினி** என்ற திருநாமத்தை அனுபவித்தோம்.

# ஹிமவான் குலத்துக் கொடிமரம்

ஆசார்யர் ஆதி சங்கரர் ஓரிடத்திலே பாடுவார் - அம்பாள் எவ்வாறு சாயுஜ்யத்தையும் கொடுத்து, தன்னை மாதிரியே இருக்கக்கூடிய தன்மையையும் கொடுக்கிறாள் என்பதைப் பாடுவார். ''பவானித்வம் என்பதை, நான் கேட்டவுடனேயே கொடுத்தவள்தானே நீ! 'அப்படியா? பவானித்துவம் வேண்டுமா? எடுத்துக்கொள்!' என்று வழங்கியவள்தானே நீ!'' என்பார்.

ஆசார்யர் இதை நினைத்துப் பார்த்துச் சொல்கிறார் - ''சிவகாமேச்வரருக்கே சந்தேகம் வந்துவிட்டது'' என்று சொல்கிறார்! ஸதா சர்வகாலமும் சக்தியுடன் ஐக்கியப்பட்டிருக்கும் சிவனுக்கே, 'அம்பாள் யார்? அம்பாள் பக்தர்கள் யார்?' என்று வித்தியாசம் தெரியவில்லையாம்! அந்த அளவுக்குத் தன்னோடு ஐக்கியம் எய்தும் சாயுஜ்யத்தை அவள் தன் பக்தர்களுக்கு அருள்கிறாளாம்!

சிவகாமேச்வரர் குழப்பம் அடையக் கூடியவர் அல்ல! ஆனால் அப்படி உரிமையோடு சொல்கிறார் ஆசார்யர். அம்பாள் தன் கைவல்யபதத்தை எவ்வளவு தூரம் பக்தர்களுக்குத் தர வல்லவள் என்பதை உணர்த்துவதற்காகச் சொல்கிறார்.

இனி, மேற்கொண்டு வரும் திருநாமங்களைப் பார்ப்போம்:

**த்ரிபுரா** - மும்மூன்றாக இருக்கக்கூடியவள். ஏற்கெனவே இதைப் பார்த்திருக்கிறோம். முப்புரையாக இருப்பவள் அம்பிகை. எதெல்லாம் மும்மூன்றாக இருக்கிறதோ அதிலெல்லாம் இருக்கக்கூடியவள்.

**த்ரிஜகத்வந்த்யா** - மூன்று லோகங்களும் வந்தனை செய்யக்கூடியவளாக இருப்பவள்.

**த்ரிமூர்த்தி** - மும்மூர்த்திகளாகவும் அவள்தான் இருக்கிறாள் - பிரம்மாவாகவும் விஷ்ணுவாகவும் ருத்ரனாகவும் இருக்கக்கூடியவள்.

**த்ரிதசேச்வரி** - இதற்கு என்ன அர்த்தம்? முன்பு அனுபவித்தோமே, ஜாக்ரதா ரூபமாகவும், ஸ்வப்னா ரூபமாகவும், ஸு* (ஸ்+உ) சுத்தி ரூபமாகவும் இருக்கக்கூடியவள் என்று, அதே பொருளை இந்தத் திருநாமத்துக்கும் கொள்ளலாம். இது ஓர் அர்த்தம்.

மற்றொன்று - விச்வதேவர்கள்

1

சுதா சேஷய்யன்

என்று பதின்மூன்று பேர்கள் உண்டு. த்ரி + தசேஸ்வரி என்று பிரித்தால் மூன்று, அதன் பிறகு பத்து, அதாவது பதின்மூன்று என்று அர்த்தம் வரும். இந்தப் பதின்மூன்று விச்வ தேவர்களும் விச்வத்தை - இந்த அண்டத்தைக் காப்பாற்றக்கூடியவர்கள். அவர்களின் ரூபத்தில் அம்பிகையே இருக்கிறாள் என்றும் பொருள் சொல்லலாம்.

த்ரி தசம் என்று சொன்னால் 3 X 10 = 30 என்றும் ஒரு பொருள் கொள்ளலாம். முப்பத்து முக்கோடி தேவர்களாகவும் இருக்கக்கூடியவள் அம்பாள் என்றும் அர்த்தம் கொள்ள முடியும்.

**த்ரியக்ஷரி** - மூன்று அக்ஷரங்களின் ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள். ஓம்கார பிரணவமே 'அ', 'உ', 'ம்' என்ற மூன்று அக்ஷரங்களின் வடிவம் தான். அந்த மூன்று அக்ஷரங்களாக அகார, உகார, மகாரங்களாக இருப்பவள்.

**திவ்யகந்தாட்யா** - திவ்யமான வாசனை (கந்தம்) நிரம்பியவள்.

**சிந்தூர திலகாஞ்சிதா** - சிந்தூர திலகத்தை அணிந்திருப்பவள்.

**உமா** - உமா என்கிற திருநாமமும் மூன்று அக்ஷரங்களைக் கொண்டவள் என்பதற்குப் பொருத்தமாக அமைகிறது. 'அ', 'உ', 'ம்' - இந்த மூன்றையும் அதே வரிசையில் சேர்த்தால், படைப்பு, ஸ்திதி, லயம் ஆகியவற்றுக்குப் பிரதிநிதிகளான அவை 'ஓம்' என்கிற பிரணவ மந்திரத்தைக் கொடுக்கும். இந்த வரிசையையே கொஞ்சம் மாற்றி, உ, ம், அ என்றால் அதுவே உமா என்கிற திருநாமத்தைத் தரும். இதற்கு என்ன அர்த்தம்...? ஸ்திதி என்கிற படைப்புக்கு உரிய அக்ஷரமான 'உ', முன்பாக - முந்திக்கொண்டு அம்பாள் திருநாமத்தில் வருகிறது. அவள் படைத்தலைக் காட்டிலும் காத்தலில் அதிகமான அக்கறை செலுத்தக்கூடியவள் என்பதை இது குறிக்கிறது. உமாவாக இருந்து இந்த ஜகத்தைக் காப்பாற்றுகிறாள் அவள்.

**சைலேந்திர தனயா** - ஹிமவான் மகள்! இந்தத் திருநாமம்தான் ஆசார்யருக்கு ரொம்பப் பிடித்த திருநாமம். சைலேந்திரனாக - மலைகளுக்கெல்லாம் அரசனாக இருக்கக்கூடிய ஹிமவானின் மகள். சைல - இந்திர- தனயா - சைலேந்திர தனயா.



பாரதி பாடுவார், இந்த பாரத தேசமே அம்பாள் என்பதாகப் பாடுவார்! காரணம் என்னவென்றால், இந்த பாரத தேசம் அவளுடைய பீடம். மாத்ருகா பீடங்கள் தான் இங்கே பரவியிருக்கின்றன. ''இந்த தேசம் யார்?'' என்று விவரிக்கையில், ''அவள் என்று பிறந்தவள் என்றுணராத இயல்பினள்'' என்பார் பாரதியார். அது மட்டுமல்ல, என் தாயான இந்த தேசம் இன்

**முப்புரையாக இருப்பவள் அம்பிகை. எதெல்லாம் மும்மூன்றாக இருக்கிறதோ அதிலெல்லாம் இருக்கக்கூடியவள்.**

அனைவருக்கும் தீபாவளி நல்வாழ்த்துக்கள்



ஏற்றிய தீபம்
ஒளிர்ந்திட வேண்டும்
என்றும் மகிழ்ச்சி
நிலைத்திட வேண்டும்












TMB
வீட்டுக் கடன்

கடனுதவி
ரூ. 2.5 கோடி
வரை

புதிய வீடு வாங்க / கட்டிட மற்றும்
பழைய வீடு வாங்க / புதுப்பிக்க /
விரிவாக்கம் செய்ய கடன் உதவி

- தவணைக்காலம் 20 வருடம் வரை
- சுலப விதிமுறைகள்
- விரைவான பரிசீலனை
- மறைமுக கட்டணம் இல்லை
- குறைந்த பட்ச விளிம்பு தொகை



தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் லிட்.

Customer Oriented & Committed to Excellence

பதிவு அலுவலகம் : 57, வி.இ. ரோடு, தூத்துக்குடி-628 002 இணையதளம் www.tmb.in

மேலும் விபரங்களுக்கு இலவச தொலைபேசி எண்: 180 0425 0426

னொருத்தரின் மகள்: ''வெண்மை வளர் இமயாசலம் தந்த விரன்மகளாம் எங்கள் தாய்!''

***''தொன்று நிகழ்ந்ததனைத்தும் உணர்ந்திடும் சூழ்கலை வாணர்களும் - இவள் என்று பிறந்தவள் என்றுணராத இயல்பினளாம் எங்கள் தாய்.''***

'நேற்று, முன்தினம் அல்ல, பத்து ஆண்டுகளுக்கு முன்பு அல்ல, தொன்று தொட்டு உலகில் என்ன நிகழ்ந்து வருகிறது என்பதைக் கண்டறிந்து கூற வல்ல கலைவாணர்களால்கூட என் தாய் என்று பிறந்தாள் என்பதைக் கண்டறிய முடியாது!'' என்கிறார் பாரதி. ஆதி அந்தமற்ற பராசக்தியின் வடிவமாகவே தாய் நாட்டைப் பார்க்கிறவர், அவளை இமயாசலம் பெற்ற விரன்மகள் என்றும் சொல்லி அந்த பராசக்தி ஸ்வரூபத்தை உறுதிப்படுத்துகிறார்.



**ஸ்வர்ண தாம்பாளத்தில் அவள் தோன்றிய காரணத்தினால் ஸ்வர்ணகர்பா என்கிற திருநாமமும் உண்டு**

அது மட்டுமல்ல... **'அவள் திண்மை மறையினும் தான் மறையாள் நித்தம் சீருறுவாள் எங்கள் தாய்'** என்று அவளது நித்ய யௌவனத்தையும் அழிவில்லாத் தன்மையையும்கூடச் சொல்கிறார். ''இமயமே இல்லாமல் போனால்கூட எங்கள் பாரத தேசம் இருக்கும்'' என்கிறார். எவ்வளவு உண்மை!

இன்றைக்கு ஹிமவான் என்று ஒருவன் இல்லை. இமயமலையின் அருகே போய் நின்றுகொண்டு ''ஹிமவானே!'' என்று கூப்பிட்டால் அந்த மலை 'என்ன?' என்று கேட்காது! ஆனால், அந்த ஹிமவான் மகளாக அவதரித்த பரமேசுவரியின் ஸ்வரூபத்தை எல்லா இடங்களிலேயும் பார்க்க முடிகிறது அல்லவா? அம்பாள் ஹிமவான் குலத்தில் தோன்றியவள் என்பதற்கு அவ்வளவு முக்கியத்துவம் உண்டு என்பதால் தான் **ஷைலேந்திர தனயா** என்கிற திருநாமம்.

**கௌரி** - இலேசான மஞ்சள் நிறம் பொருந்தியவள் கௌரி. தாக்ஷாயணியாக இருந்தவள் தனது அந்த ஸ்வரூபம் வேண்டாம் என்பதற்காகத்தான் நெருப்பிலே போய் விழுந்தாள். அப்படி நெருப்பில் விழுந்தவுடனே, வெப்பம் பட்டு, அவள் மேனி வெளிறிப் போயிற்று. அதற்கு அடுத்ததாக வந்த அவதாரம் உமாதேவி அவதாரம்.

**கந்தர்வ ஸேவிதா** - கந்தர்வர்களால் ஸேவிக்கப்படக்கூடியவள்.

**விச்வகர்பா** - விச்வத்தையே தனக்குள்ளே தாங்குபவள். இந்த அண்டத்தையே தாங்குகிறாள்.

**ஸ்வர்ணகர்பா** - லலிதாம்பிகை திருமேனி எப்படி திருவவதாரம் புரிந்ததென்றால், யாக குண்டத்திலிருந்து பெரிய தங்கத் தட்டில் அவள் தோன்றினாள். இவ்வாறு அக்னி குண்டத்திலிருந்து ஸ்வர்ண தாம்பாளத்தில் அவள் தோன்றிய காரணத்தினாலும் **ஸ்வர்ணகர்பா** என்கிற திருநாமம்.

(வளரும்)

---

ஸ்ரீ லலிதா தொடரின் அத்யாயங்கள், டாக்டர் சுதா சேஷய்யன் ஆற்றிய ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் விளக்க உபன்யாஸங்களின் தொகுப்பு. சென்னை, வீனஸ் காலனியில் நடைபெற்ற இந்தத் தொடர் உபன்யாஸங்களின் ஒலிப்பதிவுகளை அளித்து உதவிய **ஆஸ்திக சமாஜம்** அமைப்புக்கு நன்றி.

தித்திக்கும் தீபாவளி ஆரம்பிச்சிட்டாங்கப்பா. அலை மோதறாங்கய்யா, கடை கடையாய். இது பெரிய ஊர்களில்... கிராமத்து வெள்ளந்தி மக்கள், எப்படி தீபாவளியை எதிர்கொள்ளப் போகிறார்கள்? கோவைக்குப் பக்கத்தில் உள்வாங்கிய கிராமம் 'கோணவாய்க்காம்பாளைய'த்துக்குப் போனோம்.

**76** வயதான நல்லப்பன் காளியம்மாள் தம்பதிகள், ''அப்பல்லாம் தீபாவளிக்குத்தான் புட்டு (இட்லி), நெல்லுச்சோறு (அரிசிச் சோறு), கச்சாயம் (இனிப்பு), தினை அரிசி முறுக்கு, ஆறு விரக்கடை (6 இஞ்ச்) அளவுக்கு தோசை கட்டாயம் இருக்கும். அதுவும் நம்ம பொஞ்சாதி தீபாவளி அன்னைக்கு தலைக்கு விளக்கெண்ணை தேக்க, அரப்பு வெச்சுக் குளிச்சிட்டு முடியை வெய்யில்ல காய வைக்கும் பாருங்க. அட அட

# தினை அரிசி முறுக்கு;



● நல்லப்பன் - காளியம்மாள் தம்பதி

அதுதான் தீபாவளி...'' என்றதும் அவர் பொஞ்சாதி முகத்துல அப்படி ஒரு வெட்கம்.

## நீ பயப்படாத செல்லம்... எனக்கு சைவ தீபாவளிதான்!



● மாலினி

மாலினி:

''எங்களுக்கு எந்த வருஷமும் தீபாவளி வருதேன்னு கவலையே இல்லை. வருஷா வருஷம் தீபாவளிக்குன்னே அக்கம் பக்கம் பொண்டுகள் எல்லாம் சீட்டுச் சேர்ப்



''நமக்கு தீபாவளி கீபாவளில்லாம் ஒண்ணும் தனியா கிடையாதுங்க. தினம் பொழப்பு ஓடிக்கிட்டே இருக்கும். ஏதோ தீபாவளின்னா ஒரு நா லீவு கிடைக்கும். அம்புட்டுதான். எங்க ஊர வுட்டுப்புட்டு (விழுப்புரம்) இதோ இங்க டெலிபோன் லைனுக்குக் குழி தோண்டற வேலை செய்ய வந்தோம். ரோட்டோரம் இருக்குற இந்தக் கூடாரம்தான் எங்க வூடு'' என விடாமல் தூத்தித் தூத்திக் கடிக்கும் கொசுக்களை அடித்தபடியே பேசுகிறார் முத்துவள்ளி.

## "தெருவிளக்கே மத்தாப்பு; பொரைதாங்க பட்சணம்!"

போம். ஜம்முன்னு போய் கோயமுத்தூர் ரூபில துணிமணி வாங்கிக்குவோம். பலகாரத்துக்குன்னு தனி ஃபண்ட். நாங்க பொண்ணுங்க எல்லாம் ஒரே மாதிரி பாவாடை, தாவணி வாங்கறதுன்னு முடிவு பண்ணிட்டோம். சொந்தக்காரங்க வீட்டுக்குப் போகப் போறோம். அங்க எல்லாரும் சேர்ந்து வீட்டுல புடிச்ச படத்தைப் பார்க்கப் போறோம். மறக்காம மருதாணி அரைச்சுப் பூசிக்குவோம். அதைவிட முக்கியம் உயிர்பலி வாங்காத சைவ தீபாவளியைக் கொண்டாடுவோம். அப்புறம் என்னங்க சிரமம்!'' என்றார் கூலாக.



* மகேஸ்வரி ரங்கநாதன் தம்பதி

# தீக்கான தோசை!

**மகேஸ்வரி - ரங்கநாதன் தம்பதி:**

''எங்கங்க மழை மாரின்னு வர வர சரி கிடையாது. வெவசாயத்தை நம்பித்தான் நம்ம பொழப்பு. மாட்டுக்குக்கூட தீவனம் வெலை கொடுத்து வாங்க வேண்டி இருக்கும். இந்த வருஷம் விக்கிற வெலைவாசியைப் பார்த்தா பயமா இருக்கு. பசங்களுக்கு மட்டுமாவது சுமாராத் துணி எடுத்துக் கொடுத்துடணும்'' என்றார்கள்.

**(கூட இருந்த புகைப்படத்துக்கு மறுத்த சாந்தி - திருமூர்த்தி தம்பதி):**

''எப்படா தீபாவளி வரும்ன்னு காத்துக்கிட்டு இருக்கோம். நான் தான் ஊட்டுக்கு மூத்த மகன். அக்கா, தங்கைகளுக்கு, அம்மாவுக்குத் துணிகள் எடுக்கணும். எங்களுக்கு இந்த ஊர்ல முன்னூறு ஊட்டுச் சொந்தமுங்கோ. தீபாவளி அன்னைக்கு எல்லோரையும் பார்ப்போம். பெரியவங்ககிட்ட ஆசீர்வாதம் வாங்குவோம்.''

தொகுப்பு: **ஆர்.பாலா**
படங்கள்: **டி.சாந்தி**

**"தீபாவளி அன்னிக்கு டீ.வில புரோகிராம் பார்ப்பீங்களா?"**

''இன்னாது, டீவீயா... அதெல்லாம் நமக்கு இல்லீங்க... டீ கடை, பன் இம்புட்டுத்தான். பொழுதுபோகலைன்னா ரோட்டுல பராக்கு பாக்கறது அம்புட்டுதான். எங்கள மாதிரி ஏழை பாழைங்களுக்கெல்லாம் என்னிக்காச்சும் ஒரு நா விடிவுகாலம் பொறக்கும்'' என்கிறார்

அவரது கணவர் மாடசாமி, ''எங்களுக்குன்னு ஒரு லைட், ஃபேன், காஸ் ஸ்டவ், ரேஷன் கார்ட்ன்னு கிடைச்சுட்டா கூட போதும். ஏதோ ரோட்ல போறவங்க வர்றவங்க நாலு பட்டாச எடுத்துப் பசங்க கைல போட்டுப் போனா அத நம்ம பசங்க வெடிப்பாய்ங்க.. எங்கப்பன், அம்மா காலந்தொட்டே நாங்க



தீபாவளியே கொண்டாடியதில்ல... பாப்போம்... ஏதாவது ஒரு தீபாவளிக்கு நமக்கும் வாழ்வு விடியாதான்னு'' என ஏக்கத்தோடு பேசுகிறார்.

செய்தி, சித்திரம்: **நளினி சம்பத்குமார்**

# தனலட்சுமி சீனிவாசன்
## கல்வி நிறுவனங்கள்

பெரம்பலூர் Ph : 04328-220555
சென்னை Ph : 044-27442844

20000 மாணவர்கள் எங்கள் கல்விக்கூடங்களில் பயில்கிறார்கள் விடுதிகளில் 2250 அறைகளில் 8000 மாணவர்கள் தங்கியிருக்கிறார்கள்



இயற்கை எழில் கொஞ்சும் பசுமை வளாகம் 350 ஏக்கரில் படர்ந்திருக்கிறது.

1200 ஆசிரியர்கள் மற்றும் 30 லட்சம் சதுர அடியில் கட்டிய கட்டிடங்கள்



2.5 இலட்சத்துக்கும் மேற்பட்ட நூல்களும், பத்திரிகைகளும் இணையதளமும் அடங்கிய நூலகம்



8 எம்.பி. வினாடி (1:1) சக்தியுள்ள இணையதளம் சார்ந்த 3150 கம்ப்யூட்டர்கள், Wi-Fi இணையம் பரந்த வளாகம்



### தனலட்சுமி சீனிவாசன் பொறியியல் கல்லூரி

An ISO 9001 : 2000 Certified Institution
பெரம்பலூர். PH : 04328 - 220333 / 220444

**U.G. PROGRAMMES**

- B.E., Electronics and Communication Engg.
- B.E., ComPuter Science and Engineering
- B.Tech., Information Technology
- B.E., Electrical & Electronics Engineering

(NBA Accredited)

### சீனிவாசன் பொறியியல் கல்லூரி

பெரம்பலூர். PH : 04328 - 220555 / 220950

**U.G. PROGRAMMES**

- B.E., Aeronautical Engineering
- B.E., Electronics & Communication Engineering
- B.E., Computer Science and Engineering

### தனலட்சுமி சீனிவாசன் பொறியியல் மற்றும் தொழில்நுட்பக் கல்லூரி

East Coast Road, Chennai - 603 104
Ph : 044 - 2744 2988, 2744 3844

**U.G. PROGRAMMES**

- B.E., Aeronautical Engineering
- B.E., Electronics and Communication Engineering
- B.E., Electrical & Electronics Engineering
- B.E., Computer Scie

- B.E., Bio - Medical Engineering
- B.E., Mechanical Engineering
- B.E., Civil Engineering

## P.G. PROGRAMMES

- Master of Business Administration (MBA)
- Master of Computer Applications (MCA)
- M.E., Computer Science & Engineering
- M.E., Communication Systems

## தனலட்சுமி சீனிவாசன் மகளிர் கலை & அறிவியல் கல்லூரி

### U.G. PROGRAMMES

- B.A., English Literature
- B.B.A
- B.C.A
- B.Com.,
- B.Litt., Tamil
- B.Sc., Mathematics
- B.Sc., Physics
- B.Sc., Chemistry
- B.Sc., Microbiology
- B.Sc., Bio Chemistry
- B.Sc., Bio Technology
- B.Sc., Computer Science
- B.Sc., Information Technology

### P.G. PROGRAMMES

- M.B.A (AICTE Approved)
- M.C.A (AICTE Approved)
- M.Sc., Computer Science
- M.Sc., Information Technology
- M.Sc., Physics
- M.Sc., Chemistry
- M.Sc., Mathematics
- M.Sc., Bio Chemistry
- M.Sc., Bio Informatics
- M.Sc., Bio Technology
- M.Sc., Micro Biology
- M.A., Tamil
- M.Com
- M.A., English

### RESEARCH PROGRAMMES

- Chemistry
- Microbiology
- Mathematics
- Commerce
- Bio-Technology

- B.E. Mechanical Engineering*
- B.Tech., Information Technology

## P.G. PROGRAMMES

- Master of Business Administration (MBA)
- Master of Computer Applications (MCA)

## சீனிவாசன்

கலை & அறிவியல் கல்லூரி

பெரம்பலூர். PH : 04328 - 220672

### U.G. PROGRAMMES

- B.A., English Literature
- B.Com
- B.B.A
- B.C.A
- B.Sc., Mathematics
- B.Sc. Physics
- B.Sc., Chemistry
- B.Sc., Microbiology
- B.Sc., Bio Technology
- B.Sc. Computer Science
- B.Sc., Information Technology
- B.Sc., Hotel Management & Catering
- B.A., Tamil Literature*

### P.G. PROGRAMMES

- M.B.A (AICTE Approved)
- M.C.A (AICTE Approved)
- M.Sc., Computer Science
- M.Sc., Information Technology
- M.Sc., Physics
- M.Sc., Chemistry
- M.Sc., Organic Chemistry
- M.Sc., Microbiology
- M.Sc., Bio Technology
- M.Sc., Environment Science
- M.S.W., Master of Social Work
- M.Com

- B.Tech., Information Technology
- B.E., Mechanical Engineering

## P.G. PROGRAMMES

- Master of Business Administration (MBA)
- Master of Computer Applications (MCA)

## மனிதவள மேம்பாட்டு மையம்

### 4263 Students placed in MNCs

- Infosys
- Wipro Technologies
- Satyam Computers
- L & T Communication / Finance
- Tata Consultancy Services
- Reliance Communication
- HCL Technology
- Igate Global Solutions
- Cognizant Technology Solutions
- Alden Prepress Services Private Ltd
- Convergys
- IBS
- Nel cast
- Ucal Fuel Systems Ltd
- Vitusa Pvt Ltd, Chennai
- Femtosoft Technologies (p) Ltd
- Alphon Info Tech
- EDAC
- Gauranga Infotech
- ICICI Prudential
- Shriram Values & Services
- TEMNOS
- Rane power steering
- Slash Support
- Ford/Hyundai
- Sure soft systems (p) ltd
- Southerland Global Serivce

## எமது இதர கல்வி நிறுவனங்கள்

- தனலட்சுமி சீனிவாசன் மகளிர் கலை & அறிவியல் கல்லூரி
- சீனிவாசன் கலை & அறிவியல் கல்லூரி
- தனலட்சுமி சீனிவாசன் பாலிடெக்னிக் கல்லூரி
- சீனிவாசன் பாலிடெக்னிக் கல்லூரி
- தனலட்சுமி சீனிவாசன் மகளிர் கல்வியியல் கல்லூரி
- தனலட்சுமி சீனிவாசன் கல்வியியல் கல்லூரி
- தனலட்சுமி சீனிவாசன் நர்சிங் கல்லூரி
- தனலட்சுமி சீனிவாசன் ஆசிரியர் பயிற்சி நிறுவனம்
- தனலட்சுமி ஆசிரியர் பயிற்சி நிறுவனம்
- சீனிவாசன் ஆசிரியர் பயிற்சி நிறுவனம்
- தனலட்சுமி சீனிவாசன் மெட்ரிக். மேல்நிலைப்பள்ளி திருச்சி.
- தனலட்சுமி சீனிவாசன் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி
- தனலட்சுமி சீனிவாசன் மேல்நிலைப்பள்ளி

*Subject to Approval

## அ. சீனிவாசன்

நிறுவனர் – தலைவர்

# தலைநகரிலிருந்து...

மாணவர்கள் யூனியனில், கம்யூனிஸ்ட்களின் பலம் மிகுந்த டெல்லி பல்கலைக்கழகத்துக்கு திடீரென்று ஒரு விசிட் அடித்தார் ராகுல்காந்தி. அதுவும் படு கேஷுவலாக ராத்திரி எட்டரை மணிக்கு வந்து, ஹாஸ்டல் மெஸ்ஸில் மாணவர்களுடன் கியூவில் நின்று பூரி, சாதம், ஃப்ரூட் ஐஸ்கிரீம் எல்லாம் சாப்பிட்டுவிட்டு, சுமார் நான்கு மணி நேரம் மாணவர்கள் மத்தியில் உரையாடிவிட்டு, நள்ளிரவுக்கு மேல்தான் புறப்பட்டுப் போனார். வழக்கமான வெள்ளை பைஜாமா குர்தாவில் இல்லாமல் நேர்த்தியான பேண்ட், சட்டையில் வந்தார். மாணவர்களுடன் நாட்டின் பொருளாதார வளர்ச்சி, தகவல் அறியும் உரிமைச் சட்டம் தொடங்கி, வாரிசு அரசியல் வரை பல விஷயங்கள் பற்றியும் மனம் திறந்து பேசியதில் மாணவர்கள் அசந்துவிட்டார்கள். ***(படிக்கிற காலத்துல நீங்க காலேஜ் கட் அடிச்சிருக்கீங்களா மிஸ்டர் ராகுல்?)***





# குதுப்மினார் காண்டிராக்ட்!

மழை நீர் காரணமாக, டெல்லியில் உள்ள குதுப்மினாரின் அஸ்திவாரம் பல மிழந்து வருகிறது என்று ஒரு புகார். அந்தப் பகுதியில் பறக்கும் ஆகாய விமானங்கள் ஏற்படுத்தும் அதிர்வினால் குதுப்மினாருக்கு ஆபத்து என்று ஒரு தகவல். 2005 ஆம் ஆண்டுடன் ஒப்பிடும்போது, சுமார் இரண்டு செ.மீ. அளவுக்குச் சாய்ந்துள்ளது என்று ஒரு நியூஸ். கவலைப்பட்ட இந்தியத் தொல்பொருள் ஆய்வியல் துறை அதிகாரிகள், ரூர்க்கியில் உள்ள மத்திய கட்டட ஆராய்ச்சிக் கழகத்தை அணுக, அவர்கள் விஞ்ஞானிகளை அனுப்பி ஆய்வு நடத்தப் போகிறார்கள். ***(குதுப்மினாரை நிமிர்த்திக் கட்டும் காண்டிராக்ட் கிடைக்குமா என்று கேட்கிறார் அரசியல் தொடர்புள்ள ஒரு டெல்லி காண்டிராக்டர்)***

டெல்லியில் பா.ஜ.க. தலைமை அலுவலகம் களை இழந்து கிடக்கிறது. பாராளுமன்றத் தேர்தல் தோல்வியிலிருந்தே இந்த நிலைமைதான் என்றாலும், அண்மையில் அத்வானி அரசியலிலிருந்து ஓய்வு பெறப் போகிறார் என்ற செய்தி வெளியானது முதல் நிலைமை இன்னும் மோசம். ''அலுவலக வளாகத்தில் ஜின்னா என்ற பெயரைச் சொன்னாலே ஒரு மாதிரியாகப் பார்க்கிறார்கள். ஜின்னாவால் அன்று இந்தியாவுக்குத் தலைவலி; இன்று பா.ஜ.க.வுக்குத் தலைவலி'' என்று கமெண்ட் அடித்தார் ஒரு காவித் தொண்டர். ***(ஒரு ஸ்ட்ரிப் ஸாரிடான் அனுப்பி வைக்கலாமா?)***

- பரத்ராம்



# சுவடுகள்!

**ஷூ**க்கள் அணிந்து டக் டக் என்று நடை பயிலும் கால்கள், சாதாரண ரப்பர் மிதியடி அணிந்த ஏழைக் கால்கள், மரு தோன்றி இட்ட விரல்கள் கொண்ட ஓவியக் கால்கள், சேறும் சகதியும் பூசிய உழைப் பாளி கால்கள், சாதாரண சாண்டல் அணிந்த படிப்பாளி கால்கள், கொலுசு அணிந்த இளம்பெண் கால்கள், ரோஜா மொட்டு போன்ற மெத்து மெத்து குழந்தை கால் கள்... ஓடிக்கொண்டும்... ஆடிக் கொண் டும்... நடந்துகொண்டும்... குதித்துக் கொண் டும்... நின்று கொண்டும்...

நாள்தோறும் பார்க்கிறேன் கால்களை. இந்தக் கல் பெஞ்சின் மீது அமர்ந்து கொண்டு கால்களையே பார்த்துக் கொண் டிருக்கும் எனக்குக் கால்கள் கிடையாது. இந்த அனாதை ஆசிரமம்தான் என் வீடு. பிறந்ததில் இருந்து எட்டு ஆண்டுகளாய் என்னைக் காத்துவரும் காப்பகம் இது. என்னைப் போல பல குழந்தைகளுக்கும் இது தாய்மடி. சில குழந்தைகள் என்னைப் போல ஊனமுற்றவர்கள்.

காப்பகத் தந்தை எங்களை அடிக்கடி பூங்காக்களுக்கு அழைத்துச் செல்வார். சில சம யம் ஆலயங்களுக்கும். இப்படி வெளியே போகும்போதெல் லாம் என்னையொத்த குழந்தை களைக் கவனித்து வருகிறேன். எல்லோருக் கும் அப்பா, அம்மா இருக்கிறார்கள். அவர்களுக்கென்று தனி வீடும் இருக் கிறது.

எங்கள் தந்தை சொல்வார், எங்களுக்கு அவர்தான் அப்பா என்று, காப்பகம்தான் வீடு என்று. ஆனாலும் மற்ற குழந்தைகள் போல எனக்கென்று தனியாய் அப்பா, அம்மா, வீடு... என்று இருக்க வேண்டும் என்று மனத்தில் ஆசை பெருக்கெடுக்கிறது.

காப்பகத்தைச் சேர்ந்த மங்கை, பம்பாய் செல்வந்தர் ஒருவரால் தத்தெடுக்கப்பட் டிருக்கிறாள். டெல்லியில் உள்ள ஒருவர் ஆறு மாதங்கள் முன்பு என் இனிய நண்பன் இளங்குமரனைத் தத்தெடுத்து விமானத் தில் அழைத்துக் கொண்டுபோனார்.

புல்லாங்குழல் இசையில் வல்லவ னான இளங்குமரனுக்கு இப்போது ஒரு அப்பா இருக்கிறார். அம்மா உண்டு. இரண்டு சகோதரிகள்கூட இருக்கிறார் களாம். அவன் அம்மா இரவில் அவன் படுக்கையில் அமர்ந்து அவனுக்குக் கதை கள் சொல்வாளாம்.

பலபேர் காப்பகத்துக்கு வருவார்கள். போவார்கள். சிலர் என்னருகே வந்து புன்னகை செய்வார்கள். இவர்கள் என் னைத் தத்தெடுத்துக் கூட்டிச் செல்வார் களா..? எனக்கு ஒரு வீடு கிடைக்குமா..?



என்று மனத்துக்குள் ஏங்கி நிற்பேன். அவர்கள் என்னைக் கடந்து சென்று விடுவார்கள். வேறு யாரையாவது தத்தெடுத்து அழைத்துக்கொண்டு போய் விடுவார்கள்.

காப்பகத் தந்தை அடிக்கடி சொல்வார். கடவுள்தான் உலகைப் படைத்தார். உலகில் உள்ள செடி கொடி மரங்கள், ஊர்வன, பறப்பன, நடப்பன என்று எல்லாவற்றையும் படைத்தார். பலத்த யோசனைக்குப் பின் கடவுள் மனிதனைத் தன்னைப் போல வடிவமைத்தாராம். எங்கள் காப்பகத்தில் எல்லா மதக் கடவுள் படங்களும் உண்டு. நான் அவற்றையெல்லாம் நன்கு உற்றுக் கவனித்திருக்கிறேன். எந்தக் கடவுளுக்கும் என்னைப் போல் ஊனமில்லை. தந்தையிடம் கேட்டேன், ''ஐயா, என்னை ஏன் இறைவன் அவன் வடிவுடன் படைக்கவில்லை?''

தந்தை சற்று தடுமாற்றம் அடைந்தார். எந்தக் கேள்விக்கும் உடனே பதிலளிக்கும் தந்தை அவ்வாறு தயக்கம் காட்டியது எனக்கு ஆச்சர்யத்தைக் கொடுத்தது. ஒருவேளை நான் கேட்டதை அவர் கவனிக்கவில்லையோ? மீண்டும் உரக்கக் கேட்டேன்.

''ஐயா, என்னை ஏன் இறைவன் அவன் வடிவுடன் படைக்கவில்லை?''

''அது... அது... நீ இறைவனை விட அழகுடையவன், மகனே'' என்றார். அந்தப் பதில் எனக்கு எந்தவித மகிழ்ச்சியையும் அளிக்கவில்லை.

**நா**ன் இன்று 18 வயது நிரம்பிய இளைஞன். நான் காப்பகத்தில் இருந்தபோது ஒவ்வொரு நாளும் என்னை யாராவது கூட்டிச் செல்ல மாட்டார்களா என்ற ஏக்கத்திலேயே கழிந்தது. ஓரளவு அனுபவமும் முதிர்ச்சியும் மனம் அடைந்தது. எங்கள் காப்பகத் தந்தை பயிற்றுவித்த தையல், கைவேலை இவைதான் என் குறைகளை எதிர்த்துப் போராடும் வாழ்வின் ஆதாரம் என உணர்ந்தேன். இன்று காப்பகத்தில் இருந்து வெளியேறி தனிமை வாழ்க்கை. அவர்கள் கற்றுத் தந்த கலையும் கல்வியும் என்னைக் காப்பாற்றி வருகின்றன.

ஆனாலும், என் பழைய பழக்கம், கால்களைப் பார்த்துக்கொண்டிருப்பது மட்டும் மாறவேயில்லை. வேலை செய்யாமல் ஓய்ந்திருக்கும் சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் இந்த ஊரில் உள்ள பிரசித்திபெற்ற கோயிலுக்குச் செல்வேன். கோயிலுக்கு வெளி மண்டபத்தில் உள்ள கல் பெஞ்சில் அமர்ந்துகொள்வேன். கோயிலுக்கு வரும் பக்தர்கள் கால்களையே பார்ப்பேன்.

எல்லோரும் தங்கள் கால்களை என்னிடம் காட்டியே தீரவேண்டும். அவர்கள் மிதியடிகளுக்கு டோக்கன் எண் கொடுத்து, பணம் வசூல் செய்வது, சனி, ஞாயிறு தினங்களில் நான் செய்யும் பகுதிநேர வேலை! ●

**வனஜா டேவிட்**

# ஸ்ரீ மாதா டிரஸ்ட்

(ஜாதி, மத, இன சார்பு அற்ற ஏழை புற்று நோயாளிகளுக்கு புகலிடம் தரும் தொண்டு நிறுவனம்)




**ஸ்ரீ மாதா டிரஸ்ட்** என்ற இந்த தொண்டு நிறுவனம், **ஸ்ரீ காஞ்சி பெரியவர்களின்** அருளாசியுடன் திருமலை "பாலாஜி" தெய்வ சன்னிதானத்தில் ஜகத்குருவின் அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமான பக்தர் IOC Krishnamoorthy அவர்களை ஸ்தாபகராக நியமனம் செய்து ஆரம்பிக்கப்பட்டது.

அதிக துன்பத்திற்கு ஆளாகும் "புற்று நோயாளிகளில்" மிகவும் ஏழ்மை நிலையில் இருப்பவர்களைப் பாதுகாக்கும் நோக்கத்தோடு பாடுபட்டு வரும் அடையாறு கேன்சர் இன்ஸ்டிட்யூட், ராஜஸ்தானி அசோசியேஷன் (தமிழ்நாடு)ன் பண உதவியால் இந்த நோயாளிகளுக்கான காப்பகத்தை கட்டி பயன்பாட்டுக்கு கொண்டு வந்தார்கள்.



[illegible]

இந்த ஸ்தாபனம் ஸ்ரீ காஞ்சி பெரியவர்கள் ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள் அவர்களுக்கு விடுத்த வேண்டுகோளுக்கு இணங்கி, "ஸ்ரீ மாதா டிரஸ்ட்" இந்த தர்மசாலாவை பராமரிக்கும் மிகப்பெரிய பொறுப்பை ஆகஸ்டு மாதம் 2000ம் ஆண்டு ஏற்றுக்கொண்டது. அன்றிலிருந்து இன்று வரை எந்தவித தொய்வும் இன்றி, பொதுமக்கள் - நல்ல உள்ளங்கள் அளித்து வரும் நன்கொடைகளின் உதவியின் பலனாக, பல மாகாணங்களிலிருந்து சென்னை அடையாறு புற்று நோய் மருத்துவமனைக்கு புறநோயாளிகளாக வரும் பல்லாயிரக்கணக்கான ஏழைகளுக்கும் உடன் வரும் அவர்களது ஒரு உதவியாளருக்கும் இலவசமாக உணவும், இருக்க இடமும் கொடுத்து காப்பாற்றி வருகிறது இந்த ஸ்ரீ மாதா டிரஸ்ட்.



ஏழை புற்றுநோயாளிகளுக்கு ஜகத்குரு தரிசனம்

## தர்மசாலாவிற்கு விஜயம் செய்த அன்பர்களின் எண்ணங்கள்...!

ஸ்ரீ மாதா டிரஸ்டின் பணி மகிழ்வைத் தருகிறது. வழங்கப்படும் உணவின் தரம் போற்றத்தக்கது.

**S.சந்திரமோகன்**, கோவை

இந்த தர்மசாலாவை வந்து பார்ப்பது ஒரு கோவிலை தரிசனம் செய்வது போலிருக்கிறது. சுயநலமில்லாது செயல்படும் இத்தகைய தொண்டு நிறுவனங்கள் இந்த காலகட்டத்திலும் இருப்பது என்பது மனித நம்பிக்கைக்கும் அப்பாற்பட்டு உள்ளது. இது மற்ற நல்லவர்களையும் மேலும் ஊக்குவித்து செயல்பட வைக்கும். இந்த தொண்டு நிறுவனத்தின் அன்றாட செலவுகளுக்கு தேவையான அளவு பண வசதிக்கான "வட்டிப்பணம்" கிடைக்கும் வகையில் "நிரந்தர காப்பு நிதி" உருவாக வேண்டும் என்று கடவுளை நாம் வேண்டுகிறோம்.

**கிரிஷ் என்.பாண்டே**, வருமான வரித்துறை ஆணையர், சென்னை

உங்கள் தன்னலமற்ற சேவை பல நோயாளிகளை நரக வேதனையிலிருந்து மீட்டு தன்னம்பிக்கை ஊட்டுகின்றது என்பதில் எந்தவித சந்தேகமுமில்லை

**N.நாகதேவன்**, கூடுவாஞ்சேரி

தங்கள் "மாதா டிரஸ்ட்" மூலமாக புற்றுநோய் பாதிக்கப்பட்ட மக்களுக்கு மனிதநேயமும், அன்பும், அரவணைப்பும், ஆதரவும் கொடுப்பதை நேரிடையாக பார்க்கும் பாக்கியம் பெற்றோம். பாவலர் எழுதுமிறு எழுதியது போல் "மனிதரை நேசிப்போம்" "மற்றதை யோசிப்போம்" என்ற வாசகமே நினைவுக்கு வருகிறது. நன்றி!

**N.பழனிசாமி/A.சிவகுமார்/M.சோமசுந்தரம்**

பல்லிபாளையம், ஈரோடு

வேதனைக்கு வடிகாலாய் விளங்கும் இச்சேவை செய்வோர்க்கு எங்களின் நெஞ்சார்ந்த நன்றி.

**S.நூர்ஜஹான்**, சென்னை-14

மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. மேலும் மேலும் உதவி செய்ய வேண்டும் என்று ஆவல் ஏற்படுகிறது. இந்த பணியை செய்யும் அனைவருக்கும் நாம் மிகவும் கடமைப்பட்டுள்ளோம்.

**Dr.கல்யாணி**, கிலர்பூர், நியூயார்க்.


**வி.கிருஷ்ணமூர்த்தி**



நிறுவனர் மற்றும் நிர்வாக அறங்காவலர், கைபேசி: 94440 01065

நிர்வாக அலுவலகம்: ஸ்ரீ மாதா டிரஸ்ட்,
"குரு கிருபா", 3, சாஸ்தா அவென்யூ,
திருமழிசை தெரு, சுந்தரம் காலனி,
கிழக்கு தாம்பரம், சென்னை - 600 059.

ஸ்ரீ மாதா டிரஸ்ட், ராஜஸ்தானி தர்மசாலா,
பழைய கேன்சர் இன்ஸ்டிட்யூட் வளாகம்,
ஈஸ்ட் கனால் பேங்க் ரோடு, காந்தி நகர்,
அடையாறு, சென்னை - 600 020.
Phone: 2442 0727 / 2440 4950

உங்கள் சேவை தொடர, தொடர்புகொள்ளுங்கள் : திரு.காமாட்சிமணி - 93848 33325
அரிமா.என்.சங்கரம் - 93848 20727 திருமதி எஸ்.ரமா - 93810 20727 | திரு.ஏ.அமெரிக்கன் - 9003247857


நோயாளிகள் தங்கும் வசதியான அறை

**ஏழை நோயாளிகள் சென்னையில் இலவச சிகிச்சை பெறும்போது, இருக்க இடமும் உண்ண உணவும் இலவசமாக அளிக்கும் இந்த "தர்மசாலாவை" 10வது ஆண்டில் நடத்திவரும் ஸ்ரீ மாதா டிரஸ்டின் பணிவான வேண்டுகோள்**


சௌகரியம் மிகுந்த உணவு அறை

## சற்று அசந்தால் வாழ்க்கையையே பறித்து விடுவதுபோல் பயம் காட்டுகிற புற்றுநோய்

நோய்க்கு ஏழை பணக்காரன்கிற பாகுபாடு எல்லாம் கிடையாது. ஒருபக்கம் உயிரைத் துளைக்கிற வலி. இன்னொரு பக்கம் வாழ்க்கையே முடிஞ்சுடுமோங்கிற பயம். கையில் காசு இருக்கிறவங்களுக்கு இந்த வேதனை மட்டும்தான். ஆனால் தினசரி கூலி வேலை செஞ்சு, வயிற்றைக் கழுவ வேண்டிய ஏழைகளுக்கு? வேலைக்குப் போறதை எல்லாம் அப்படியே நிறுத்திட்டு நோய்க்கு சிகிச்சை எடுக்க வேண்டிய கட்டாயம். வேலைக்குப் போக முடியாததால் குடும்பச் செலவுகளுக்குத் திணற வேண்டிய அவலம்.
இப்படி மரண வேதனைப்படுகின்ற பரம ஏழைகளின் கஷ்டத்திற்கு இறைவன் அருளால் நல்ல நிலைமையில் இருக்கும் நாம், ஏதாவது நிவாரணம் அளிக்க வேண்டாமா?

யாருடைய உடல் வலியையும் வியாதியின் கொடுமையையும் மற்றவர்கள் பகிர்ந்துகொள்ள முடியாது. இருப்பினும் குறைந்த பட்சம், மனிதநேய அடிப்படையில் அவர்களை[illegible] பேணி[illegible]

பராமரிக்கும் "ஸ்ரீமாதா டிரஸ்ட்" நடத்தி வரும் தர்மசாலாவிற்கு பொருள் உதவி செய்வதன் மூலம் அங்கு தங்கியிருக்கும் ஏழை புற்றுநோயாளிகளுக்கு இலவசமாக உணவு கொடுத்து அவர்களது நோய்க்கு இலவச சிகிச்சை பெற உதவலாமே?


























"புற்றுநோய்" - சரியான நேரத்தில் முறையான சிகிச்சை அளித்தால் நிச்சயம் குணப்படுத்தலாம்

புற்றுநோயால் அவதிப்படும் ஏழைகள் குணமாக உதவி செய்ய, எங்களுக்கு உதவுங்கள்

**நீங்கள் எங்கள் தர்மசாலாவிற்கு விஜயம் செய்து நேரில் பார்த்த பிறகு உங்கள் உதவிகளை இப்படி அளிக்கலாமே ...**














- ஒரு நாளைக்கு ஒரு நோயாளியின் உணவுக்காக ரூ.80 அளிக்கலாம்.
- ஒவ்வொரு மாதமும் ஒரு நோயாளி என்ற அடிப்படையில் ஆண்டு முழுவதற்கும் ரூ.1000 அளிக்கலாம்.
- இந்த தர்மசாலாவில் தங்கும் 250 முதல் 300 வரை உள்ள நோயாளிகளுக்கு ஒரு நாள் சாப்பாடு செலவான ரூ.8000 அளிக்கலாம்.
- ஏழை நோயாளிகளுக்கு மதிய உணவு அல்லது இரவு உணவு அளிக்க ரூ.3000 வழங்கலாம்.
- காலை சிற்றுண்டி மட்டும் கொடுக்க ரூ.2000 வழங்கலாம்.
- காலை முதல் இரவு வரை முழு நாள் உணவை ஆண்டுக்கு ஒரு முறை உங்கள் சார்பாக வழங்க ரூ.75000 கொடுத்து நீங்கள் ஒரு "வள்ளல்" ஆகலாம். நீங்கள் கொடுக்கும் இந்த தொகை டிரஸ்டின் காப்பு நிதியில் சேர்க்கப்பட்டு, அதன் வட்டியிலிருந்து இந்த தர்மம் செய்யப்படும்.
- பெரிய மனதுடன் ரூ.100000 கொடுத்து, நீங்கள் இந்த புனித சேவையின் ஒரு நிரந்தர காப்பாளர் ஆகலாம்.






நீங்கள் அளிக்கும் நன்கொடையை, "SRI MATHA TRUST" என்ற பெயரில் காசோலையாக அனுப்பி வைக்கலாம். நீங்கள் அளிக்கும் நன்கொடைக்கு 80(G) பிரிவின்படி வருமான வரிவிலக்கு உண்டு



''பயங்கர சஸ்பென்ஸ் படமா இருக்குப்பா!''

''அப்படியா?''

''ஆமாம்பா கதையே என்னன்னு தெரியலையே...''

- சாயம் வெ.ராஜாராமன்



''விவாகரத்து செய்யறீங்களா... இப்பத்தானே இந்த மாதிரி கணவர் கிடைக்கக் கொடுத்து வைச்சிருக்கணும்னு சொன்னீங்க?''

''இல்லையா பின்ன... நாம டைவர்ஸ் பண்ணிடலாம்னு சொன்ன உடனேயே ஒப்புக்கிட்டாரே.''

- சாயம் வெ.ராஜாராமன்

# வெறுப்பில்லாம துவைக்கணும்...

''ஏன்டா காலேஜுக்குப் போகலை?''

''இன்னிக்கு லீவு!''

''உனக்கா... காலேஜுக்கா?''

''எதிர்வீட்டுப் பத்மாவுக்கு!''

- எஸ்.பொருநை பாலு



''இந்தப் புடைவை சாயம் போகுமா?''

''மனகல வெறுப்பு, கோபம், ஆத்திரம் இல்லாம உங்க கணவர் துவைச்சா சாயம் போகாது!''

- ஜி.வி.சுபாஷ்



## உடையழகு... நடைபழகு...

'பச்சை குத்திக்கிறது' என்கிற நம் கிராமத்து வழக்கம், மாடர்ன் யுவன் யுவதிகளிடையே, டாட்டூஸ் வரைந்து கொள்ளும் பழக்கமாக மாறி இப்போது டாப் சாய்ஸிலிருக்கிறது. பிரபலமாக இருக்கும் சில டாட்டூ டிஸைன்கள் பற்றி...

**பட்டர்ஃப்ளை டாட்டூஸ்:** பெண்கள் போட்டுக் கொள்ளும் டாட்டூஸில் மிகப் பிரபலம் பட்டாம்பூச்சி டிஸைன். பார்ப்போரைக் கவரும் வண்ணத்துப் பூச்சி பெண்ணின் உடலில் இன்னும் அதிகமான அழகு, பெண்மையை அளிக்கிறது என நம்புகின்றனர். வண்ணத்துப் பூச்சி டாட்டூவில் பல அர்த்தங்கள். சுதந்திரம், மென்மையான அழகு, புதிய வாழ்க்கை, குட் லக்... என ஏகப்பட்ட மீனிங்ஸ்.

# பச்ச குத்தலியோ... பச்ச..!







**ஃப்ளவர் டாட்டூஸ்:** அழகு, மென்மை, ஃப்ரெஷ்னெஸ், கலையுணர்ச்சி, குளுமை... என ஏகப்பட்ட ஃபீலிங்ஸைக் கொடுக்கும் ஒற்றைப் பூ! ரெட் ரோஸ் என்றால் லவ் அண்ட் ரொமான்ஸ், பிங்க் என்றால் க்ரேஸ், வொய்ட் என்றால் அழியாக் காதல் + வெகுளி... என ஃப்ளவர்ஸ் வழியே ஃபீலிங்ஸ்... டைம்லெஸ் ப்யூட்டி டாட்டூஸ் இந்த ஃப்ளவர் டாட்டூஸ்!

**ஹார்ட் டாட்டூஸ்:** காதலைச் சொல்ல இதைவிட ஈஸியான அழகான வழியுண்டா என ஆண் பெண் இருவருமே கேட்கின்றனர். 'நம்ம லவ் பர்மனென்ட்' எனக் கூவி, காதலர்கள் ஒரே மாதிரி ஹார்ட் டாட்டூஸ் போட்டு அதில் ஒருவரின் பெயரை மற்றவர் எழுதிக் கொள்கின்றனர்.

**ஏஞ்சல் டாட்டூஸ்:** இறந்து போனவர்கள் ஏஞ்சலாக மாறுவர் என்ற நம்பிக்கையுடன் பலர் தங்களுக்கு மிக நெருக்கமானோர் இறக்கும்போது அவர் நினைவாக ஏஞ்சல் டாட்டூஸ் போட்டு எந்நேரமும் நினைவஞ்சலி செலுத்துவர்.

டாட்டூஸ் போடுவதற்கு முன்னால் நன்றாகச் சிந்தித்து ஆராய்ந்த பிறகே போடவும். வலியைப் பொறுத்துக்கொண்டு போடுவது பெரிதல்ல; தன்னைச் சுற்றியிருக்கும் உறவினர், நண்பர்களை நம் டாட்டூஸ் டிஸைன் எவ்வாறு பாதிக்கும் என்பதையும் கண்டிப்பாக நினைவில் கொள்ளவும்.

'உன் ஆக்டிவிடிஸ் ரொம்ப தப்பு லட்சுமி' என யாரும் பாடாதவாறு உங்கள் டாட்டூஸ் இருக்கட்டும்.

**- லதா சேகர்**

காடுகளிலிருந்த கொல்லிப் பாவை
கணிணியோடு வலம் வருகின்றாள்
மாறிய உடைகள், மாறாத உணர்வுகளோடு
கான்கிரீட் காடுகளுக்கிடை
அன்பின் விதையை ஊன்றுவாள்

பேதச் சூரிய ஒளி வந்தாலும்
குளிர்வித்துத் தரும் இலை வைத்திருப்பாள்
காதலர் தினங்களும் அன்னையர் தினங்களும்
அட்டைகளுக்குள் உறிஞ்சப்படும்
அவலம் தவிர்த்து வாழ்வாக்குவாள்
அகராதிகள் அர்த்தங்களை
மாற்றி எழுதிக் கொள்கின்றது
அவளின் விதைப்பில் முளைத்தெழும்
துளிர்களால்

போலிகளின் களையெடுப்பில்
வளர்கின்றது
அவளது பூர்வீக விவசாய நிலம்
ஆயிரம் கைகளை இரு கைகளுக்குள்
அடக்கி வைத்தே
அகிலம் செழிக்க என் ஆதித் தாயின்
புதிய விதையை எங்கும் நடுவாள்
காடுகள் முளைக்க
காடுகள் தழைக்க
சுயமும் பொதுமையும் சேர்ந்தே பிழைக்க

# கொல்லிப் பாவை

திலகபாமா

# - ராமதாஸ் காட்டம்

***முதல்நாள்கூட பத்திரிகையாளர்களிடம் பேசும்போது, ''உள்ளாட்சித் தேர்தலில் அ.தி.மு.க.வை ஆதரிப்போம்'' என்று சொல்லிவிட்டு, மறுநாள் கூட்டணி முறித்துக் கொண்டார் ராமதாஸ். அ.தி.மு.க. கூட்டணியிலிருந்து விலகிய மறுநாள் டாக்டர் ராமதாஸை தைலாபுரம் தோட்டத்தில் சந்தித்தோம். சங்கடப்படுத்தும் கேள்விகளையும் சகஜமாகச் சந்தித்தார் டாக்டர்!***

''**2006** சட்டமன்றத் தேர்தலில் நாங்கள் தி.மு.க. கூட்டணியில் இருந்தோம். அப்போது அ.தி.மு.க தொண்டர் ஒருவர் திண்டிவனத்தில் கொலை செய்யப்பட்டார். உடனே முன்னாள் அ.தி.மு.க. அமைச்சர் சி.வி.சண்முகம் என்னையும், என் மகன், தம்பி, மருமகன் ஆகியோரையும் குற்றவாளிகள் பட்டியலில் சேர்த்து விசாரிக்க வேண்டும்

## பா.ம.க. அடிக்கடி கூட்டணி மாறுவதால் மக்கள் மதிப்பீட்டில் மலிவாகப் போவதை உணர்ந்திருக்கிறீர்களா?

என்று புகார் கொடுத்தார். ஆனால் போலீஸ் விசாரணைக்குப் பின் எங்களை வழக்கில் குற்றவாளிகளாகச் சேர்க்கவில்லை. பின்னர் திண்டிவனம் நீதிமன்றத்தில், எங்களை வழக்கில் குற்றவாளியாகச் சேர்க்க வேண்டும் என்று மனு தாக்கல் செய்தார். அது தள்ளுபடி செய்யப்பட்டது. இந்த நிலையில் அ.தி.மு.க. கூட்டணி அமைந்தது. சி.வி.சண்முகம், உயர்நீதிமன்றத்தில் அப்பீல் மனு தாக்கல் செய்யப் போவதாக தகவல் வந்தது. உடனே எங்கள் தலைவர் ஜி.கே.மணி கொடநாட்டில் ஜெயலலிதாவைச் சந்தித்து இது தொடர்பாகப் பேசினார். 'நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம்; நான் சொன்னால் அந்தப் பையன் கேட்பான்' என்று ஜெ. சொன்னார். ஆனால், சி.வி. சண்முகம், உயர்நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்துவிட்டார். இதிலிருந்து ஜெயலலிதாவே என்னைப் பழி வாங்க விரும்புகிறார் என்பது தெரிந்தது. நான் சென்னையில், 'அ.தி.மு.க.வை ஆதரிப்போம்' என்று சொன்ன அடுத்தநாள் நிர்வாகக் குழு கூடியது. இந்த வழக்கு பற்றி விவாதம் வந்தது. 'என்னை அவமானப்படுத்தும் விதமாகவும், களங்கப்படுத்தும் விதமாகவும் செயல்படும் ஜெயலலிதாவோடு கூட்டணியில் இனியும் ஒரு நொடி கூட இருக்கக்கூடாது' என்று நிர்வாகக் குழு தீர்மானம் போட்டுவிட்டது. இதுதான் நடந்தது. என்னைப் பொறுத்தவரை ஈ, எறும்புக்குக்கூட நான் தீமை விளைவிக்க நினைத்ததில்லை. அன்றாடம் தியானம் செய்கிறேன். 'உலகத்தில் எல்லா உயிர்களும் நன்றாக இருக்க வேண்டும்' என்பதே என் முதல் விருப்பமாக இருக்கிறது.''

***சவாலைச் சட்டப்படி சந்திக்க வேண்டியதுதானே! எதற்காக ஜெய***



# “அ.தி.மு.க. அடிமைகளின் கூடாரம்!”

***லலிதாவின் தயவை எதிர் பார்த்தீர்கள்?***

''வழக்கைச் சட்டப்படி சந்திப்பதே என் விருப்பம். ஆனால் எங்கள் தலைவர் ஜி.கே.மணி மற்றும் கட்சிப் பிரமுகர்கள், 'நாம் ஜெயலலிதாவுடன் கூட்டணியில் இருக்கிறோம். ஒரு கூட்டணித் தலைவரை அவமானப்படுத்தும் செயலை மற்றொரு கூட்டணிக் கட்சியின் பிரமுகர் செய்தால் அதை அந்தக் கட்சியின் தலைமை கவனத்துக்குக் கொண்டு செல்வது நமது கடமை' என்று விஷயத்தை ஜெயலலிதாவிடம் சொன்னார்கள். ஆனால் ஜெயலலிதா இந்தப் பிரச்னையில் எல்லாவற்றையும் தெரிந்து வைத்திருக்கிறார் என்பதையும், சி.வி.சண்முகம் அவர் சொல்படிதான் செயல்படுகிறார் என்பதையும் பின்னர் தெரிந்துகொண்டோம்.''

***அ.தி.மு.க. கூட்டணியில் தொடர்ந்து இருந்தால் ஆளும் கட்சியின் செல்வாக்கு நம்மைப் பாதிக்கும் என்று பயமா..?***

''பயம் என்பதை அறியாதவன் நான். 29 ஆண்டுகளாக இயக்கம் நடத்தி வருகிறேன். நானும் யாரையும் பயமுறுத்த மாட்டேன்; என்னையும் யாரும் பயமுறுத்த முடியாது!''

***அ.தி.மு.க. கூட்டணியில் சேர்வதாக முடிவெடுத்தபோது உங்கள் பொதுக்குழுவில் வோட்டெடுப்பு நடத்தினீர்கள். இப்போது விலகும் போது ஏன் வேறு நடைமுறை?***

''கட்சித் தேர்தல் குறித்து விவாதிக்கக் கூடிய நிர்வாகக் குழுவில் உறுப்பினர்கள் அனைவரும் ஒட்டுமொத்தமாக எழுந்து நின்று முடிவெடுக்க வற்புறுத்துகிறபோது நாங்கள் அதை அலட்சியப்படுத்த முடியாது. நிர்வாகக்குழு உயர் மட்ட அமைப்பு.''

***ஜெ. உங்களை ஏன் பழி வாங்க வேண்டும்?***

''அதற்கான காரணத்தை அவரிடம்தான் கேட்க வேண்டும். ஆனால் 2001ல் அவர் ஆட்சிக்கு வந்த

போது தமக்கு வேண்டியவராகக் கருதி வந்த ஒருவர் மீது போதை மருந்து வழக்கெல்லாம்கூட போட்டதை மறந்து விட்டீர்களா?''

**ஆரணி போன்ற தொகுதிகளில் உங்கள் கட்சித் தொண்டர்கள் அ.தி.மு.க. வேட்பாளருக்குச் சரியாக வேலை செய்யாததால்தான் ஜெ.க்கு உங்கள் மீது கோபம் என்கிறார்களே?**

''பாராளுமன்றத் தேர்தலில் எங்களால்தான் அ.தி.மு.க. ஆறு தொகுதிகளில் வெற்றி பெற்றது. அந்தக் கட்சி அமைப்பு பலவீனப்பட்டுக் கிடக்கிறது. கீழிருந்து மேல் வரை கோஷ்டிகள். அரசியலுக்கு



## ஜெயலலிதா ஏன் உங்களைப் பழிவாங்க வேண்டும்?

லாயக்கில்லாத தலைமை. கட்சியில் என்ன நடக்கிறது என்று தெரிந்து கொள்ளாமல் எட்டாத உயரத்தில் இருக்கும் தலைமை. அ.தி.மு.க. கலகலத்துப் போய்விட்டது. அது ஒரு அடிமைக் கூடாரம். இனி அது தேறாது. 'எனக்குக் குடும்பம் கிடையாது' என்று சொல்லிக்கொண்டு பங்களாக்களைக் கட்டிக்கொண்டு மக்களுடன் தொடர்பில்லாமல் வாழ்கிறார் ஜெயலலிதா. நாங்கள் தோற்றதற்கு அ.தி.மு.க. செல்வாக்கு இழந்து போனதும் ஒரு காரணம்.''

**இப்படி அடிக்கடி கூட்டணி மாறுவதால் மக்கள் மதிப்பீட்டில் மலிவாகப் போகிறீர்களே!**

''பா.ம.க. மட்டும்தான் தேர்தலுக்குத் தேர்தல் அணி மாறுவதைப் போல் சொல்கிறீர்கள். 1967 முதல் பாருங்கள். எந்தெந்தக் கட்சிகள் எப்படியெல்லாம் மாறி மாறிக் கூட்டணி அமைத்திருக்கின்றன என்பது புரியும். 1991, 1996 தேர்தல்களில் நாங்கள் தனியாகவே நின்றிருக்கிறோம். எங்களை மக்கள் புரிந்து கொண்டிருக்கிறார்கள். சில பத்திரிகைகள்தான் எங்களைக் கேலி செய்கின்றன.''

**நீங்கள் பாராளுமன்றத் தேர்தலில் தோற்றவுடன் 'எங்கள் வெற்றியைவிட பா.ம.க. தோல்வி மகிழ்ச்சியைக் கொடுக்கிறது' என்று ஸ்டாலின் சொன்னாரே?**

''எங்கள் கூட்டணி வெற்றி பெறுவதற்கான சூழல் இருந்தது என்பதுதான் நடுநிலையாளர்கள் கருத்து. அதை மாற்றியது தி.மு.க.வின் அதிகார, பணபலம். எத்தனை கோடி செலவழித்து பெற்ற வெற்றி என்பது ஸ்டாலின் மனசாட்சிக்குத் தெரியும்.''

**இனி தி.மு.க. அணியா?**

''தேர்தல் 2011ல்தான். எனவே அதைப் பற்றிப் பேச வேண்டாம். மக்களைப் பாதிக்கும் எல்லாப் பிரச்னைகளிலும், இலங்கைப் பிரச்னை உட்பட, எங்கள் நிலைக்கேற்று இருக்கும் மற்ற கட்சிகளுடன் இணைந்து பொறுப்புள்ள எதிர்க் கட்சியாகப் போராடுவோம்.''

**– ப்ரியன்**

படங்கள்: **ராஜன்**

''பாரம்பரியச் சுவை மிகுந்தவை எங்கள் தயாரிப்புகள்!'' என்று பெருமையோடு கூறுகிறார்கள் உமாவும், காயத்ரியும். சாதத்தோடு பிசைந்து சாப்பிடக்கூடிய புளிக்காய்ச்சல், வத்தக்குழம்பு, தக்காளி உள்ளிட்ட ஒரு டஜனுக்கு மேற்பட்ட சுவையான 'ரைஸ் மிக்ஸ்' வெரைட்டீஸ் இவர்களது லேட்டஸ்ட் தயாரிப்பு!

பொடிகள் வரிசையில், இட்லி மிளகாய்ப் பொடி, சாம்பார் பொடி, ரசப் பொடி என இல்லத்தரசிகளுக்கு, தினம் தினம் கைகொடுக்கும் தயாரிப்புகளும் உண்டு!

ஊறுகாய் வகைகள் என்றால் மாங்காய், எலுமிச்சங்காய், கடாரங்காய், நார்த்தங்காய் என்று ஒரு பெரிய பட்டியலே இருக்கிறது! ரைஸ்மிக்ஸ், ஊறுகாய் வகைகள் உயர்தரமான (நெ.1) நல்லெண்ணெயில் தயாரிக்கப்படுகிறது.



## கொட்டாது, சிந்தாது...

- பெட் பாட்டிலின் உள்ளேயும் ஒரு தடுப்பு இருப்பதால் கொட்டவோ சிந்தவோ செய்யாமல் எங்கே வேண்டுமானாலும் எடுத்துச் செல்லலாம்.
- சாஷேக்களிலும் சிறிய அளவில் இவை விற்கப்படுகின்றன.
- ஒன்பது மாத ஷெல்ஃப் லைஃப் உள்ளவை. (ஈரமில்லாத ஸ்பூனை மட்டும் பயன்படுத்துங்கள்!)
- எல்லாமே சுத்தகரிக்கப்பட்ட நீரில் தயாரிக்கப் படுவதால் சுகாதார விஷயத்தில் நெ.1 இடம்!

மங்கையர் ஃபுட் பிராடக்ட்ஸ் 'மாம்பலம் ஐயர்ஸ்' என்ற பிராண்ட் பெயரில் தயாரிப்பாகி அமோக வரவேற்பைப் பெற்றிருக்கின்றன. காஞ்சிபுரத்தை அடுத்த காரணையில், இவற்றைத் தயாரிக்கும் மங்கையர் ஃபுட் பிராடக்ட்ஸின் தொழிற்சாலை இருக்கிறது. தயாரிப்பில் ஈடுபட்டிருப்போர் அத்தனை பேருமே பெண்கள்! எனவே, சுய உதவிக் குழுக்கள் மூலம் அவற்றை வினியோகிக்கவும், விற்கவும் மங்கையர் ஃபுட் பிராடக்ட்ஸ் ஆர்வம் காண்பித்துச் செயல்படுகிறது.

''நீங்கள் இதை ஆரம்பிக்க ஏதாவது காரணம் இருக்குமே?''

''கணவன்-மனைவி இருவரும் வேலைக்குப் போகும் காலகட்டம் இது. நாம் பரபரப்பான வாழ்க்கை வாழ்கிறோம். அதனால் வெளியே வேலை முடிந்து வருகிற போது அதிக







Mambalam Iyers™
THE TRADITIONAL TASTE

சிரமம் இல்லாமல் உணவு வகைகள் தயாராக இருக்கவே விரும்புகிறோம். சமையலறையில் போய் நேரத்தைச் செல விட்டு, உடம்பையும் வருத்திக்கொள்வதில் என்ன பயன்? இரண்டாவது, பள்ளிக்குச் செல்லும் குழந்தைகள் இந்த 'ஜங்க் ஃபுட்' கொடுமையிலிருந்து விடுபட வேண்டும். இந்த இரண்டு குறிக்கோள்களையும் எங்களால் நிறைவேற்ற முடியுமா என்று பார்த்தோம். அதில் இப்போது வெற்றியும் பெற்றுவிட்டோம்!''

**''புகார், ஏதும் வந்தால், என்ன செய்வீர்கள்?''**

''கம்ப்ளெயன்ட் என்று இதுவரை எதுவும் எங்களுக்கு வந்ததில்லை. ஆனால் சஜஷன்ஸ் வரும், ஃபீட் பேக் வரும்! இன்னும் கொஞ்சம் வெரைட்டி அறிமுகப்படுத்த மாட்டீர்களா? என்று கேட்பார்கள். உறைப்பு, புளிப்பு இன்னும்கூட இருக்கலாம் அல்லது குறைக்கலாம் என்பது போன்ற யோசனைகள்தான் வரும்! பாக்கெட்டுகளிலேயே இதற்காக ஃபோன் நம்பரைக் கொடுத்திருக்கிறோம்.''

### வேடிக்கை இல்லை ; உண்மை!

இட்லி தோசை மாவு விற்கும் போதே மிளகாய்ப் பொடி, தக்காளித் தொக்கு இலவசமாகக் கொடுக்கிறார்கள். ரெடி-டு-ஈட் சப்பாத்தியுடன் 'சைட் டிஷ்' கொடுத்து விடுகிறார்கள். சப்பாத்தியைச் சுட வைக்காமல் ஒரு வெட்டு வெட்ட வேண்டியதுதானாம்!



**''ஏற்றுமதி கூட உண்டா?''**

''ரைஸ் மிக்ஸுக்கு வெளிநாட்டில் ரசிகர்கள் பலர் இருக்கிறார்கள். வெளிநாடு போகிறவர்கள் கையோடு இவற்றை எடுத்துக்கொண்டு போகிறார்கள்!''

**''உங்க தயாரிப்புகள் எங்கே கிடைக்கும்?''**

''சென்னையில் மட்டுமல்லாமல் தமிழ்நாடு முழுக்க எல்லா நகரங்களிலும் எங்கள் விற்பனையாளர்கள் இருக்கிறார்கள். பம்பாய்-பூனாவிலும்கூட எங்கள் தயாரிப்புகள் நல்ல வரவேற்பைப் பெற்றிருக்கின்றன! வெளிமாநிலங்களில் எங்கள் தயாரிப்புகளை வேண்டுவோர், எங்களை தொடர்புகொள்ளும் பட்சத்தில் தயாரிப்புகளை அனுப்பிவைக்கிறோம்.''

### பாக்கெட்டுக்கு ஏற்ற விலை!

100 கிராம் சாஷே முதல் 4 கிலோ கிராம் பெட் ஜார் வரை விதவிதமான அளவுகளில் இவர்கள் தயாரிப்புகள் கிடைப்பதால் 'நம் பாக்கெட்'டுக்கு ஏற்ற பாக்கெட்டுகளை வாங்கிக் கொள்ளலாம்!

மேலும் விவரங்களுக்கு : மங்கையர் ஃபுட் பிராடக்ட்ஸ், சென்னை.
ஃபோன் : 044-2471 8830, மொபைல் : 98414 38729
email: mangaiyarfoodproducts@rediffmail.com website: www.mambalamiyers.com

ADVT.

அதே நேரம்... அதே இடம்...

# கலாய்க்கிறார்







# தீபாவளி ரிலீஸ்!



எங்களோடது கூட்டணி வெடி...
எப்போ வெடிக்கும் எப்போ அடங்கும்
யாருக்கும் தெரியாது

# தீபாவளி தானம்

''அன்னதானம், விஷயதானம், கல்வி தானம், ரத்ததானம், கண்தானம்னு நிறைய தானங்கள் காலத்துக்கும், ஜனங்களோட தேவைக்கும் ஏத்த மாதிரி மாறிக்கிட்டே வருதுதானே! இப்போ முழு உடம்பு தானம்தான் தானத்திலே பெரிய தானம். ஆனா அதை ஆசைப்பட்ட உடனே அவ்வளவு சீக்கிரம் செய்ய முடியாது. ஏகப்பட்ட ஃபார்மாலிட்டீஸ் இருக்கு. கல்கியில நிலகபாமான்னு ஒரு கவிஞர் உடல் தானத்துக்கு எழுதிக் கொடுக்கப் படாத பாடு பட்டதா எழுதியிருந்தாங்களே! அதுக்கு அடுத்த நிலையில இருக்கு உடல் உறுப்புதானம். உடம்பு லேர்ந்து முக்கியமான சில உறுப்புகளை மட்டும் இறந்த பின் தானம் செய்யறது. நிறைய மகளிர் சுய உதவிக் குழுக்கள் என்னென்னவோ சேவை செய்யறாங்க. புதுமையாவும் பிரயோஜனமாவும் புது வழிகாட்டியாவும் நல்லது செய்ய ஆசைப்பட்டோம். தீபாவளிக்கு நம் வீட்டு ஸ்வீட்டைப் பக்கத்து வீட்டுல கொடுத்து மகிழ்ச்சியைப் பரிமாறிக்கிறா மாதிரி எங்க குழு மகளிர்கிட்டே பேசினோம். அப்புறம் அவங்க குடும்ப உறுப்பினர்கள்கிட்ட பேசினோம். ஒப்புதல் வாங்கினோம். அடுத்து இதைச் செயல்படுத்தற மோட் அமைப்பிடம் முழு விவரத்தையும் வாக்குறுதியையும் கொடுத்து ஒரே பகுதியைச் சார்ந்த பெண்களும் உடல் உறுப்புகளை தானம் செஞ்சோம். நாங்க சாமிகிட்ட போகும் போது ஒவ்வொருத்தரின் உறுப்பு தானத்தால் சுமார் எட்டு குடும்பங்களில் நெசமான தீபவாளி வருமில்லே... இந்த அவேர்னெஸ் மூலை முடுக்கெல்லாம் நல்லா பரவணும் ஸார்'' என்கிறார் ஒருங்கிணைக்குநர் ஈ.டி.பிரேமலதா


* ஈ.டி.பிரேமலதா

நாமும் விதைப்போமே... வார்த்தைகளால் சபாஷ்னு ஒரு வாழ்த்தை!

**- காவ்யா**

# நடக்குமென்பார் நடக்கும்!

**மேஷம்:** நினைத்தது நடக்கும். மன சஞ்சலம் தீரும். பண வருவாய் பெருகும். உடல் நிலை சீராகும். அதிர்ஷ்ட எண்கள்: 1,3,9; அதிர்ஷ்ட தினங்கள்: ஞாயிறு, திங்கள், வியாழன், வெள்ளி; வணங்க வேண்டிய தெய்வம்: குருபகவான்; அதிர்ஷ்ட நிறங்கள்: மஞ்சள், நீலம்

**ரிஷபம்:** எண்ணிய காரியங்கள் இனிது நிறைவேறும். உடல் ஆரோக்கியம் பெறுவீர்கள். வேலையில் இருந்து வந்த தொல்லைகள் விலகி மன அமைதி கிட்டும். அதிர்ஷ்ட எண்கள்: 5,6, அதிர்ஷ்ட தினங்கள்: புதன், வெள்ளி, திங்கள்; அதிர்ஷ்ட நிறம்: சிவப்பு, நீலம், அதிர்ஷ்ட தெய்வம்: பெருமாள்.

**மிதுனம்:** உத்தியோகத்தில் இட மாறுதல் உண்டாகும். கொடுக்கல், வாங்கலில் கவனத்துடன் இருப்பது நல்லது. அதிர்ஷ்ட நிறம்: பச்சை, சிவப்பு, மஞ்சள்; அதிர்ஷ்ட எண்: 1,5,6; அதிர்ஷ்ட தினங்கள்: புதன், திங்கள், வியாழன், வெள்ளி; வணங்க வேண்டிய தெய்வம்: ஆஞ்சநேயர்.

**கடகம்:** நினைத்ததைச் சாதிக்கும் குணம் உடைய உங்களுக்கு இந்த வாரம் நல்ல செய்தி வரப் போகிறது. குடும்ப வாழ்வில் சந்தோஷம் பெருகும். கடன் தொல்லையிலிருந்து விடுபடுவீர்கள். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். அதிர்ஷ்ட எண்: 1,9; அதிர்ஷ்ட நிறம்: வெள்ளை, நீலம்; அதிர்ஷ்ட தினம்: ஞாயிறு, திங்கள், செவ்வாய் மற்றும் வியாழன்; வணங்க வேண்டிய தெய்வம்: முருகன்.

**சிம்மம்:** பொறுமையையும், நிதானத்தையும் கடைப்பிடிக்கும் உங்களுக்கு இந்த வாரம் ஓர் அற்புத வாரமாக விளங்கப் போகிறது. பண வரவுகள் பாக்கெட்டை நிரப்பும். நல்ல செய்தி வந்து சேரும். அதிர்ஷ்ட எண்கள்: 1,5; நிறம்: மஞ்சள், பச்சை, அதிர்ஷ்ட தினங்கள்: ஞாயிறு, புதன், வெள்ளி; வணங்க வேண்டிய தெய்வம்: சிவன்.

**கன்னி:** முகவசியம் கொண்ட உங்களுக்கு இந்த வாரம் திடீர் அதிர்ஷ்டம் அடிக்கப் போகிறது. பெண்களால் நற்பலன் கிட்டும். அநாவசியமான செலவுகள் தீரும். உடல் நிலை சீராகும். அதிர்ஷ்ட எண்: 5,6, நிறம்: பச்சை, நீலம், தினம்: புதன், வியாழன், வெள்ளி; வணங்க வேண்டிய தெய்வம்: மகாவிஷ்ணு.



# 11.10.09 முதல் 17.10.09 வரை

**துலாம்:** ஆளைப் பார்த்து எடை போடும் உங்களுக்கு வியாபாரத்தில் நல்ல வருவாய் கிடைக்கும். கடன் சுமையிலிருந்து விடுபடுவீர்கள். சிலருக்கு மனை வாங்கும் யோகம் கிட்டும். அதிர்ஷ்ட எண்: 6; நாள்: திங்கள், புதன், வெள்ளி, சனி; நிறம்: பச்சை, சிவப்பு, நீலம், வெள்ளை; வணங்க வேண்டிய தெய்வம்: பெருமாள், ஆஞ்சநேயர்.

**விருச்சிகம்:** மெதுவாக முன்னேறி வெற்றி நடை போடும் உங்களுக்கு இந்த வாரம் ஆடை, ஆபரண வஸ்துகள் சேரும். தெய்வ சங்கல்பத்தால் எல்லாவிதமான காரியமும் இனிதாக நடக்கும். நில புலன வாங்க சிறந்த தருணம். அதிர்ஷ்ட எண்கள்: 3,9, நாள்: ஞாயிறு, திங்கள், வெள்ளி; நிறம்: மஞ்சள், வெள்ளை; வணங்க வேண்டிய தெய்வம்: குரு.

**தனுசு:** எப்பேர்ப்பட்ட ஆளையும் பேச்சில் மடக்கும் உங்களுக்கு இந்த வாரம் மகிழ்ச்சிகரமானதாக இருக்கும். குடும்பத்தில் இருந்த மனக் கசப்புகள் விலகும். முன்னேற்றமான வாரம். அதிர்ஷ்ட எண்: 1,3; நாள்: வியாழன், ஞாயிறு; நிறம்: மஞ்சள்; வணங்க வேண்டிய தெய்வம்: முருகன், சிவன்.

**மகரம்:** எந்தவிதமான சிக்கலையும் தீர்த்து வைக்கும் உங்களுக்குப் பொன்னான வாரம். பணத் தேவைகள் நிறைவேறும். வழக்கு வெற்றி அளிக்கும். வியாபாரம் சூடு பிடிக்கும். அதிர்ஷ்ட எண்: 6,5; நாள்: திங்கள், புதன், வெள்ளி; நிறம்: நீலம், வெள்ளை; வணங்க வேண்டிய தெய்வம்: மகாவிஷ்ணு, மகாலட்சுமி.

**கும்பம்:** நிறைகுடம் தளும்பாது என்ற பழமொழிக்கு ஏற்ப வாழக்கூடிய உங்களுக்கு இந்த வாரம் எதிர்பாராத அதிர்ஷ்டங்கள் ஏற்படும். வழக்கு வெற்றிப்பாதையில் செல்லும். மனக் கஷ்டம் இருக்காது. சுப நிகழ்ச்சிகள் ஏற்படும். அதிர்ஷ்ட எண்: 5,6; நிறம்: மஞ்சள், சிவப்பு, தினம்: ஞாயிறு, செவ்வாய், வியாழன்; வணங்க வேண்டிய தெய்வம்: குரு, சிவன்.

**மீனம்:** நழுவற மீனில் நழுவற மீன் என்ற பழமொழிக்கு ஏற்ப நீங்கள் எதிலும் அவ்வளவு சீக்கிரம் மாட்டிக் கொள்ள மாட்டீர்கள். எதற்கும் மதிப்பும் மரியாதையும் எதிர்பார்க்கும் உங்களுக்கு ஒரு நல்ல செய்தி வரப்போகிறது. மனத்தில் இருக்கும் காரியம் நிறைவேறும். அதிர்ஷ்ட எண்: 3,9; நிறம்: மஞ்சள், வெள்ளை; தினம்: ஞாயிறு, வியாழன், புதன்; தெய்வம்: முருகன்.

**தஞ்சை பரத்வாஜ்**



# எங்க தீபாவளி!



## பொழுதுபோக்கு என்பதே சேவை செய்வதுதான்!

''தீபாவளின்னாலே ஜாலியோ ஜாலி தான். பட்டாசு நிறைய வெடிக்கலாம், புது சொக்கா போட்டுக்கலாம். சொந்தக் காரங்க எல்லாம் கை நிறைய ஸ்வீட்டோட பார்க்க வருவாங்க'' என்று சொல்லும் சிவகண்டனுக்கு கண்களில் மத்தாப்பு சிதறு கிறது! தாய் தந்தையை இழந்து காப்பகத்தில் வளரும் அவன், சொந்தக்காரர்கள் என்று குறிப்பிட்டது தீபாவளி அன்று 'உதவும் உள்ளங்கள் இல்லம்' தேடி வந்து ஸ்வீட் கொடுத்துச் செல்பவர்களைத்தான்...

''ஒவ்வொரு வருஷமும் தீபாவளிக்கு ஒரு வாரம் முன்னாலேயே இந்த ஹோம்ல இருக்குற பிள்ளைங்களுக்காக பட்டா சுகள், புதுத் துணி மணிகள்னு யாரா வது எடுத்துக் கொடுத்துட்டுப் போவாங்க... அப்படி யாரும் செய்யலைன்னா நாங்களே இங்க இருக்கிற அறுபது குழந்தை களுக்கும் வாங்கிக் கொடுத்துடுவோம். எங்களுக்குப் பொழுதுபோக்கெல்லாம் இங்கு செய்யும் சேவைதான்'' என்றனர் இங்கு பகுதி நேரத் தொண்டு புரிவோர்.

''தீபாவளி அன்னிக்கு எங்க எல்லா ரையும் கிஷ்கிந்தா, எம்.ஜி.எம். இப்படி எங்க யாச்சும் கூட்டிட்டுப் போனா நல்லா இருக் கும். தீபாவளி அன்னிக்குப் போனோம்னா கூட்டமே இருக்காது பாருங்க. ஜாலியா விளையாடிட்டு வரலாம்ல'' என தீபாவளி கொண்டாட்டத்துக்கு ஏக்கப் பெருமூச்சோடு புது ஐடியா தீட்டுகிறான் தங்கராஜ்.

'நாலு ஜீவனுக்கு நல்லது செய்தால், அன்னிக்குத்தான் நரகாசுரன் தகர்ந்த நாள்'னு சொல்கிறார்கள் இவ் வமைப்பை எட்டு வருடங்களாக நடத்தி வரும் ஓய்வு பெற்ற அரசாங்க ஊழியர்கள் ஒன்பது பேர்.

**- நளினி சம்பத்குமார்**



# தொட்டதெல்லாம் தங்கம்!



**வி**மலனின் கடுமையான தவம் கண்டு கடவுள் மகிழ்ந்தார். அவன் முன் தோன்றினார்.

''என்ன வரம் வேண்டும் கேள்?''

''நான் தொட்டதெல்லாம் தங்கம் ஆக வேண்டும்.''

''நன்றாக யோசித்துக் கொள். ஏற்கெனவே ஒருவன் இந்த மாதிரி வரம் கேட்டு மாட்டினான்.''

''இல்லை நன்கு யோசித்துத்தான் கேட்கிறேன்.''

''அப்படியே அளிக்கிறோம்'' என்று கடவுள், வரம் அளித்துவிட்டு மறைந்தார்.

**சி.பி.செந்தில்குமார்**

முடிவு -1:

**வி**மலன் சிரித்தான். கையில் கிளவுஸை அணிந்து கொண்டான். மனைவியைத் தொட்டான். ஒன்றும் ஆகவில்லை. கிளவுஸைக் கழற்றி இரும்பைத் தொட்டான். மறக்காமல் மறுபடி கிளவுஸ் அணிந்து கொண்டான்.

முடிவு - 2:

**வ**ரம் கொடுத்துவிட்டு வந்த சிவனைப் பார்வதி முறைத்தார். ''ஏன் இப்படி வரம் கொடுத்து மாட்டிக் கொள்கிறீர்கள்?''

''யார்? மாட்டியது நானா? அவனா? அவன் மனைவியின் பெயர் தங்கம் என்பதை மறந்துவிட்டாயா? இனி அவன் யாரைத் தொட்டாலும் அவன் மனைவி தங்கமாக மாறிவிடுவார்கள். பைத்தியம் பிடிக்காத குறையாய் மீண்டும் நம்மை அழைத்து வரத்தைத் திரும்பப் பெறச் சொல்லிக் கதறுவான் பாரேன்!''

# சபீதா ஜோசப்

திரைத்துறை பற்றி அதிகம் எழுதிப் பெயர் பெற்றுள்ள சபீதா ஜோசப், இத்தொடரில் பல்வேறு சினிமா கலைஞர்களின் சுவாரஸ்யமான குண இயல்பு களைப் பதிவு செய்கிறார்...



''ஹலோ... மம்முட்டி சார் இருக்காங்களா?'' போர்ட்டிகோவில் நின்றிருந்த காருக்கு அடியில் படுத்து ரிப்பேர் செய்து கொண்டிருந்தவரைக் கேட்டோம்.

''யெஸ்... சொல்லுங்க'' என்றபடி வெளியே வந்தார் அவர். சாதாரண வேட்டி, பனியனில் ஆங்காங்கே கிரீஸ் கறைகளோடு, கலைந்த தலையோடு நம்மை ஆச்சர்யத்தில் ஆழ்த்தியவர் மலையாள சூப்பர் ஸ்டார் மம்முட்டியேதான்...

மம்முட்டியை அவ்வளவு எளிதில் பிடிக்க முடியாது. பேட்டி என்று போனால் நிறைய கண்டிஷன் போடுவார் எனக் கேள்விப்பட்டிருந்தேன். அதனால் சில படப்பிடிப்புகளில் அவரைப் பார்த்தபோதும் நெருங்கிப் பேசாமல் இருந்து வந்தேன். அவருக்கு தேசிய விருது வழங்கப்படுவதாகச் செய்தி வந்தபோது தொலைபேசியில் தொடர்புகொண்டேன்.

மம்முட்டியே எடுத்துப் பேசினார்.

''உங்கள் நேர்காணல் ...... வார இதழுக்கு வேண்டும்.''

''நாளை காலை 10 மணிக்கு வீட்டுக்கு வாங்க பேசலாம்'' - தெளிவான தமிழில் பதில் வந்தது. மறுநாள் நேரில் சென்ற போதுதான் மேற்கண்ட ஆச்சர்யம்!



1 இவர்கள் இப்படித்தாங்க..!

நம்மை அறிமுகப்படுத்திக் கொண்டதும்...

''ஓ... நீங்கதானா... வாங்க'' - உள்ளே அழைத்துச் சென்றார். வரவேற்பறையில் உட்கார்ந்தோம். சிறிது நேரத்தில் தேனீர் வந்தது.

எந்த பந்தாவும் செய்யாமல் அதே அழுக்கடைந்த வேட்டி பனியனுடன் உட்கார்ந்து அவர் பேட்டி கொடுத்தார்.

முதல் கேள்வி ஆங்கிலத்தில் கேட்டதும், ''எனக்குத் தமிழ் நல்லாத் தெரியும்! தமிழிலேயே பேசுவோம்'' என்றார்.

சக நடிகரான மோகன்லால் பற்றிப் பெருமையாகக் குறிப்பிட்டார். அவரது நடிப்பைப் பாராட்டினார். ''நாங்கள் அடிக்கடி சந்தித்துப் பேசிக்கொள்வோம், ரெண்டு பேரும் சேர்ந்து நடித்திருக்கிறோம். இனியும் நடிப்போம், நாங்க சேர்ந்து அரட்டை அடிப்போம். அவர் என் சகோதரர் போல, எங்களுக்குள் எந்தப் போட்டியோ பொறாமையோ கிடையாது.

நான் பிறந்தது ஒரு சாதாரண கிராமத்தில். அப்பா ஒரு விவசாயி, என்னோடு சேர்த்து ஏழு குழந்தைகள். நான்தான் கடைக்குட்டி. கிராமத்துப் பள்ளியில் படித்தேன். படிப்பில் ரொம்ப சாதாரண ரகம். ஆனால், அந்த ஸ்கூலுக்கு அதுவே ரொம்பப் பெரிசு. பிறகு கொச்சியில் கல்லூரிப் படிப்பு. அப்புறம் சட்டக் கல்லூரியில் படித்து வக்கீல். இப்போது நடிகர்.

எனக்கு அம்மாவை ரொம்பப் பிடிக்கும். அவர்களிடம் மனம் விட்டுப் பேசுவேன். அவரிடம் எதையும் மறைக்க மாட்டேன். கல்லூரியில் படிக்கும்போது ஒரு பெண்ணைப் பார்த்ததையும், அந்தப் பொண்ணுக்கு லவ் லெட்டர் கொடுத்ததை அம்மாவிடம் சொல்லியிருக்கிறேன். பிறகு அந்தப் பெண்ணைப் பார்க்க முடியாமல் போய்விட்டது. அவளுக்காக நிறைய கவிதைகள் எழுதினேன்.

என் அப்பாவிடம் பேசப் பயப்படுவேன். எதுவும் அம்மா மூலம்தான் அப்பாவுக்குத் தெரிவிப்பேன். அப்பாவின் வெள்ளை தாடி எனக்கு ரொம்பப் பிடிக்கும். சின்ன வயதில் அப்பாவைப் போலவே முகத்தில் தாடி வரைந்து கொண்டு அப்பா மாதிரியே நடித்துக் காட்டுவேன். அதை ரசிக்கும் அம்மாவின் சிரிப்பில் பெருமிதம் வழியும்.

# ''நடிப்புப் பசிக்குத் தீனி வேணும்..!''



எங்கள் கிராமம் அழகான கடலைக் கொண்டது. அங்கு சின்னச் சின்ன படகுகள் இருக்கும். அன்பான அந்த மீனவர்களோடு எனக்கு ரொம்ப சிநேகம். அவர்களோடு நிறைய நாட்களைச் செலவிட்டு இருக்கிறேன். அந்தப் பழக்

கம்தான் 'அமரம்' படத்தில் நான் அசல் மீனவனாக நடிக்க உதவியது'' என்ற மம்முட்டி, இளமையில் நண்பர்களோடு திருவிழாவுக்குச் சென்று நாடகம், பாட்டு, கூத்து எனப் பார்ப்பாராம். அவர்கள் எப்படி நடிக்கிறார்கள் என்று கவனித்துப் பார்ப்பாராம்.

நடிகரான இந்த வக்கீலுக்கு மலையாள இலக்கியத்திலும் நல்ல ஈடுபாடு உண்டு. முகுந்தன், முகம்மது பஷீர், ஓ.வி.விஜயன், தகழி, கேசவ்தேவ், எம்.டி.வாசுதேவன் நாயர் இப்படி நிறைய பேரின் எழுத்துக்களைப் படித்திருப்பதாகக் கூறினார்.

மகள், மகன் என மம்முட்டிக்கு இரண்டு பிள்ளைகள். மகளை அமெரிக்காவில் மணம் செய்து கொடுத்துவிட்டார். மகன் லண்டனில் இருக்கிறார்.

உடம்பை ரொம்ப கட்டுக்கோப்புடன் வைத்திருந்தார். உணவு விஷயத்தில் ரொம்பக் கட்டுப்பாடு. அவருக்கு மிகவும் பிடித்தது மட்டன் பிரியாணி. ஆனால், அதையும் மாதத்தில் ஒருநாள்தான் சாப்பிடுவாராம். இளமையின் ரகசியம் என்னவென்று கேட்டபோது, ''மனசளவில் எனக்கு வயதே ஆகிறதில்லை'' - எனச் சிரித்தார்.

மலையாளம், தெலுங்கு, தமிழ், ஹிந்தி, கன்னடம் என இருநூறுக்கும் மேற்பட்ட படங்களில் நடித்துவிட்டாலும், ''என்னால் காமெடி பண்ணவோ, சிரஞ்சீவி போல டான்ஸ் ஆடவோ முடியாது'' என்றார் வெளிப்படையாக.



## மனசளவில் எனக்கு வயதே ஆகறதில்லை

''நடிப்பு ஒரு பசி மாதிரி. அதற்கு சரியான தீனி அவசியம்'' என்கிற மம்முட்டியிடம் ஒரு வழக்கம். எந்த மொழியில் நடித்தாலும் அந்த மொழியில் அவரேதான் சொந்தக் குரலில் பேசுவார். தம்முடைய படத்தை பிற மொழியில் டப்பிங் செய்தாலும் அந்த மொழியில் தமக்கு வேறு யாரும் பின்னணி பேசுவதை விரும்பமாட்டார்.

''நானே வந்து அந்த மொழியில் டப்பிங் பேசித் தருகிறேன். இதற்காக எனக்கு ஒன்றும் தரத் தேவையில்லை'' என்பார்.

''என்னுடைய நடிப்புக்கு எனது சொந்தக் குரல்தான் பொருந்தும், அப்போதுதான் என் நடிப்பு உயிர் பெறும்'' என்பது அவரது வாதம்.

ஒரு சமயம் ஒரு இயக்குநர் மம்முட்டியிடம் வந்து கதை சொன்னார், முழுக் கதையையும் கவனமாகக் கேட்ட மம்முட்டி, ''இந்தக் கதைக்கு என்னைவிட மோகன்லால் மிகவும் பொருத்தமாக இருப்பார். அவரை நடிக்க வையுங்கள். வேண்டுமானால் நானே அவரிடம் சொல்கிறேன்'' என்றதோடு நில்லாமல் லாலுக்கு அவரே ஃபோன் செய்தும் சொன்னாராம்.

அந்தப் படம்தான் மோகன்லால், குஷ்பூ நடித்த 'அங்கிள் பன்'

என்னதான் உச்சத்தில் இருந்தாலும், சிலர் எப்போதும் நான் இப்படித்தான் என்றிருப்பார்கள். அதுல மம்முட்டியும் அப்படித்தாங்க!

*(அடுத்த வாரம்: கவுண்டமணி எப்படி?....)*

1951ல் விருதுநகரில் பிறந்த ஜி.சந்ரு என்கிற சந்திரசேகரன், சென்னை கவின்கலைக் கல்லூரியில் பயின்று அக்கல்லூரியிலேயே ஓவியப் பேராசிரியராகவும் அதே கல்லூரியில் முதல்வராகவும் பணியாற்றி சமீபத்தில் ஓய்வு பெற்றவர். 85ல் தேசிய விருது பெற்றவர். உருவெளி, செப்படிதப்படி ஆகிய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். இவரின் 'ஊடாக' என்ற குறும்படம் தேசிய விருது பெற்றது. நிறைய நவீன ஓவியர்களை சிஷ்யர்களாகக் கொண்டவர். கலை பற்றிய ஆழமான கேள்விகளை சதா எழுப்பிக் கொண்டும் அதனைத் தமது படைப்புகளில் பரிசீலித்துக்கொண்டும் வரைகலை ரீதியாகப் படம்பிடிக்கப்படும் உருவங்களின் புறத் தோற்றத்தைக் கடந்து அவற்றின் சாரம் நோக்கிய தேடலைக் கொண்டவர். மண்ணின் மரபுகளை உள்வாங்கி ஜீரணித்துக் கொண்டவர் என்று விமர்சகர்களால் முன்மொழியப்படுபவர் சந்ரு. அவருடனான உரையாடலிலிருந்து...

**உங்கள் பயணத்துக்கான முன்னோடி யார்?**

''என்னோட ஓவியத்துக்கு முன்னோடி ஔவைதான். எனக்குப் பரிச்சயமான, குடும்பப்பாங்கான, சித்தாந்தமான ஒரு பெண்ணின் வெளிப்பாடாக ஔவை இருக்கிறாள். அவளுக்கு மொழி; எனக்கு ஓவியம். அவள் வாழ்வை எப்படி அர்த்த புஷ்டியாக மாற்றினாளோ, அப்படியே நானும் அர்த்த புஷ்டியாகப் பார்த்ததை ஓவியமாக்க முயற்சிக்கிறேன்.''



**உங்களுடைய ஓவியச் செயல்பாடு இந்துமதம் சார்ந்தே அமைவது ஏன்?**

# மதம்

''பொதுமையான கருத்தைச் சொன்ன விவேகானந்தரை ஒரு மதவாதியாகப் பார்த்தபோது அவர், 'மதம் எனக்கு ஒரு மொழி' என்றார். நானும் அவ்வாறே மதத்தை என் ஓவியத்துக்கான மொழியாக மாற்றிக் கொள்கிறேன். வானத்தைப் பார் என்றால் பார்க்க மறுக்கிறீர்கள். காக்கை, கிரகம், ஜாதகம், சூரியதேவன் போன்ற தொன்மத்தின் மூலம் உங்களை வானத்தைப் பார்க்க வைக்க வேண்டியுள்ளது. உங்களுக்கும் எனக்குமான உறவு வானத்தைப் பார் என்பதுதான். மதத்தை என் ஓவிய மொழியாகக் கையாண்டாலும் என் கருத்தியலை மதத்தோடு இயைந்தும் முரண்பட்டும்தான் பரப்புகிறேன்.''



**அதென்ன இயைந்தும் முரண்பட்டும்...?**

''களிமண்ணில் குழந்தைக்குப் பொம்மை செய்து கொடுக்கும்போதும் சரி, நடராஜர் சிலை செய்யும்போதும் சரி; எனக்கு இரண்டிலும் ஒரே மனநிலைதன். குழந்தை ஒரு கல்லைச் சிங்காரித்து குழந்தையாக பாவித்துப் பேசுகிறது; விளையாடுகிறது. கடைக்குப் போக நான் வாசலுக்கு வரும்போது அந்தக் கல்லைக் கலைத்துத் தூக்கிப் போட்டுவிட்டு என்னோடு ஓடி வருகிறது. விளையாடும்போது ஆக்கமும் கலைக்கிறபோது சிதைவுமென ஒரே மனநிலையில் அக் குழந்தை. இரண்டும் வெவ்வேறானது அல்ல. இரண்டிலும் அது சத்தியமாயிருந்தது; இருக்கிறது என்பதைப் போல...''

**இது எப்படி கலைஞர்களுக்குப் பொருந்தும்?**

''நடராஜர் சிலை செய்ய அழைப்பு வருகிறது. நானும் சிலை செய்து முடிக்கிறேன். அரசர், மந்திரிமார்கள் பாராட்ட எனக்குப் பெருமை. ஆனால் எனக்கு மட்டும் கவலை. அந்தச் சிலையின் காலில் நச்சு (விரிசல்) வந்தபின் 'பட்டி' பார்த்து மறைத்துள்ளேன். அச்சிலையின் முழுமையற்ற தன்மை என்னை வருத்துகிறது. நடராஜர் என்னிடம் வந்து, 'அது ஒன்றும் குறை வில்லை. கவலையை விடு' என்கிறார். ஆனாலும் கவலை. நடராஜர் சொல்கிறார்... 'சரி காலில் விரிசல் இருப்பதை சத்தியமாக்கி விடலாம்.



# எனக்கு மொழி!



**சிவன் என்பது நாமும் நமது கலையும் தான்!**

கால், கை உடைந் தவர்கள், காலில் விரிசல் உள்ள சிலை முன் மண்டியிட்டால் உடைந்த கால் சீராகி விடும் என சிலரின் கனவில் சொல் கிறேன்' என்றார் நட ராஜர்! அவர் சொன்ன படியே நடக்கவும் செய்தது. சத்தியம் காப் பாற்றிய கலைஞனாய் எனக்கு நிம்மதி. பரந்துபட்ட அனுபவம்கூட வெளிப்பாட்டு அடையாளமாய் மாறுகிறபோது குறை வுடையதாகவே அமைந்து விடுவதுண்டு. இதில் சிவன் என்பது நாமும் நமது கலையும்தான்.''

**நவீன ஓவியத்துக்கான அந்தஸ்து என்ன? நவீன ஓவியராக இருந்துகொண்டு நவீன ஓவியர்களை நீங்கள் தொடர்ந்து கடுமையாக விமர்சிப்பது ஏன்?**

''தரையில் படம் வரைந்து பிளாட் ஃபாரத்தில் காத்திருக்கும் ஒருவன்; ஸ்கொயர் ஃபீட் கணக்கில் பேனர் வரையும் ஒருவன்; கேன்வாஸில் படம் வரைந்து கேலரியில் வைக்கும் ஒருவன். இதில் யார் கலைஞன்? யார் உசத்தி? யார் வியாபாரி? மூவரும் ஒருவரே. சந்தை முறைக்குக் கலையைக் கடத்தாமல் இந்த ஓவியம் விற்பனைக்கு அல்ல என்ற நிலைப்பாடுதான் நவீன ஓவியத்துக்கான நிஜ அந்தஸ்து. இது எல்லா கலைக்கும் பொருந்தும். நவீனத்துவம் என்ற கருத் தியலில் நம்பிக்கையும் அதன் தேவை குறித்து அக்கறையும் உண்டு. ஆனால், நவீன ஓவியர்கள், நவீனக் கலைஞர்கள் என்ற பெயரில் நடத்தும் வியாபாரக் கூத்து சொல்லி மாளாதது.''

**ஓவியத்தில் எந்த இஸத்தில் நீங்கள் ஸ்பெஷலிஸ்ட்?**

''போலீஸ்காரன் வேடம் என்பது அடை யாளம். போலீஸ் என்றால் சமூக நலம் காப்பது என்பது கருத்தியல். அடையாளம் தேடுதலில் ஏற்படுகிற, பேதலிப்புதான் நவீனம், பின் நவீனத்துவம் என்பதெல் லாம். இந்தப் (இஸம் பற்றிய) பேதலிப் புக்கு ஸ்பெஷலிஸ்ட் ஆகும் வேலை எனக்கில்லை.''

**ஒரு படைப்புக்கு ஓவியம் வரைகை யில் உங்கள் வெளிப்பாட்டை எப்படி திட்டமிடுகிறீர்கள்?**

''மறைந்திருக்கும் மௌனங்கள், இடை வெளியை வெளிக்கொண்டு வரும் விதமா யும் விசாரணையைத் துவக்கும் விதமா யும் ஓவியம் வரைவேன். அதை அந்தப் படைப்பு தான் திட்டமிடும் - நானல்ல.''

# ஆல்ஃபா மைண்ட் பவர்

## ஆழ்மனதின் சக்தி!



**ALPHA™ MIND POWER**

"Unwind Your Mind & Empower Yourself"

**மனோ சக்தி நிபுணர் டாக்டர் விஜயலக்ஷ்மி பந்தையன்**

அளிக்கும் இந்தியாவின் பழம்பெரும் சித்தர்களின் சக்தியுடன் கூடிய ஒரு நாள் ஆல்ஃபா தியான பயிற்சி



- மன அழுத்தம் குறைக்க
- பணவரவை அதிகரிக்க
- உறவுகளைச் சீர்படுத்த
- குடும்பத்தில் அன்பு நிலவச் செய்ய
- நோய் தீர்க்க, நிம்மதியாக தூங்க
- பரீட்சையில் அதிக மார்க் வாங்க
- மகிழ்ச்சியுடன், தன்னம்பிக்கையுடன், வெற்றியுடன் வாழ

தபால் மூலம் கற்கலாம் ஆல்ஃபா மைண்ட் பவர் ஆடியோ சிடி மற்றும் பயிற்சி புத்தகம் ஆங்கிலம் மற்றும் தமிழில் தபால் மூலம் பெறலாம்.

ஒரு நாள் பயிற்சி மட்டுமே!

**ஆல்ஃபா தியான அனுபவம் இதோ ஒரு**

**அக்டோபர் 2009**

வேலை காரணமாக என் கணவர் அடிக்கடி வெளியூர் சென்று விடுவார். தனிமையில் உழன்று வந்த எனக்கு 30 வயது மதிக்கத்தக்க இளைஞன் ஒருவனுடன் நட்பு ஏற்பட்டது. தினமும் அவனுடன் பேசி வந்தேன். திடீரென்று அவன் என்ன காரணத்தினாலோ என்னைத் தவிர்த்து விட்டான். காரணம் புரியாமல் மனஅழுத்தத்திற்கு ஆளானேன். பிறகு ஆல்ஃபா தியானப் பயிற்சியில் கலந்து கொண்டேன். அதிலிருந்து நிம்மதியாக இருக்கிறேன்.

ஆல்ஃபாவிற்கு நன்றி!

குருஜிக்கு நன்றி!

ஆல்ஃபா சித்தர், புதுடெல்லி

காணத் தவறாதீர்கள்! நவம்பர் 10 அன்று பகல் 12.05 மணிக்கு பொதிகை டிவியில் எமது நேரடி ஒளிபரப்பைக் கண்டு பயன்பெறுங்கள்!

ஆர்.எஸ்.ஆர்.பிளாசா, 3வது தளம், 50, 51 ஆற்காடு ரோடு, சாலிகிராமம், சென்னை - 600 093. இந்தியா

ஃபோன் :+91- 44 - 2376 0007, 2376 6555

மொபைல் : 98414 02000, 98412 72146, 98416 96664

e-mail : amp@alphamindpower.net www.alphamindpower.net

அடுத்து வரும் பயிற்சி

சென்னை : 11.10.2009 பெங்களூர் : 25.10.2009

தூத்துக்குடி : 01.11.2009 கோவை : 15.11.2009

சென்னை : 22.11.2009

# Awesome Bril helps you Chill !



INDUSTRIAL RESEARCH CORPORATION

19, 12th Main Road, Malleswaram West, Bangalore-560 055. Tel : +91 80 23400394

Email: brilinfo@brilindia.com

**www.bril.in**

Bril®

Makes learning fun™



**வாழ்வின் சூழல் கோரமாக மாறிக் கொண்டிருக்கிறது. சினிமாவில் இருப்பவர்கள் அதை இன்னும் கூடுதல் பதற்றமாக்குகிறார்கள்!**

**கலைகளில் தேடல் என்பது என்ன?**

''தனது வீட்டை நோக்கி கால்நடையாக, தனியே நீண்ட நாட்களாகப் பாலை வனத்தில் பயணப்பட்டவன் வருத்தமுற்று தனக்குள் சொல்லிக்கொண்டான். 'இங்கு ஒரு மரம் இருந்தால் நிழலில் இளைப்பாறலாம்.' உடனே மரம் தோன்றியது. உணவு கிடைத்தால்... உணவு வந்தது. மெத்தையும் பணிப்பெண்ணும் அருகே இருந்தால்... அவையும் வந்தன. இப்போது சந்தேகமும் பயமும் மேலோங்கி, இது சாத்தான் வேலையோ? கொடூரமான புலி வந்து தன்னைக் கொன்றுவிடுமோ என்று எண்ணினான். உடனே புலி தோன்றி அவனைக் கொன்றது. இப்படித்தான் பலர் தமது பயணம் நிம்மதியை நோக்கியது என்று உணராமல் நமது தேவையும் உழைப்பும் எது நோக்கியது என அறியாமல் பலன்களையே வாழ்க்கையாகக் கருதி அதை எவனாவது அபகரித்து விடுவானோ என்ற அச்சத்தில் நிம்மதி இழக்கின்றனர். அதுவே அவர்களது படைப்பில் குளறுபடியாகவும் வன்மமாகவும் மாறி சமயங்களில் மேதாவித்தனமாகவும் வெளிப்படுகிறது.''

**இன்றைய சினிமா பற்றி...?**

''வாழ்வின் சூழல் கோரமாக மாறிக் கொண்டிருக்கிறது. சினிமாவில் இருப்பவர்கள் அதை இன்னும் கூடுதல் பதற்றமாக்குகிறார்கள். மரணத்தின் சோகத்தைக் கூட சடங்குகளால் மறைத்து, கொண்டாட்டத் தன்மைக்கு மாற்ற முயல்கிறது நமது மரபு. கோடம்பாக்கமோ செத்துப்போன கருத்தியல்களைச் சுமந்து திரிகிறது.''

**கலை விமர்சனம் தமிழ்ச் சூழலில்...**

''பாப்புலராக இருப்பதை மக்களுக்குக் கடத்துவது அல்ல விமர்சனம். கலைஞன் அகமுகமாகப் பயணம் செய்ததின் சாராம்சத்தைப் புறவெளிக்குச் சொல்வதுதான் கலை விமர்சனம். தமிழ்ச் சூழலிலோ அறியாமையும், வயிற்றுப் பிழைப்பும், சாதி மூலாமும்தான் கலை விமர்சனத் துறையாகக் காட்சி தருகின்றன. இது கவலைக்கிடமானது.''

சந்திப்பு மற்றும் படங்கள்:
**அமிர்தம் சூர்யா**

# பறவை பாண்டி

பள்ளியிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த 13 வயதுச் சிறுவன், மரத்திலிருந்து தவறி விழுந்த நாரைக் குஞ்சைக் கண்டான். ஓடிச் சென்று எடுத்தவன், அதைப் பாதுகாத்துப் பராமரிக்கத் தொடங்கினான். மீன்களைப் பிடித்து உணவாகக் கொடுத்து வளர்த்தான். சீஸனில் கூந்தன்குளம் வந்திருந்த பறவைகளோடு மீண்டும் இணைந்து வெளிநாடு சென்றுவிட்டது அது. ஆனால், ஆச்சர்யம், அடுத்த சீஸனில் கூந்தன்குளம் வந்த நாரைகளுள் ஒன்று அந்தச் சிறுவனை அடையாளம் கண்டு அவனைச் சுற்றி வட்டமிட்டது. அவ்வளவுதான், சிறுவன் பால்பாண்டி, பறவை பாண்டியாக அடித்தளம் அமைந்தது இப்படித்தான்.

பத்தாம் வகுப்பு வரையே படித்த பால்பாண்டி பறவைகளைப் பராமரிப்பதே பணியாகச் செய்து வந்துள்ளார். திருமணத்துக்குப் பின்பு இவர் மனைவியும் இவரது பணியில் இணைந்து கொண்டுள்ளார். இவரது ஆர்வத்தைப் பார்த்து வனத்துறையே இவரைத் தற்காலிகப் பணியாளராக நியமித்தது. வனத்துறை அளித்த சம்பளம் போதாத நிலையில் பறவைகளுக்கு உணவளிக்க தங்கள் நகைகளை விற்றும் செலவு செய்யத் தயங்கவில்லை இத்தம்பதி.

பறவைகள் குறித்த ஆராய்ச்சியில் ஆர்வம் இருந்தாலும் அதற்கான கல்வித் தகுதி இல்லை. எனினும் பால்பாண்டியின் ஆர்வத்தை அறிந்த, நாகர்கோவில் IRNE விஞ்ஞானி ராபர்ட் கிரப் என்பவர் பறவைகளின் குணநலன்கள், உணவுப் பழக்க வழக்கங்கள் போன்ற நிறைய நுணுக்கங்களை இவருக்குக் கற்றுக் கொடுத்துள்ளார்.

இப்போது கூந்தன்குளம் வரும் ஆராய்ச்சி மாணவர்களுக்கு ஆய்வில் உதவும் கைட் பால்பாண்டிதான்! இவரது சேவையைப் பாராட்டி கேரள அரசு 'பறவை மனிதன்' என்ற பட்டத்தையும், வெள்ளிக் கேடயத்தையும் வழங்கியுள்ளது. கைராளி தொலைக்காட்சி 'பறவை மனிதன்' என்ற குறும்படத்தின் மூலம் இவரைச் சிறப்பித்துள்ளது.

இவரது மனைவியின் சேவையையும் பாராட்டி, 'சிறந்த பறவை சேவை பெண்மணி' என்ற பட்டம் அவரது இறப்புக்குப் பின் வழங்கப்பட்டுள்ளது.



தென்தமிழகத்தில் உள்ள முக்கியமான பறவைகள் சரணாலயம் கூந்தன்குளம், திருநெல்வேலியிருந்து 30 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. தை அமாவாசை முதல் இங்கு வர ஆரம்பிக்கும் பறவைகள் ஆடி அமாவாசையில் திரும்பிச் செல் கின்றன என்கின்றனர் அப்பகுதி மக்கள். பறவைகள் இங்கு வரும் காலத்தில் ஊருக் குள் எந்த விழாவானாலும் வாணவேடிக்கை, ஒலிப்பெருக்கி போன்றவற்றைத் தவிர்க்கின் றனர். ஆண்டுக்கு ஆண்டு இங்கு வரும் பறவைகளின் எண்ணிக்கை அதிகரித்துள்ள தால் மாணவர்கள், பறவை ஆர்வலர்கள் மற்றும் சுற்றுலாப் பயணிகளின் வருகையும் அதிகரித்துள்ளது. இப்போது பார்வையாளர் கள் கோபுரமும், தொலைநோக்கி வசதியும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. வெகேஷனுக்கு ஏத்த லொகேஷன் கிடைச்சாச்சு... ஜாலியா ஒரு ரவுண்டு போய்ட்டு வரலாம் ஏப்ரல், மேயில!

## "என் மனைவியை மறுபடி பார்த்தமாதிரி இருந்தது"

''போன வருஷம் என் மனைவி இறந்துட்டா. அவ வளர்த்த பறவை ஒண்ணு இந்த வருஷம் சீஸனில் வந்தபோது என் மனைவியைத் தேடிப் பறந்து திரிந்தது. அதைப் பார்க்கும்போது என் மனைவியை மறுபடி பார்த்த மாதிரி இருந்தது'' என்கிறார் நெகிழ்ச்சியுடன் பால்பாண்டி.

மரங்களின் கிளைகள் முறிந்து விழுவதால் குஞ்சுகள் பெருமளவு பாதிக்கப்படுகின்றன என்று, வனத்துறை அனுமதியோடு இவர் ஏராளமான மரக்கன்றுகளை நட்டுள்ளார். அந்த இடமே பசுமை போர்த்திக் காணப்படுவதில் பால்பாண்டியின் பங்கும் உள்ளது. என்றாலும் அவர் வாழ்க்கை இன்னும் வறுமைக் கோட்டுக்குக் கீழேதான். 41 வருடங்களுக்கு முன் வாழ்ந்த அதே குடிசையில்தான் இன்றும் வாழ்கிறார். வனத்துறையால் வழங்கப்பட்ட இடைக்காலப் பணியையும் இழந்த நிலையிலும், ''என் மூச்சுள்ள வரை பறவைகளைக் காப்பதே என் பணி'' என்கிறார் 'தன் கைச்சிறகாற் பார்ப்பொடுக்கும்' புள்ளினத்தின் மனத்துடன்.

- நாஞ்சில் ஏ.சினிலோக்



# திரு திரு துறு துறு



வெகுநாள் கழித்து ரொம்ப ஜாலியான படம். டைட்டிலைப் பார்த்ததும் காமெடி படம் என்று ஊகித்து விடலாம். காமெடி தனியாகத் துருத்திக்கொண்டு இருக்காமல் கதையுடன் இயைந்து இயல்பாய் வெளிப்பட்டிருப்பது தனிச் சிறப்பு. பரபரவென்ற திரைக்கதை, சிறு சிறு கவிதைகளாகக் காட்சிகள், மிகையில்லாத இயல்பான நடிப்பு என்று ஸ்கோர் செய்கிறது படம்.

கதையின் ஒன் லைன் அஜ்மல் பொறுப்பற்ற பேச்சிலர். ரூபா மஞ்சரி மிஸ் பர்ஃபெக்ட். விளம்பர கம்பெனியொன்றில் இருவரும் ஒன்றாக வேலை செய்கிறார்கள். சமயம் கிடைக்கும்போதெல்லாம் ஒருவரை மற்றவர் வாரி விட்டுக் கொண்டும் திட்டிக் கொண்டும் இருக்கிறார்கள். மௌலி கம்பெனி ஓனர். அவர் மறதி மன்னர். குழந்தைகள் இல்லாததால் அஜ்மல் வளர்ப்பு பிள்ளை போல அவர்கள் வீட்டில் வளைய வருகிறான். ஆனால் அவனுடைய பொறுப்பற்ற செயல்களால் கார்ப்பரேட் கம்பெனியின் ஆர்டரொன்று கைநழுவிப் போகிறது. எப்படியாவது ப்ராஜக்டைத் தக்க வைக்க இருவரும் களம் இறங்குகிறார்கள். குழந்தைகளுக்கான ப்ராண்ட் விளம்பரத்தில் நடிக்க வேண்டிய குழந்தைக்கு உடல்நலம் சரியாக இல்லாததால் கடைசி நிமிடத்தில் குழந்தை தேட ஆரம்பிக்கிறார்கள். குழந்தையொன்றைப் பார்த்ததும் அஜ்மலுக்குப் பிடித்து விடவே அனுமதி கேட்க தாயிடம் நடுரோட்டில் பேசிக் கொண்டிருக்கும் போது ஆட்டோ மோதி அவள் அடிபட்டு விழுகிறாள். அதன் பின் நடக்கும் சம்பவங்கள் எல்லாம் ஏக கலாட்டா.

மிகவும் இயல்பான ஸ்லாப்ஸ்டிக் காமெடி படம் முழுக்க அள்ளித் தெளித்திருக்கிறார்கள்.

**டிட் பிட்ஸ்:** *ஒளிப்பதிவாளர் கதிர். தமிழில் வந்திருக்கும் மூன்றாவது செட் ஒன் டிஜிட்டல் படம்.*

*இசையமைப்பாளர் மணி சர்மாவின் பாடல்கள் ஓகே.*

*கதை, திரைக்கதை, வசனம், எழுதி இயக்கி இருக்கும் ஜே.எஸ்.நந்தினிக்கு முதல் படம். நீட்டாகத் தந்திருக்கிறார். திரைக்கதையில் திமிர் திருப்பங்கள், திரு திரு*



*துறு துறு நிச்சயமாய் விறு விறு அல்லவு ஸ்பீடு.*

*வெகு சில இடங்களில் திரைக் கதை தொய்ந்திருந்தாலும் பின்னால் வரும் சில காட்சிகள் அதைச் சரி செய்து விடுகின்றன.*

*படத்தில் நடித்திருக்கும் குழந்தை கொள்ளை அழகு. திருஷ்டி சுத்திப் போடுங்கள் . திரு திரு துறு..துறு...' காமெடி வைறக்கு!*

– உமா

● பா.அசோக், விருதுநகர்

*? கேரள ஹைகோர்ட்டில் பணியாற்றும் அனைத்து நீதிபதிகளும் தங்களது சொத்து விவரங்களை இணைய தளத்தில் வெளியிட்டுள்ளது எதை உணர்த்துகிறது?*

! நீதிபதிகளால் நல்ல மரபுகளை உருவாக்க முடியும் என்பதையும் 'இது தகவல் அறியும் உரிமைக்குள் அடங்காது' என்று உச்சநீதிமன்றம் சார்பில் மேல்மனு தாக்கல் செய்வது தர்மமல்ல என்பதையும் ஒருங்கே உணர்த்துகிறது.

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு

*? புவி வெப்பமாதலுக்கு இந்தியாவும் ஒரு காரணம் என அமெரிக்கா நம் மீது தொடர்ந்து குற்றம் சாட்டி வருகிறதே?*

! உலக நாடுகள் அனைத்துமே காரணம்; அதில் இந்தியாவும் ஒரு காரணம். அமெரிக்காவும் காரணம் என்பதை ஒபாமா ஒப்புக்கொள்கிறார். இந்தியாவின் ஒத்துழைப்பைக் கோருகிறார். குற்றச்சாட்டு அல்ல.

# முதல்வருக்கு 100; மு.க.அழகிரிக்கு 51 - இவையெல்லாம் என்ன?

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

*? இலங்கை அகதிகள் தமிழகத்தில் குடியுரிமை பெற மத்திய அரசு வழிவகுக்க வேண்டும் என்று தமிழக முதல்வர் வேண்டுகோள் விடுத்திருப்பது பற்றி...?*

! மிகத் தவறான அணுகுமுறை என்பதை ரொம்பச் சரியாக எடுத்துக் காட்டியிருக்கிறார் பண்ருட்டியார். அவர்கள் இலங்கை திரும்பி அங்கு பாதுகாப்புடன் வாழ உரிமை கோருவதுதான் சரி. கருணாநிதியின் கோரிக்கை, இலங்கையில் தமிழர் நலனுக்கு எதிரான போக்குக்கே வலிமை சேர்க்கும்.









● பி.என்.விஜய்சங்கர், திருவாரூர்

? ஒரு தகராறை மௌனத்தினால் அமைதிப் படுத்த முடியுமா? பேசித் தீர்க்க முயல்வதனால் அமைதி ஏற்படுத்த முடியுமா?

* இனிமைக்கு என்பது!



# நீங்கள் கேட்டவை - தராசு

! பேச்சினால் விளைந்த தகராறை, தக்க தருணத்திலான மௌனம் கொண்டு தீர்க்கலாம். பேசித் தீர்க்கத் தவறிய பிரச்னைகளை, அமைதி காப்பதன் மூலம் தீர்க்க முடியாது.

● ஆர்.வானுமாமலைப்பெருமாள், தனக்கர்குளம்

? என்னால் எழுதாமல் இருக்க முடியவில்லை. எழுதுவதே வீண் வேலை என்று சிலர் என்னைக் கிண்டல் செய்வது புண்படுத்துகிறதே?

! யார் கிண்டல் செய்தால் என்ன? நீங்க பாட்டுக்கு எழுதிக்கிட்டிருங்க! உங்களுக்கு நீங்களே விருதுகூட கொடுத்துக் கொள்ளலாம்!

● கே.தெய்வசிகாமணி, சென்னை - 82

? குறைந்த பட்ஜெட்டில் தயாரிக்கப்படும் தமிழ் சினிமாவுக்கு, தமிழக அரசு தருகிற ஏழு லட்சம் ரூபாய் மானியத்தை, பத்து லட்சமாக உயர்த்த வேண்டும் என்று பட அதிபர்கள் கேட்கிறார்களே?

! பத்து லட்சம் கொடுத்தால், ஓரிரு ஆண்டுகளிலேயே பதினைந்து லட்சமாக உயர்த்தச் சொல்லி கோரிக்கை எழும். எதற்குத்தான் மானியம் வழங்குவது என்று ஒரு வகை - தொகையே இல்லாமல் போய் விட்டது. The prime duty of a government is to govern என்கிற அடிப்படையே மறக்கப் பட்டு வருகிறது.

● சி. பூங்கோதை, சென்னை - 78

? ''இதுவரை ஏழரை சனியின் பிடியில் இருந்தேன்; அதனால் அ.தி.மு.க.வில் சேர்ந்தேன். தற்போது அது விலகிவிட்டது. ஆகவே தி.மு.க.வில் இணைந்துள்ளேன்'' என்கிறாரே எஸ்.வி.சேகர்!

! தி.மு.க.வில் சேர்ந்தும்கூட மூடநம்பிக்கையின் பிடியில்தான் இருக்கிறார்.

● கே.என்.சுப்பிரமணியன், சென்னை - 15 ★

? அண்ணா நூற்றாண்டு விழாவில் முதல்வருக்கு நூறு



* அதிசய அகராதி!



* மாறாத மூடநம்பிக்கை



* சட்டும் தவறு

*சவரன் தங்க நாணயம்; மு.க.அழகிரிக்கு 51 சவரன் தங்கச் சங்கிலி... இவையெல்லாம் என்ன?*

! ஜனநாயகம் பணநாயகமாக மாறிவிட்டதன் மற்றொரு அடையாளம். அரசியல் கட்சிகளுக்கு ஆடிட் தணிக்கையும் வருமான வரியும் தேவை என்பதை உணர்த்தும் மற்றொரு நிகழ்வு.

● பாலு, சிவகாசி

*? எண்பது வயது நிறையப்பெற்ற லதா மங்கேஷ்கர் பற்றி?*

! ஹிந்தி திரையிசையின் இனிமைக்கும் ஆழத்துக்கும் விஸ்தீரணத்துக்குமான மைல் கல்.

● பி.ஜெயபிரகாஷ், சர்க்கார்பதி

*? ''ஆணுக்குப் பெண் அடிமை; உயர் ஜாதிக்கு தாழ்த்தப்பட்ட ஜாதி அடிமை; சமஸ்கிருதத்துக்குத் தமிழ் அடிமை என்கிற நிலைமை இருந்தது. இந்த நிலைமை வேருடன் அழிந்ததற்கு தி.மு.க. ஆட்சிதான் காரணம்,'' என்று அமைச்சர் பொன்முடி பெருமிதப்பட்டுள்ளாரே?*

! அடுத்த கேள்வியைப் படியுங்க; தி.மு.க. இப்போ எதுக்கு அடிமை, அதன் தொண்டர்கள் யாருக்கு அடிமைன்னு புரியும்!

● ஆர். ராஜதுரை, சீர்காழி

*? கரூரில் முருகன் படத்தோடு மு.க.ஸ்டாலின் படத்தையும் இணைத்து 'தமிழ்க் கடவுளே!' என்றும், வள்ளுவர் படத்தை இணைத்து 'இளம் வள்ளுவரே' என்றும் பேனர்கள் வைக்கப்பட்டுள்ளனவே?*

● ஆர். அஜிதா, கம்பம்

*? குவாட்ரோச்சி பேரிலான வழக்கை வாபஸ் வாங்குவதாக உச்சநீதிமன்றத்தில் மத்திய அரசு தெரிவித்திருக்கிறதே?*

! அதுக்கு சி.பி.ஐ. அஞ்சு காரணங்களை வரிசைப்படுத்தியிருக்கு பாருங்க... அடா அடா! கையாலாகாத்தனத்தின் அகராதி அவை!

● எஸ்.விஜயலட்சுமி, ஸ்ரீவில்லிபுத்தூர் ❐

*? சட்டம் தன் கடமையைச் செய்யும் என்று நமது முதல்வர் அடிக்கடி சொல்கிறாரே. சட்டத்தின் கடமைதான் என்ன?*

! என்ன குழப்பம் உங்களுக்கு இதில்? சட்டக் கல்லூரி மாணவர்களிடையே மோதல்; விசாரணைக் கைதிகள் மரணம்; என்கௌண்டர் சாவுகள்; காவல்துறையில் ஆளுங்கட்சித் தலையீடு; குற்றவாளிகளுக்கு அண்ணா பெயரால் விடுதலை; பெருகி வரும் லஞ்ச-லாவண்யம் - இன்றைய சூழலில் இவையெல்லாம்தான் சட்டத்தின் கடமைகள்!

❐ ரூ.150/- பரிசு பெறுபவர்:
எஸ்.விஜயலட்சுமி, ஸ்ரீவில்லிபுத்தூர்

★ ரூ.75/- பரிசு பெறுபவர்:
கே.என். சுப்பிரமணியன், சென்னை - 15

# கக்கன்ஜி நூற்றாண்டு

''1980. முதலமைச்சர் எம்.ஜி.ஆர். மதுரைக்கு வந்திருந்தார். தமது கட்சியைச் சேர்ந்தவரும் முன்னாள் மதுரை மேயருமான மதுரை முத்து உடல்நலமில்லாமல் மதுரை அரசு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டிருப்பதாகத் தகவல் அறிந்ததும், அவரை நலம் விசாரிக்க மருத்துவமனைக்குச் சென்றார். முத்துவைச் சந்தித்துவிட்டு புறப்படுகிறபோது, உடன் வந்தவர்கள் அதே மருத்துவமனையில் முன்னாள் காங்கிரஸ் அமைச்சரான கக்கன் உடல்நலமில்லாமல் சேர்க்கப்பட்டிருக்கிறார் என்று தகவல் சொன்னார்கள். 'கக்கன் எங்கே இருக்கிறார்? அவரை நான் உடனடியாகப் பார்க்க



* கக்கன்

## எளிமையே

வேண்டும்?' என்று எம்.ஜி.ஆர் சொல்ல, உடனே ஒரே பரபரப்பு. காரணம், மருத்துவமனையின் ஜெனரல் வார்டில் கட்டில்கூட இல்லாமல் ஒரு மூலையில் பாயைப் போட்டு அதில் படுக்க வைக்கப்பட்டிருந்தார் கக்கன்.

பொது வார்டுக்கு வந்த எம்.ஜி.ஆர்., கக்கன்ஜியைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தார். உடல்நலம் விசாரித்தவுடன், 'உங்களுக்கு நான் என்ன உதவி செய்யணும்? என்ன வேண்டுமென்றாலும் தயங்காமல் கேளுங்க!' என்று எம்.ஜி.ஆர். உணர்ச்சி பொங்கக் கேட்டார். 'நீங்க வந்து என்னைப் பார்த்ததே போதும்; உங்க அன்பைவிடப் பெரிசு எதுவுமில்லை' என்று நெகிழ்ச்சியுடன் கூறினார் கக்கன். எம்.ஜி.ஆர் உத்தரவின் பேரில் கக்கன்ஜி உடனடியாக ஸ்பெஷல் வார்டுக்கு மாற்றப்பட்டார். 'இவருக்குண்டான மருத்துவச் செலவு பில்லை எனக்கு அனுப்பி வையுங்கள்' என்று எம்.ஜி.ஆர். சொல்லிவிட்டு விடைபெற்றார். அன்றைக்கு அண்ணனுடைய சிகிச்சைக்கான மூவாயிரத்துச் சொச்சம் ரூபாயை எம்.ஜி.ஆர். தம்முடைய சொந்தப் பணத்திலிருந்து செலுத்தினார்'' என்று தமது மூத்த சகோதரர் கக்கன்ஜி பற்றி நினைவு கூர்கிறார் விஸ்வநாதன் கக்கன்.

1967ல் ஒரு நாள், சென்னை மாநகர பஸ் நிறுத்தத்தில் மக்களோடு மக்களாக நின்று கொண்டிருந்தார் கக்கன்ஜி. உடன் இருந்த பொதுமக்களுக்கு, 'அட! மந்திரியாக இருந்த கக்கன்தானே இவர்!' என்று ஒரே ஆச்சரியம். பஸ் வந்தவுடன், மற்ற பயணிகளுடன் சேர்ந்து இவரும் பஸ்ஸில் ஏறிக்கொண்டார், காமராஜர் மற்றும் பக்தவத்சலம் தமிழக முதலமைச்சர்களாக இருந்த காலத்தில் அவர்களின் அமைச்சரவைகளில் இடம்பெற்றிருந்தவர் கக்கன்ஜி. காங்கிரஸ் ஆட்சி இழந்த மூன்றாவது

நாள் நடந்த சம்பவம் இது. ஐந்தாண்டுகள் நாடாளு மன்ற உறுப்பினராகவும், அதனைத் தொடர்ந்து பத் தாண்டுகள் தமிழக அமைச்சராகவும் இருந்தவர் கக் கன்ஜி. தம்முடைய பதவிக்காலம் முடிந்த பிறகு சொந்தமாகக் கார் வைத்துக் கொள்ளும் அளவுக்கு தம்முடைய வசதியை அவர் பெருக்கிக் கொள்ள வில்லை என்பதை, சாதாரண வார்டு கவுன்சிலர்கள் கூட ஸ்கார்பியோ காரில் போகும் இன்றைய கால கட்டத்தில் நம்புவது ரொம்ப கஷ்டம்தான்.




**க**க்கனை மரியாதையுடன் 'ஜி' சேர்த்து முதலில் குறிப்பிட்டவர் ஜவஹர்லால் நேருதான். ஆவடி காங் கிரஸ் மாநாடு நடந்த சமயம், நேருஜி உரையாற்றிய போது, மேடையில் அமர்ந்திருந்த காங்கிரஸ் பிரமுகர் களின் பெயரைக் குறிப்பிட்டபோது, கக்கன்ஜி என்று அழைத்தார்.

ஆதி திராவிட இனத்தைச் சேர்ந்தவரான கக் கன்ஜிக்கு மதுரை மாவட்டம் மேலூர் அருகில் உள்ள தும்பைப்பட்டிதான் சொந்த ஊர். அவருடைய அப்பா மேலூரில் இருந்த வீரமாகாளி அம்மன் கோயில் பூசாரியாக இருந்தார். மேலூர் தொடக்கப் பள்ளியிலும் அதனையடுத்து திருமங்கலம் உயர்நிலைப் பள்ளி யிலும் படித்தார் கக்கன். இடையில் சிறிது காலம், குடும்பச் சூழ்நிலை காரணமாகப் படிப்பை நிறுத்தி விட்டு, குயவர் ஒருவர் வீட்டில் வேலை பார்த்தார். பின்னர் பசுமலை அரசு ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்து பயிற்சி பெற்றார். சேரிப் பகுதிகளில் இரவு நேரங்களில் பாடம் சொல்லிக் கொடுத்து, அவர் களைத் தேர்ச்சி அடையச் செய்வதைத் தமது கடமை யாக நினைத்து, ஆர்வத்துடன் செய்துவந்தார்.

**ம**துரை காந்தி என்று மரியாதையுடன் குறிப் பிடப்பட்டவர், காந்தியக் கொள்கைகளில் குறிப்பாக காந்திஜியின் ஹரிஜன சேவையில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தவர் மதுரை வைத்யநாத அய்யர். அவர் கக்கனின் தேசப்பற்றையும், ஹரிஜன சேவையையும் பற்றி அறிந்து வெகுவாகப் பாராட்டினார். அவர் மூலமாக காமராஜர், காந்திஜி ஆகியோரது அறிமுகம் கக்கனுக்குக் கிடைத் தது. மேலூர் வட்ட காங்கிரஸ் தலைவரானார் கக்கன்ஜி.

மதுரை மாவட்டம் முழு வதும் பல மாணவர், மாண வியர் விடுதிகளை ஏற்படுத்தி கல்விக்கண் திறக்கப் பாடுபட்டு வந்தார். மேலூரில் இருந்த மாண வர்கள் விடுதி, மாணவிகள் விடுதி இரண்டுக்கும் காப்பாள ராக இருந்தார் கக்கன்ஜி.

## ...செல்வம்; கடமையே தெய்வம்!

**வெ**ள்ளையனே வெளி யேறு (1942) போராட்டத்தில் கலந்து கொண்ட நேரத்தில் சில மாதங்கள் தலைமறைவு வாழ்க் கையை மேற்கொண்ட கக் கன்ஜி, போலீசாரால் கைது செய்யப்பட்டு மேலூர் காவல் நிலையத்தில் வைக்கப்பட்டார். மற்ற போராளிகள் எங்கே தலை மறைவாக இருக்கிறார்கள் என்று சொல்லும்படி மேஜை மீது கக் கனைப் படுக்க வைத்துக் கட்டி, கசையடி கொடுத்து போலீஸ்

**எஸ்.சந்திரமௌலி**

விசாரித்தது. ஒவ்வொரு கசையடியின் போதும், மற்ற காங்கிரஸ்காரர்கள் பற்றி எதையும் சொல்லாமல், 'காந்திஜி வாழ்க! காமராஜர் வாழ்க!' என்றே அவர் சொன்னது, போலீஸ்காரர்களுக்குக் கோபமூட்டியது. கக்கனின் மனைவியையும், குழந்தைகளையும் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துக் கொண்டுவந்து நிறுத்தி, அவர்கள் முன்னால் கக்கனுக்குக் கசையடி கொடுத்தது போலீஸ். பிறகு, ஆந்திராவில் உள்ள அலிபூர் சிறைக்குக் கொண்டு செல்லப்பட்டார் கக்கன்ஜி.

ஒருமுறை இந்தியாவுக்கு வருகை தந்த மலேசிய விவசாய அமைச்சர், மரியாதை நிமித்தமாக கக்கன்ஜியைச் சந்தித்து, 'உங்களின் உபயோகத்துக்காக இந்தப் பேனாவைப் பரிசளிக்கிறேன்; நீங்கள் இதைப் பயன்படுத்த வேண்டும் என்பதுதான் என் விருப்பம்' என்று ஒரு தங்கப் பேனாவை அளிக்க, அதற்கு கக்கன்ஜி, 'மன்னிக்கவும், நான் அமைச்சராக இருக்கும்வரை, எனக்குத் தரப்படும் எல்லா பரிசுகளும் அரசாங்கத்துக்கே போய்ச் சேர வேண்டும்' என்று சொல்லி, அந்தப் பேனாவை மலேசிய அமைச்சரிடமே திருப்பிக் கொடுத்து விட்டார்!



“மன்னிக்கவும், நான் அமைச்சராக இருக்கும்வரை, எனக்குத் தரப்படும் எல்லா பரிசுகளும் அரசாங்கத்துக்கே போய்ச்சேர வேண்டும்”

கக்கனுக்குப் பூர்வீகச் சொத்தாக இருந்தது தும்பைப்பட்டியில் 40 சென்ட் நிலம் மட்டுமே. அதையும், வினோபாஜியின் பூதான இயக்கத்துக்கு தானமாக அளித்துவிட்டார். சொந்த ஊரில் அவருக்கு ஒரு குடிசை வீடு இருந்தது. அது பின்னாளில் ஓடு வேய்ந்த வீடானது. சென்னையில் கடைசிவரை அவர் வசிக்க சொந்த வீடு இல்லை. சென்னை ராயப்பேட்டையில் ஒரு வாடகை வீட்டில்தான் அவர் குடியிருந்தார்.

சுதந்திரத்துக்குப் பிறகு நடந்த முதல் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியின் சார்பில் மதுரை நாடாளுமன்றத் தொகுதியில் போட்டியிட்டு ஜெயித்தார். காமராஜரது மந்திரிசபையில் இடம்பெற்று, பொதுப்பணித்துறை, ஹரிஜன நலத்துறைகளுக்குப் பொறுப்பு வகித்தார். அடுத்த சட்டமன்றத் தேர்தலில், மேலூர் தனித் தொகுதியிலிருந்து வென்ற கக்கன்ஜியை, போலீஸ் துறை அமைச்சராக நியமித்தார் காமராஜ். விவசாயத்துறையையும் சில காலம் இவர் கவனித்துக் கொண்டார்.

கக்கன்ஜி வெள்ளையனே வெளியேறு போராட்டத்தில் ஈடுபட்டபோது அவரைக் கைது செய்து கசையடி கொடுத்த போலீஸ் அதிகாரி, பின்னாளில் கக்கன் போலீஸ் துறையின் அமைச்சரான போது வாழ்த்து சொல்ல வந்தார். தாம் செய்த செயலுக்குக் கண்ணீர் மல்க வருத்தம் தெரிவித்து, கக்கனின் காலில் விழ அவர் முயன்றபோது, கக்கன்ஜி அவரைத் தட்டிக் கொடுத்து, தழுவிக் கொண்டு சொன்ன வார்த்தைகள்: 'உன் கடமையை நீ செய்தாய்!' ○

இனிய தீபாவளி நல் வாழ்த்துக்கள் !

# இளமையிலேயே தலையில் வழுக்கை !

# அதனால் உங்கள் இமேஜ் பாதிக்கப் பட்டுள்ளதா ?

எங்களிடம் வாருங்கள். உங்கள் வழுக்கைத் தலைத் தோற்றத்தை
மூன்றே மணி நேரத்தில் மாற்றி மன நிறைவுடன் செல்லுங்கள்.

**Hair Weaving , Hair Bonding & Silicon System Treatments are done here**



சிகிச்சைக்கு முன்

## சிறப்பம்சங்கள்

- வித்தியாசமான முறை
- அறுவை சிகிச்சை கிடையாது
- பக்க விளைவுகள் அற்றது
- இது விக்கும் அல்ல
- ஷாம்பு போட்டு குளிக்கலாம்
- வாகனங்கள் ஓட்டலாம்
- நீச்சலும் அடிக்கலாம்
- நீங்கள் விரும்பும் ஹேர் ஸ்டைலில் தலை வாரலாம்



தீபாவளி
சிறப்பு சலுகை
**50% Off**



**FAIR & HAIR**

**HEALTH & BEAAUTY CURE**

**கிளைகள் :**

* 128 - A, வடக்கு மாரட் வீதி, ஆஞ்சநேயர் கோவில் எதிர்புறம், சிம்மக்கல், யானைக்கல், மதுரை - 625001.
☎ 0452 - 2620567 / 2628383, செல் : 94433 - 38382.

* எண். 4/6, ஆசீர்வாதம் தெரு, ( டி.வி. பாயிண்ட் அருகில் ) முருகன் குறிச்சி, பாளையங்கோட்டை, திருநெல்வேலி - 627002.
☎ 0462 - 2562226, செல் : 94426 - 38385.

* 869, காந்திபுரம் 2 -வது தெரு விஸ்தரிப்பு, ஊட்டி ஹவுஸ் அருகில், லெக்ஷ்மண் நகர், கோயமுத்தூர் - 641012
☎ 0422 - 2525078 / 2525079, செல் : 98429 - 38381.

**Head Office :**

51, சாலை ரோடு, யூகோ பாங்க் அருகில்,
உறையூர், திருச்சி - 620003.
☎ 0431 - 2768497 / 2760545,
செல் : 98424 - 38381 , 94431 - 38381.



சிகிச்சைக்கு பின்







**ஆஸ்திரேலியா, யு.எஸ்.ஏ., யு.கே. போன்றவற்றுக்கு இணையானக் கல்வியை சிங்கப்பூர் சிறப்பாகவே கொடுத்துவருகிறது என்பது எத்தனைப் பேருக்கு தெரியும்?'' என்கிறார் ''ஃபாரின் ஸ்டடிஸ் பீரோ'' என்னும் நிறுவனத்தை எட்டு வருடங்களாக வெற்றிகரமாக நடத்திவரும் சுகுமாரன். பிரபல நகைக்கடைகளுள் ஒன்றான ஸ்வர்ணாலயா ஜீவல்லரியின் நிறுவனரும் இவர்தான்.சிங்கப்பூர் கல்வியைப் பற்றிய தெளிவான விளக்கம் உங்களுக்காக...**

★ ஆங்கில மொழி வழி கல்வியும், அறுபது சதவிகித மதிப்பெண்ணும், பெற்றிருக்க வேண்டும்.

★ நான்கு மாதத்துக்கு ஒருமுறை அட்மிஷன் நடைபெறுவதால் அடுத்த வருடம் வரை காத்திருக்க வேண்டிய அவசியமில்லை.

★ நூற்று முப்பதுக்கும் மேற்பட்ட நாடுகளிலிருந்து மாணவர்கள் படிக்க வருகிறார்கள்.



★ IELTS மற்றும் TOEFL நிபந்தனைகளும் இல்லை.

★ யூனிவர்சிட்டி ஆஃப் வேல்ஸ், சதர்ன் குயின்ஸ் லேண்ட்-ஆர்.எம்.ஐ.டி. போன்ற உலகளவில் இருக்கும் 50க்கும் மேற்பட்ட யூனிவர்சிட்டிகளின் டிகிரி வழங்கப்படுகிறது.

★ மற்ற நாடுகளை ஒப்பிடும்போது சிங்கப்பூரில் ஆகும் செலவு நாற்பது சதவிகிதம் குறைவு. சிக்கனமாக செலவு செய்தால் உணவு, தங்கும் செலவு என்று மாதம் ரூபாய் பத்திலிருந்து பதினைந்தாயிரம் வரைதான் ஆகும்.

# சிங்கப்பூர் தரும் சிறந்தக் கல்வி!

***''நகைக்கடைக்கும், கல்வி நிறுவனத்துக்கும் எப்படி?'' என்று கேட்டால்*** ''நான் முன்னாள் பேராசிரியர். சூழ்நிலை, ஆசிரியராக இருந்த என்னை தொழிலதிபராக்கிவிட்டது. மேற்படிப்புக்காக என் மகன் சிங்கப்பூர் சென்றதும்தான் முழு விபரங்களை அறிந்து கொண்டு இந்த நிறுவனத்தை தொடங்கினேன். மேற்படிப்பு படிக்க வேண்டும் என்று வரும் மாணவர்களுக்கு விசா, அப்ளிகேஷன், டாக்குமெண்ட் லிஸ்ட், லோன், ட்ராவல், விமான டிக்கெட் வரை இலவச ஆலோசனை (Free counselling) தரப்படுகிறது. இதுவரை அறுநூறு மாணவர்களை அனுப்பியிருக்கிறேன். அத்தனைப்பேரும் இன்று நல்லவேலையில் இருக்கிறார்கள். தொழிலுக்கு ஸ்வர்ணாலயா. தொண்டுக்கும் திருப்திக்கும் ஃபாரின் ஸ்டடிஸ் பீரோ நிறுவனம். அதற்கு என் குடும்பத்தோட ஒத்துழைப்பும் உண்டு'' என்று வார்த்தைகளும் எண்ணங்களும் தெளிவாகவே இருக்கின்றன அன்பார்ந்த நல்ல பேராசிரியரிடம்.

மேலும் விவரங்களுக்கு :

**ஃபாரின் ஸ்டடிஸ் பீரோ, C/o. ஸ்வர்ணாலயா ஜுவல்லரி,**
**5, வெங்கட்நாராயணா சாலை, தி.நகர், சென்னை-17.**
**ஃபோன் : 2435 8388, 4212 5353, செல் : 93810 20107**
**email : foreignstudies@gmail.com website : www.foreignstudies.in**



# ப்ரேக்!

**சிவாஜியில் ரஜினிக்கு டஃப் கொடுத்ததற்காக நடிகர் சுமனுக்கு சிறந்த வில்லன் நடிகருக்கான தமிழக அரசின் விருது கிடைத்துள்ளது. வில்லனான சுமனுக்கு ஆந்திராவின் ஹீரோ முகம். பூரிப்பில் இருந்தவரோடு ஒரு சிக்கன சந்திப்பு...**

***நீங்க ஆந்திராகாரர்தானே?***

''ஸார், நான் பச்சையப்பன் கல்லூரியில் படிச்ச பச்சைத் தமிழன்!''

***ஆனா உங்க முதல் படம் 'தெலுங்கு'தானே?***

''அதுவும் தமிழ்தாங்க. படம் - 'நீச்சல் குளம்.''

***அப்புறம் ஏங்க தெலுங்குக்குப் போனீங்க?***

''என் ஃப்ரண்ட் பானு சந்தர்தான் என்னைத் தெலுங்குக்குக் கூட்டிட்டுப் போனார். நான் நடிச்சு வெளிவந்த முதல் தெலுங்கு படம் தரங்கிணி சூப்பர் டூப்பர் ஹிட். அதனால் அங்கேயே தங்க வேண்டியதாப் போச்சு!''

***தெலுங்கா... தமிழா...?***

''என்னதான் தெலுங்குல பிஸியா இருந்தாலும், தமிழ்ல நடிக்கும்போது மனசுக்கு நிறைவா இருக்கு. காரணம் தாய் மண்.''

***சிவாஜி?***

''இன்டர்நேஷனல் அளவுக்கு என்னைத் தூக்கிக்கிட்டுப் பறந்த படம், ஒரு பிரேக் கொடுத்த படம் சிவாஜி. 30 வருஷமா கிடைக்காத பாப்புலாரிட்டி அந்தப் படத்துல நடிச்ச பிறகு கிடைச்சிருக்கு. காரணம், ரஜினி சாரும், ஷங்கரும்தான்.''

***விருது எதிர்பார்த்தீங்களா?***

''பாராட்டுதான் எதிர்பார்த்தேன். விருது கொடுத்து என்னை 'தமிழ்' மகிழ வைச்சிருக்கு!''

***எதிர்காலத் திட்டம்?***

''இப்போ அரசியலை உன்னிப்பா கவனிச்சுக்கிட்டு இருக்கேன். எனக்கான நேரம் வரும்போது அரசியல் பிரவேசம் இருக்கும்!'' **- விஜயன்**




**நா**ன் சாதுர்யா பேசறேன். இப்போ நான் ஷேடோ ஸ்குவாட் இன்ஸ்பெக்டர் சாதுர்யா. கடந்த வாரம் வரைக்கும் வந்த பதினாலு வழக்குகளை திறமையா துப்பறிந்ததனால காவல் துறை என்னைப் பணி நிரந்தரம் செய்துள்ளது. அந்த கடைசி கேஸை எப்படி முடிச்சேன்னு சொல்றேன். பூர்ணிமாவின் சிநேகிதி வைதேகி கொண்டு வந்து கொடுத்த இதழ்களின் பின் அட்டையில் நீலாங்கரை கடையின் ரப்பர் ஸ்டேம்ப் முத்திரைகள் காணப்பட்டன. இந்த ஒரு உண்மை போதாதா; வினோத்திடம் இருந்து மற்ற எல்லா உண்மைகளையும் வரவழைக்க. சரியான விடைகளை யூகித்து எழுதிய வாசகர்கள் விவரம் வட்டமேஜை பக்கத்தில்.




# கல்கி தியேட்டர் காம்ப்ளெக்ஸ்

✉ மதுமிதாவின் 'மிட்டாயி', குழந்தைப் பருவ நினைவுகளைக் கிளறிவிட்டது.

**- ச.ஸ்ரீதர வித்யா சங்கர், சென்னை - 28.**

✉ ஆறு கேள்விகளும் நச்; அதற்குப் பிரபலங்கள் அளித்திருந்த பதில்களும் 'பளிச்'. இதில் தே.மு.தி.க. விஜயகாந்தைக் காணோமே?

**- சு.ஸ்ரீகாந்த், நெய்வேலி - 3**

✉ ஆவியாக இருந்தாலும் தனது புத்தகத்தை இளைஞன் படித்ததும் அதற்கு ஏற்படும் அலாதி ஆனந்தத்தை, கொற்றவன் அழகாக விவரித்து இருக்கிறார், 'புத்தம் புதிய புத்தகமே' கதையில்.

**- ஜே.துரைராஜ், சென்னை**

✉ வித்தியாசமான கொள்கைகளைக் கொண்ட தமிழருவி மணியனின் இயக்கம் அனுபவத்தாலும், ஆற்றலாலும், தன்னோடு இணைந்து கொள்வோரின் துணையோடும், சமூகக் களைகளைக் களைந்தெறியட்டும்.

**- மலை அரசன், அருகந்தம்பூண்டி**

✉ பாண்டுரங்க விட்டலனை, 'சற்றே விலகி இரும் பிள்ளாய்' என்று சொல்லி விட்டு, ஸ்ரீலலிதா விஜயமா? மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம்!

**- பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு**

✉ இரண்டு பட விமர்சனம், மூன்று புதுப்பட டிரெய்லர்... என்று ஒரே இதழில் வாசித்தபோது, தியேட்டர் காம்ப்ளெக்ஸில் ஒருநாள் முழுக்க படம் பார்த்த திருப்தி.

**- அ.யாழினி பர்வதம், சென்னை - 78**

✉ "சென்னை வரலாற்றை விளக்க, தமிழரின் பார்வையில் எழுதப்பட்ட புத்தகம் ஒன்றுகூட இல்லை!" என்ற குறையை ஸ்ரீராமே போக்கலாமே!

**- என். பாலகிருஷ்ணன், மதுரை**

அட்டையில்: **நிஷா**
படம்: **ஸ்ரீஹரி**

**துப்பறிய வாங்க போட்டி - 14 முடிவு**

சரியான விடையை எழுதியவர்களுள் குலுக்கல் மூலம் தலா ரூ.200/- பரிசு பெறுவோர்:

1. *ஸ்ரீதேவி ராஜன், திருவிடைமருதூர்*
2. *சி.கஸ்ரத், கும்மிடிப்பூண்டி*
3. *பி.கோவிந்தசாமி, ஊத்தங்கரை*
4. *சு.பழநி, தெங்கம்புதூர்*
5. *கே.எஸ்.கிருத்திகா, பெங்களூரு*

